# அழகப்பா பல்கலைக்கழகம்




தேசியத் தர நிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் A+(CGPA: 3.64) தகுதியும்
மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் - பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல் தரப்
பல்கலைக்கழகம் மற்றும் தன்னாட்சித் தகுதியும் பெற்றது)

காரைக்குடி - 630003

## தொலைநிலைக்கல்வி இயக்ககம்


## இளங்கலை இலக்கியம் - (பிலிட்.,)

## இரண்டாமாண்டு

## தாள்: 10743

## நான்காம் பருவம்

# நாட்டுப்புறவியல்

**எண். பாடத்திட்டம் - பொருளடக்கம்**

**கூறு 4. ஏட்டிலக்கியங்களுள் நாட்டுப்புற இலக்கியத் தாக்கம் - சங்க இலக்கியங்களில் நாட்டுப்புற இலக்கியக் கூறுகள்**

# இளங்கலை இலக்கியம் - (பிலிட்.,)

# தாள்: 10743 - நாட்டுப்புறவியல்

குறிப்பு

## கூறு 1.

## நாட்டுப்புற இலக்கியம் - விளக்கம்

### 1.1. முன்னுரை

நாட்டுப்புற இலக்கியத்தைப் படைப்பவர் நாட்டுப்புற மக்களே யாவர். எனவே இம்மக்கள் யாவர்? அவர்களது படைப்புகள் எத்தகு சூழலில், எத்தகு அமைப்பில் உருவாகின்றன என்பனவற்றை இப்பகுதியின் மூலம் தெரிந்து கொள்ளலாம்.

### 1.2. குறிக்கோள்கள்

- நாட்டுப்புற இலக்கியம் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- நாட்டுப்புற இலக்கியத்தின் விளக்கம் என்ன என்பது பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- நாட்டுப்புற இலக்கிய வகைகள் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.

### 1.3. நாட்டுப்புற இலக்கியம்

நாகரிகம் சென்றடையாத கிராமப்புறப் பகுதிகளையே நாட்டுப்புறம் என அழைக்கின்றோம். நாட்டுப்புறம் என்ற சொல் சிற்றூர், சிற்றூரைச் சூழ்ந்த இடத்தைக் குறிக்கும் சொல்லாகக் கொள்ளலாம். எழுதப்பெற்ற இலக்கியம் காலம் காட்டும் கண்ணாடி என்றால் நாட்டுப்புற இலக்கியம் சமுதாயத்தைக் காட்டும் கண்ணாடி எனலாம். நாட்டுப்புற இலக்கியம் கிராமப்புற மக்களின் அனுபவங்களை மட்டுமன்றி அவர்களது உணர்வுகளையும் பிரதிபலித்து நிற்கின்றது எனச் சங்கர்சென் குப்தா கூறுகிறார். நாட்டுப்புற மக்களால் பழக்கத்தில் பயின்று வழக்கத்தில் நிலைபெற்ற பாடல்கள், கதைகள், கதைப்பாடல்கள், பழமொழிகள், விடுகதைகள், புராணங்கள் என்பன நாட்டுப்புற இலக்கியங்களாகும். அதாவது கிராமப் பகுதியில் வாழும் படிப்பறிவில்லாத பாமர மக்களிடம் நிலவி வருகின்ற பாடல்களும் கதைகளும் புதிர்களும் முதலான

யாவற்றையும் நாட்டுப்புற இலக்கியம் என்று கூறலாம். இவையாவும் எழுத்து வடிவமற்றவை. வாய்மொழியாகப் பாடப்படுபவை வாய்மொழியாகவே பரவி வருபவை. எனவேதான் நாட்டுப்புற இலக்கியம் என்பதை வாய்மொழி இலக்கியம் என்றும் கூறுவர்.

குறிப்பு

மனித இன வரலாற்றில் மொழியின் தோற்றம் பற்றி அறுதியிட்டுக் கூற முடியாதது போன்று, மக்களின் இலக்கியமான நாட்டுப்புற இலக்கியத்தின் தோற்றம் பற்றியும் அறுதியிட்டுக் கூற இயலாது. மொழியின் தோற்றம் உருவான போதே மனித இனமும் தன் சிந்தனைத் திறனை வளர்க்க முற்பட்டபோதே வாய்மொழி இலக்கிய வகை கருக்கொண்டது எனலாம். உலகில் மொழியும் அடுத்து வாய்மொழி இலக்கியங்களும் அதனைத் தொடர்ந்து எழுதப்பட்ட இலக்கியங்களும் முகிழ்ந்தன எனக் கூறலாம்.

மனித இன வரலாற்றில் முதலில் முளைத்து இன்றளவும் வாழ்ந்து வருவதுதான் நாட்டுப்புற இலக்கியம். இந்நாட்டுப்புற இலக்கியத்தின் தன்மைகள் பற்றிக் கூற வேண்டுமானால் நாளும் உழைக்கும் நலிந்த மக்களின் நடைமுறை வாழ்க்கையில் ஒன்றாக விளங்குவதாகவே இவை அமைகின்றன. இலக்கிய உலகுக்குத் தாயாய் விளங்கும் நாட்டுப்புற இலக்கியம் மக்களின் அனுபவச் சிதறல்களாகவும் பட்டறிவுப் படிவங்களாகவும் விளங்குகின்றன.

நாட்டுப்புற இலக்கியம் முறைசாராக் கல்வியின் முன்னோடியாகும். ஏடு தூக்கிக் கொண்டு எடுபிடிபோல் பள்ளியில் சென்று பாடத்திட்ட முறைப்படிப் படிக்காமல் வானமே பள்ளியாய், வையகமே ஆசானாய், மோனத் தவமிருக்கும் முக்கடலே ஞானக் கல்வியாய் பாடம் பயின்று வரும் நாட்டுப்புறத்தான் கல்விதான் முதல் முறைசாராக் கல்வி. இந்த முறைசாராக் கல்வியை முறைப்படி கற்ற முதல் மகன்தான் நாட்டுப்புறத்தான் என்று பாராட்டப்படும் நாட்டுப்புற மக்களின் களவாட முடியாத கருத்துச் செல்வமாக விளங்குவதே நாட்டுப்புற இலக்கியம்.

மரபு வழியில் வாழ்க்கையை அமைத்துக் கொண்டு பண்பாட்டின் எதிரொலிகளாக வாழ்ந்துவரும் நாட்டுப்புற மக்களின் நாவில் நளினமாகத் தவழ்ந்து நகர்ப்புறத்தாரையும் தன்பால் ஈர்க்கும் காந்தமாக விளங்குவதே நாட்டுப்புற இலக்கியம். இயல்பாகவே இசை நயமும் கற்பனை வளமும்,

கருத்துச் செறிவும் அமையப்பெற்று விளங்குபவை; இவை அவர்களின் அன்றாட வாழ்வின் சகோதரனாக விளங்குபவை; ஏட்டிலக்கியத்தின் தாயாக விளங்குவது நாட்டுப்புற இலக்கியம் எனலாம்.

## 1.3.1. நாட்டுப்புற இலக்கியத்தின் தோற்றுவாய்

நாகரிகம் அடையாத மனிதன் நாவை அசைத்துப் பேசத் தொடங்கிய காலத்திலேயே தோன்றியது நாட்டுப்புற இலக்கியம் எனலாம். 'கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன்தோன்றிய மூத்தகுடி' என்று முன்னோரால் போற்றப்படும் தமிழ் மொழியின் தோற்றம் போன்றே, இவள் என்று பிறந்தனள் என்று அறியப்படாத இயல்பை உடையது நாட்டுப்புற இலக்கியம். அவை பாட்டாக இருந்தாலும், கதையாக இருந்தாலும், வேறு எந்த வடிவமாக இருந்தாலும் அவற்றைத் தோற்றுவித்தவர் யார்? அவை என்று தோன்றியது என்று கூற முடியாத பழமையை உடையது நாட்டுப்புற இலக்கியம்.

அதாவது, ஒரு நாட்டுப்புறப் பாடலைப் படைத்தவர் இவர்தான் என்று யாரையும் குறிப்பிட்டுச் சொல்ல முடியாது. ஏனென்றால் அது மனத்தின் அனுபவ வெளிப்பாடாகக் கிராமத்துச் சூழலில் உருவாவது ஆகும். நாட்டுப்புறப் பாடல்கள், வாய்மொழியாகப் பரவும் தன்மையது, மரபு வழிப்பட்டது, குறிப்பிட்டு இவர்தான் படைப்பாளர் என்று இல்லாதது, பல்வேறு வடிவங்களாகத் திரிபடையும் பண்பினது, ஒருவித வாய்பாட்டுக்குள் அடங்குவது ஆகிய பல தனித்தன்மைகள் பெற்றிருக்கின்றன எனலாம்.

கிராமத்து மக்களில் குரல் இனிமையும், பாடல்களைப் பாடும் பழக்கமும் உடையவர்களே நாட்டுப்புறப் பாடல்களைத் தங்களது உள்ளத்தில் பதிவு செய்து கொள்வார்கள். மரபு வழி என்பதால், முன்னோர் பாடியதைப் பின்பற்றி அக்குடுத்பத்திலோ உறவிலோ, உள்ளவர் யாரேனும் பாடல்களைப் பாடிப் பாடி மனனம் செய்து கொள்வர். அப்பாடல்கள் மறைவதில்லை. நாட்டுப்புறப் பாடல்கள் வாய்மொழிப் பாடல்கள் என்பதை நினைவில் கொள்ளவேண்டும். ஓலைச்சுவடியும், அச்சுக்கலையும் இல்லாத காலத்தில் காற்றில் வந்த கவிதைகளாக இப்பாடல்கள் விளங்கின. இப்பாடல்களில், பெரும்பாலும் மனனம் செய்வதற்கு ஏற்ற வகையில் எதுகை, மோனை, ஒரே சொல்லே

குறிப்பு

திரும்பத் திரும்ப வருதல், ஒரு தொடரில் வந்த இறுதிச் சொல் அடுத்த வரியில் முதலில் வருதல் என்னும் அந்தாதி அமைப்பில் வருதல் ஆகிய கூறுகளே இருக்கும். மேலும் ஒருவர் பாடியதைப் போன்றே அடுத்தவர் பாடினாலும், ஒவ்வொருவரும் அவரவர் கற்பனைத் திறனுக்கும் நயத்திற்கும் ஏற்பப் பாடல்களைப் பாடிப் பரப்புதல் உண்டு என்பது குறிப்பிடத்தக்கது. இவ்வாறு நாட்டுப்புற மக்களே நாட்டுப்புற இலக்கியத்தின் படைப்பாளர்கள் என்று கூற வேண்டும். இப்பாடல்கள் கூட்டு முயற்சியில் உருவானவை. மேலும் மரபு வழியாகப் பரவும் பாரம்பரியச் சிறப்பினை, போக்கினைக் கொண்டவை. இப்பாடல்களை இன்னார்தான் பாடவேண்டும், இப்படித்தான் பாடவேண்டும் என்ற கட்டுப்பாடு என்பதெல்லாம் கிடையாது.

## 1.3.2. நாட்டுப்புற இலக்கிய வகைகள்

நாட்டுப்புறப் பாடல்கள், நாட்டுப்புறக் கதைகள், நாட்டுப்புறக் கதைப்பாடல்கள், நாட்டுப்புறப் பழமொழிகள், நாட்டுப்புற விடுகதைகள், நாட்டுப்புறப் புராணங்கள், நாட்டுப்புற நம்பிக்கைகள் என நாட்டுப்புற இலக்கிய வகைகளைப் பாகுபடுத்தலாம்.

### 1.3.2.1. நாட்டுப்புறப் பாடல்கள்

நாட்டுப்புறப் பாடல்களை நாட்டுப்புறவியல் ஆய்வாளர்கள் தாலாட்டுப் பாடல்கள், குழந்தைப் பாடல்கள், காதல் பாடல்கள், தொழில் பாடல்கள், கொண்டாட்டப் பாடல்கள், பக்திப் பாடல்கள், ஒப்பாரிப் பாடல்கள், பனிமலர்ப் பாடல்கள் என எட்டாகப் பாகுபடுத்தலாம்.

### 1.3.2.2. நாட்டுப்புறக் கதைகள்

நாட்டுப்புற மக்களுக்கு முறைசாராக் கல்வி போன்று அறக்கோட்பாட்டை வலியுறுத்த வேண்டும் என்ற நோக்கத்தோடு கதைகள் சொல்லப்பட்டு வருகின்றன. இவ்வாறு சொல்லப்படும் கதைகளை, மனிதன் கதைகள், விலங்குக் கதைகள், மந்திர-தந்திரக் கதைகள், தெய்வக் கதைகள், இதிகாச-புராணக் கதைகள், பல்பொருள் பற்றிய கதைகள் எனப் பாகுபடுத்தலாம்.

### 1.3.2.3. நாட்டுப்புறக் கதைப்பாடல்கள்

நாட்டுப்புறக் கதைப்பாடல் என்பது ஓரிடத்தில் வழங்கப்பெறும் புகழ்மிக்க கதையினைப் பாடலாகப் பாடுவதாகும். இவ்வாறு கதையைப் பாடலாகக் கூறுவது அல்லது பாடலில் கதை பொதிந்து வருவது கதைப்பாடல் எனப்படும். கதைப்பாடலில், காப்பு அல்லது வழிபாடு, குரு வணக்கம், வரலாறு, வாழி ஆகிய நான்கு பகுதிகள் கட்டாயம் இடம்பெற்றிருக்கும். மேலும் இக்கதைப் பாடல்களில் நம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள் பற்றிய தகவல்களும் இடம்பெறுதல் உண்டு.

### 1.3.2.4. நாட்டுப்புறப் பழமொழிகள்

பழமையான மொழிகளே புதுமொழிகள் ஆகும். அறிவாலும், அனுபவத்தாலும் பழுத்துப்போன மொழிகள் நாட்டுப்புற மக்களால் நயம்படக் கூறப்படும் பொழுது அது பழமொழி என்றாகிறது. இதை முதுமொழி, பழஞ்சொல், முதுசொல் என்றும் கூறுவர். பழமொழிகளை, அளவடிப்படை, பொருளடிப்படை, அகர வரிசை அடிப்படை, அமைப்பியல் அடிப்படை, பயன் அடிப்படை என்ற பிரிவுகளால் பாகுபடுத்தலாம்.

### 1.3.2.5. நாட்டுப்புற விடுகதைகள்

நாட்டுப்புற மக்கள் தங்களின் அறிவுத் திறத்தைக் காட்டுவதற்காகப் புதிர்ப் பண்பை அடிப்படையாகக் கொண்டு ஒரு கருத்தைக் கூறுவர். அதில் ஏதாவது ஒரு கருத்து மறைந்து இருக்கும். அதைக் கண்டுபிடித்து விடை கூறவேண்டும். இவ்விடுகதைகள் நாட்டுப்புற விடுகதைகள், இலக்கிய விடுகதைகள் என்ற இரு நிலைகளில் அடக்கலாம்.

### 1.3.2.6. நாட்டுப்புறப் புராணங்கள்

‘புராதனம்’ என்னும் வடசொல்லில் இருந்து உருவானதே ‘புராணம்’. ‘புராணம்’ என்பது வழிவழியாக வந்த இறைவன், இறைவி பற்றிய கருத்துக்கள் அடங்கிய கதைகள் எனலாம். வேதங்களுக்கு அடுத்த படியாகப் புராணங்கள் போற்றப்படுகின்றன. சைவம், வைணவச் சமயங்களுக்குப் புராணங்கள் பல உள்ளன. நாட்டுப்புற மக்களின் கடவுள் வழிபாட்டில் இடம்பெறும் சிவன், முருகன், திருமால் போன்ற

கடவுளர்க்குப் புராணங்கள் உள்ளன. புராணங்களை மகாபுராணங்கள், இதிகாச அமைப்பிலானவை, சாதிப் பெருமை விளக்குவன, ஊர்ச் சிறப்பைக் கூறுவன (தல புராணம்) என்று பாகுபடுத்தலாம்.



## 1.4. நாட்டுப்புற இலக்கியம் - விளக்கம்

நாட்டுப்புற இலக்கியம் என்பது கிராமப்புற மக்களின் மண்ணின் மணத்தோடு, உள்ளத்தில் உள்ளதை உள்ளபடியே எடுத்துக்கூறல் என்ற அமைப்பில், இசை நயத்தோடு, இலக்கணக் கட்டுப்பாடு என்பது இல்லாது நாட்டுப்புறப் பாடலாகவோ, நாட்டுப்புறக் கதைகளாகவோ, நாட்டுப்புறக் கதைப்பாடல்களாகவோ, நாட்டுப்புறப் பழமொழிகளாகவோ, நாட்டுப்புற விடுகதைகளாகவோ, நாட்டுப்புறப் புராணங்களாகவோ படைக்கப்படுவது ஆகும். படைப்பாளன் இவன் தான் என்று அறுதியிட்டுக் கூற முடியாதபடி எல்லோரும் தாம்தான் என்று கூறும் வகையில் படைக்கப்படுவது நாட்டுப்புற இலக்கியமாகும்.

## முன்னேற்றத்தைச் சோதிக்கும் வினாக்கள்

1. நாட்டுப்புறவியல் என்றால் என்ன?
2. நாட்டுப்புற இலக்கிய வகைகள் யாவை?
3. நாட்டுப்புறப் பாடல்களின் வகைகள் யாவை?
4. பழமொழியின் வேறு பெயர்கள் யாவை?

## 1.5. தொகுத்துக் காண்போம்

- நாட்டுப்புறவியல் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- நாட்டுப்புற வகைகளான நாட்டுப்புறப் பாடல்கள், நாட்டுப்புறக் கதைகள், நாட்டுப்புறக் கதைப்பாடல்கள், பழமொழிகள், விடுகதைகள், புராணங்கள் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- நாட்டுப்புறவியலின் விளக்கம் குறித்தும் தெரிந்து கொண்டீர்கள்.

## 1.6. முன்னேற்றத்தைச் சோதிக்கும் வினாக்களுக்கான விடைகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | 1.3. | 2. | 1.3.2. |
| 3. | 1.3.2.1. | 4. | 1.3.2.4. |

## 1.7. பாடம் பயின்றபின் செய்யும் பயிற்சிகள்

1. நாட்டுப்புற இலக்கிய வகைகள் பற்றிக் கட்டுரை வரைக.
2. நாட்டுப்புற இலக்கியத் தோற்றுவாய் குறித்துக் கட்டுரை வரைக.

குறிப்பு

## 1.8. மேலும் பயில்வதற்கான நூல்கள்

1. சு. சண்முகசுந்தரம், நாட்டுப்புற இலக்கிய வரலாறு, மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1988.

# கூறு 2. நாட்டுப்புறவியல் வரலாறு – தொல்காப்பியத்தில் நாட்டுப்புற இலக்கியக்கூறுகள்

## 2.1. முன்னுரை

மடியில் கண் விழித்து மரணத்தில் கண் மூடும் வரை இசை ஏதோவொரு விதத்தில் மனிதனோடு கலந்துள்ளது. அந்த இயற்கையான இசையோடு இயைந்த வாழ்க்கையைக் கிராம மக்களிடம் மட்டுமே காணமுடியும். மண்ணிலே தோன்றி மண்ணிலே வாழ்ந்து மண்ணிலே மறைவதுதான் மானிட வாழ்க்கை என்றாலும், அந்த வாழ்க்கையில்தான் எத்தனை மாற்றங்கள். அந்த மாற்றங்கள் யாவும் மனநிலையிலும் அறிவு நிலையிலும் வாழ்க்கை முறையிலும் இன்னும் எத்தனையோ வகைகளில் படிப்படியாகக் காலத்திற்குக் காலம் மாறி வருகிறது. அந்த வகையில் கிராம மக்களின் வாழ்க்கையை நோக்கினால் அவர்களிடையே மாற்றங்கள் இருந்தாலும் மரபுகளைப் போற்றும் மாறாத பண்பினைக் காணலாம். இன்றளவும் அவர்களால் போற்றப்பட்டு, பாதுகாக்கப்பட்டு பயன்பாட்டில் வைத்திருக்கும் மரபுகளைப் பற்றி அறிவதே நாட்டுப்புறவியல் என்னும் துறையாகும். இத்துறையின் இச்சொல் தோன்றியதன் வரலாறு பற்றியும், தொல்காப்பியத்தில் நாட்டுப்புற இலக்கியத்தின் கூறுகள் எவ்வகையில் இருக்கின்றன என்பதைப் பற்றியும் எடுத்துரைப்பதாக இப்பாடப் பகுதி அமைகிறது.

## 2.1. குறிக்கோள்கள்

குறிப்பு

- Folk, Lore என்ற இரு சொற்களின் சேர்க்கை எவ்வாறு அமைந்துள்ளது என்பது பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- Folklore பற்றி அயல்நாட்டாரின் கூற்றுகள் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- Folklore பற்றித் தமிழக ஆய்வாளர்களின் கூற்றுகள் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- தொல்காப்பியத்தில் நாட்டுப்புற இலக்கியக் கூறுகள் எவ்வாறெல்லாம் அமைந்திருக்கின்றன என்பது பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.

## 2.3. நாட்டுப்புறவியல் வரலாறு

Folk, Lore என்னும் இரு சொற்களின் கூட்டுச் சொல்லாக “Folklore" என்னும் சொல் உருவாக்கப்பட்டது. “Folk" என்பதற்கு லி.ஃப்கோ அகராதி, பொது ஜனம், மக்கள், சாதி, வமிசம் என்று பொருள் கூறுகிறது. மக்கள், ஒரு இனத்தைச் சார்ந்த மக்கள் என்றும், மக்கள், நாடு, இனம் என்றும் வெவ்வேறு அகராதிகள் விளக்கம் தருகின்றன.

மேற்கூறப்பட்டவற்றிலிருந்து “Folk" என்ற சொல்லுக்கு அகராதிகள் மக்கள், நாடு, இனம் என்ற பொருள்களையே தருகின்றன. எனவே இச்சொல்லைப் பன்மையில் குறிப்பிடும்போது, ஒரு குறிப்பிட்ட குழு அல்லது ஒரு பிரிவைச் சேர்ந்த மக்கள் என்று கூறப்படுகிறது. மேலும், “Folk" என்ற சொல் படைப்பவர்களைக் குறிக்கிறது என்கிறார் ஆறு. இராமநாதன். கிராமப்புறப் படிப்பறிவில்லாத மக்களைக் குறிக்கும் என்கின்றார் சு. சக்திவேல். “Folk" என்னும் சொல் வழக்காறுகளை உருவாக்குவோரையும் மறுவுருவாக்கம் செய்வோரையும் குறிக்கும் என்கின்றார் தே. லூர்து.

பொதுவாக, பத்தொன்பதாம் நூற்றாண்டு ஆய்வாளர்களால் காட்டுமிராண்டி நிலையிலுள்ள நாகரிக முதிர்ச்சியற்ற மக்களுக்கும் நாகரிகமடைந்துள்ள மக்களுக்கும் அல்லது கல்வியறிவு பெற்ற மக்களுக்கும் இடைப்பட்டவர்களாக “Folk" என்போர்

குறிப்பு

குறிப்பிடப்பட்டுள்ளனர். இக்கருத்திலுள்ள பிழைகளைக் களைந்து "Folk" என்பதற்குத் தெளிவான வரையறையை டண்டி கூறுகின்றார்.

Folk என்ற சொல் ஏதேனும் ஒரு பொதுப்பண்பை அடிப்படையாகக் கொண்ட எந்தவொரு குழுவையும் குறிக்கலாம். குழுவை இணைக்கும் பொதுப்பண்பு, காரணக் கூறு எது என்பது அவசியமில்லை. அது ஒரு பொதுவான தொழிலாகவோ, மொழியாகவோ, சமயமாகவோ இருக்கலாம். ஆனால் இவை ஏதேனும் ஓர் அடிப்படையில் ஒன்றிப்போகும் ஒரு குழு, தமக்குச் சொந்தம் என்று சொல்லக் கூடிய சில மரபுகளைக் கொண்டிருக்க வேண்டியது அவசியமாகிறது. குழு என்பது குறைந்தபட்சம் இருவர் கொண்ட தொகுதியைக் குறிக்கிறது. ஒரு குழுவின் உறுப்பினர் ஏனைய உறுப்பினர்களை அறிந்து வைத்திருத்தல் என்பது இயலாத ஒன்று. ஆனால் அக்குழுவின் மரபுகளை நன்கு அறிந்திருப்பான் என்று டண்டி கூறுகின்றார்.

Lore என்ற சொல்லுக்கு ஞானம், அறிவு, ஞானிகள், அறிவாளிகள், குறிப்பிட்ட அறிவுப் பகுதியைப் பற்றிய உண்மைகள், பரம்பரை பரம்பரையாக வந்த அறிவுத் தொகுதி, மரபுச் செய்தித் தொகுதி, புலமை, கல்வியறிவு கோட்பாட்டுத் தொகுதி, கற்றல், சிறப்பாகப் பழங்காலத்தில் இருந்து வழிவழியாக வழங்கி வருவது அல்லது ஒரு பிரிவு மக்களின் உடைமை என்று பல்வேறு விதமான அகராதிகள் விளக்கம் கூறுகின்றன. இக்கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு சு. சக்திவேல் lore என்பதற்கு "மரபுச் செய்தித் தொகுதி" என்றும், "வழக்காறு" என்றும் பொருள் கொள்கிறார்.

Folk என்பது படைப்பவர்களைக் குறித்தால் Lore என்ற சொல் படைக்கப்படுவனவற்றைக் குறிக்கின்றது. பாட்டன் பாட்டியிடமிருந்தோ அல்லது தலைமுறை தலைமுறையாகவோ ஒருவர் பாடலைப் பாடுகிறார் அல்லது பழமொழி, விடுகதை, கதை, நம்பிக்கை முதலியவற்றைக் கூறுகிறார் என்று கொண்டோமே யானால் அதுவே lore எனப்படும். தமிழில் இது வழக்காறு என்று அழைக்கப்படுகிறது. இவ்வழக்காறு என்ற சொல்லில் வாய்மொழி வழக்கிலுள்ள பாடல்கள், கதைகள், பழமொழிகள், விடுகதைகள் போன்றவற்றையும் வழக்கத்திலுள்ள

நம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள், சடங்குகள், விளையாட்டுகள் போன்ற வாய்மொழி சாராதவற்றையும் அடக்கலாம் என்பர்.

குறிப்பு

நாட்டுப்புறவியலை நாட்டுப்புற மக்களின் மரபு வழிப்பட்ட படைப்புகள், அனுபவங்கள், நடத்தைகள் போன்றவற்றின் தொகுதி எனவும், அவற்றை ஆராயும் அறிவியல் துறை எனவும் கூறுவர். மேலும் இது, நாட்டுப்புற மக்களின் மரபு வழிப்பட்ட படைப்புகள் (Traditional Creations), பொதுமக்களைச் சார்ந்த மரபு முறைகள் (Popular antiquities), மக்கள் இலக்கியம் (Popular Literature), நாட்டுப்புறப் பண்பாடு (Folk Culture) போன்ற பெயர்களிலும் வழங்கி வந்தது. இதன் பின்னர் பத்தொன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஆங்கிலேய அறிஞரான வில்லியம் ஜான் தாமஸ் (W.J. Thomas) என்பவர் 1846ஆம் ஆண்டு "Popular antiquities" என்ற இலத்தீன் சொல்லுக்கு மாற்றாக "folklore" என்ற ஆங்கிலத் தொடரை உருவாக்கினார். விவசாய மக்களின் மரபுகளிலும் பழங்கால மக்களின் பண்பாடுகளிலும் எஞ்சியும் இன்றுவரை நிலைத்துத் நிற்கின்ற அறிவார்ந்த எச்சங்களைக் குறிக்க அத்தொடரைக் கையாண்டார். வில்லியம் ஜான் தாமஸ் மக்களின் பழக்க வழக்கங்கள், பண்பாடு, சடங்குகள், கலைகள், பழமொழிகள், விடுகதைகள், கதைகள், கதைப்பாடல்கள், நம்பிக்கைகள், மூடநம்பிக்கைகள் போன்ற பல்வேறு வழக்காறுகளையும் "Folklore" என்ற பதம் குறிப்பதாகக் கருதினார். எனவே, விவசாயம் செய்யும் பழங்கால மக்களின் பண்பாட்டு எச்சங்களே Folklore என்று நாட்டுப்புறவியல் அறிஞர் லூர்து கூறுகின்றார்.

"Folklore" என்பதற்கு நிகராகத் தமிழில் நிலையான கலைச்சொல் உருவாகும்வரை, பல சொற்கள் வழக்கில் இருந்தமையை அறிஞர் பலர் எடுத்துரைக்கின்றனர். தமிழில் நாட்டுப் பண்பாட்டியல், நாட்டார் வழக்காற்றியல், நாட்டுப்புறவியல் போன்ற சொற்கள் வழங்குவதாகவும் நாட்டுப்புறவியல் என்ற சொல்லே நிலைத்து நிற்பதாகவும் சு. சக்திவேல் கூறுவார்.

தே. லூர்து, பாரமரர் பாடல்கள், காற்றிலே மிதந்த கவிதை, ஏட்டில் எழுதாக் கவிதை, நாடோடிப் பாடல்கள், வாய்மொழிப் பாடல்கள், வாய்மொழி இலக்கியம், கிராமியப் பாடல்கள், கிராமிய இலக்கியம்,

குறிப்பு

ஊரகப் பாடல்கள், நாட்டுப்புறப் பாடல்கள், நாடோடி இலக்கியம், நாடோடிக்கலை, நாட்டுப்புறப் பண்பாட்டியல், நாட்டுப்புறவியல், நாட்டார் வழக்காற்றியல், நாட்டார் வழக்கியல், நாட்டாரியல், நாட்டார் வாழ்வியல் என்று பல தொடர்கள் இக்கல்விப் புலத்தில் வழங்கி வருவதாகக் கூறுவர்.

நாட்டுப்புறக் கலைகள், நாட்டுப் பண்பாட்டியல், நாட்டுப் படையல், நாட்டார் வழக்காற்றியல், நாட்டுப்புறவியல் ஆகிய சொற்கள் பயன்படுத்தப்பட்டு வருவதாக ஆறு. இராமநாதன் கூறுவார்.

வாய்மொழி இலக்கியம், ஏட்டில் எழுதா இலக்கியம், நாடோடி இலக்கியம், கிராமப்புற இலக்கியம், நாட்டார் வழக்காற்றியல், ஊரகவியல், கிராமப்புற இலக்கியம், பாமரர் இலக்கியம் போன்ற சொற்றொடர்கள் வழக்கத்தில் இருப்பதாக அ. பிச்சை கூறுகின்றார்.

நாட்டுப் பண்பாட்டியல், நாட்டார் வழக்காற்றியல் என்ற தொடர்களை நா. வானமாமலை பயன்படுத்துகின்றார். நாட்டார் என்ற சொல்லை இலங்கைத் தமிழ் அறிஞர்கள் பெரும்பாலும் பயன்படுத்துகின்றனர். மேற்குறிப்பிட்டவற்றுள் பெரும்பாலான அறிஞர்கள் பயன்படுத்தும் ஒரே சொல் நாட்டுப்புறவியல் என்பதாகும்.

மேற்குறிப்பிட்டவாறெல்லாம் தமிழகத்தில் Folklore என்ற சொல்லுக்கு இணையாகப் பல தொடர்கள் வழக்கத்தில் இருந்து வந்தாலும் இவற்றில் நிறைவடையாத தமிழ்நாட்டு அறிஞர்கள் Folkloreக்கு இணையான தமிழ்க் கலைச்சொல்லை உருவாக்குவதற்குத் தம் சிந்தனையைச் செலுத்தினர். Folkloreக்கு இணையான தமிழ்ச் சொல்லாக “நாட்டுப்புறவியல்” என்ற கலைச்சொல்லை முதன்முதலில் பயன்படுத்தியவர் சு. சண்முகசுந்தரம் ஆவார். இவர் 1975ஆம் ஆண்டு “நாட்டுப்புறவியல் ஓர் அறிமுகம்” என்ற நூல் மூலமாக இச்சொல்லை அறிமுகப்படுத்தினார்.

இச்சொல்லிற்குப் பெரும்பான்மையான நாட்டுப்புறவியலாளர்கள் ஆதரவு தெரிவித்தனர். ஆனால் அ.மு. பரமசிவானந்தம் Folk என்ற சொல்லுக்கு வாய்மொழி என்று விளக்கம் சொன்னார். நா. வானமாமலையோ, நாட்டு, பாபரர், நாட்டார் என்று தம் ஒவ்வொரு

குறிப்பு

நூலிலும் ஒவ்வொரு சொல்லை folk என்பதற்கு இணையாகப் பயன்படுத்தினார். செ. அன்னகாமு, மு. அருணாசலம், கி.வா. ஜகந்நாதன், தமிழண்ணல் போன்றோர் பாடல்களில் தம் ஆய்வினை மேற்கொண்டாலும் folklore பற்றிய எந்தக் கருத்தையும் கூறவில்லை. இவ்வாறு பிற அறிஞர்கள் சு. சண்முகசுந்தரத்தின் 'நாட்டுப்புறவியல்' என்ற கலைச்சொல்லுக்கு அவரைச் சார்ந்தோ அல்லது அவருடன் இணைந்தோ அல்லது பிறவாறும் கருத்து தெரிவிக்கையில் தே. லூர்து மட்டும் இதனை மறுக்கிறார்.

1976ஆம் ஆண்டு தே. லூர்து அவர்கள், Folklore என்ற சொல்லுக்கு நிகரான தமிழ்ச் சொல்லாக 'நாட்டார் வழக்காற்றியல்' என்பதனைக் கூறினார். Folkloreக்கு இணையாகத் தமிழில் இதுவரை வழங்கி வந்த அனைத்துச் சொற்களையும் மறுக்கிறார். மேலும் Folklore என்பதற்குச் சு. சண்முகசுந்தரத்தின் 'நாட்டுப்புறம்' என்ற பெயர்ப்பு சரியில்லை என்கிறார். Folk என்பதற்கு 'நாட்டார்' என்ற சொல்லே மிகச் சரியானது. 'நாட்டார் கூட்டம்' என்னும் சொல் கிழக்கு இராமநாதபுரம் மாவட்டப் பகுதியில் ஒரு பகுதியினர் என்ற பொருளில் ஆளப்பட்டு வருகின்றது. அஞ்சுகோட்டை நாட்டார், ஸ்லாமேய நாட்டார், குறிஞ்சி நாட்டார், கப்பலூர் நாட்டார் என்றெல்லாம் அவ்வப் பகுதியினரைக் குறிக்க நாட்டார் என்ற சொல் பயன்படுத்தப்படுகின்றது. வட்டாரத்திற்குரிய வழக்காறு, சாதியினர்க்குரிய வழக்காறு, ஒரு பாலினர்க்குரிய வழக்காறு, ஒரு வயதினர்க்குரிய வழக்காறு என்றெல்லாம் பலவகை வழக்காறுகள் உள்ளன. எனவே நாட்டார் என்ற சொல் ஒரு பகுதியினர் என்ற பொருளிலே ஆளப்படுகிறது. எனவே 'நாட்டார்' என்பதனைத் துறைசார்ந்த கலைச்சொல்லாக லூர்து உருவாக்குகின்றார்.

நாட்டார் என்பது ஒரு குழுவினரை அடையாளம் காட்டும் சொல்லாகி விடுவதால், 'நாட்டார்' என்று இக்கல்விப் புலத்திற்குள் வழங்கும்போது கல்விப் புலத்தின் ஆய்வுக்குட்பட்ட குழுக்களையே குறிக்கின்றது. Lore என்ற சொல்லுக்கு இணையான தமிழ்ச்சொல் 'வழக்காறு' என்பதாகும். வழக்காறு என்ற சொல்லில் வாய்மொழி வடிவில் உள்ள பாடல்கள், கதைகள், பழமொழிகள், விடுகதைகள் போன்றவற்றையும், வாய்மொழி சாராத ஆனால் மக்களின் வழக்கத்தில்

குறிப்பு

உள்ள நம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள், சடங்குகள், விளையாட்டுகள் போன்றவற்றையும் அடக்கலாம். இறுதியாக Folklore என்ற சொல்லுக்கு நாட்டார் வழக்கியல், நாட்டார் வழக்காற்றியல் போன்ற தொடர்களே சமமானவை. நாட்டுப்புறவியல் என்ற தொடர் கிராமப்புறங்களைப் பற்றிய ஆய்வுகள் என்று பொருள்படுமே தவிர Folklore என்பதற்குச் சமமானதன்று என்கின்றார் தே. லூர்து.

நாட்டார் என்ற சொல் ஓர் இன மக்களைக் குறிப்பிட்டுச் சொல்லும் சொல்லாகப் பயன்படுத்தப்படுவதால் ‘நாட்டார் வழக்காற்றியல்’ என்ற சொற்றொடர் ஓர் இன மக்களின் வழக்காறுகளைப் பற்றிய ஆய்வு என்று பொருள்படுகிறது. ஆறு. இராமநாதன் ‘நாட்டார் வழக்காற்றியில்’ என்ற சொல்லை மறுக்கிறார். ‘நாட்டார்’ என்பது சென்னையில் நாடார்களையும், தஞ்சையில் நாட்டார் என்பது கள்ளர் சாதியினரையும் குறிக்கும் என்கிறார் ந. சஞ்சீவி.

தே. லூர்து, நா. வானமாமலை ஆகிய இருவரும் Folklore என்பதற்கு நாட்டார் வழக்காற்றியல் என்று மொழிபெயர்த்துப் பயன்படுத்துகின்றனர். இந்தச் சொல்லாட்சியை மதுரைக்குத் தெற்கே உள்ள நெல்லை, குமரி மாவட்டங்களில் நாட்டுப்புறவியலைக் குறிக்க அதிகமாகப் பயன்படுத்துகின்றனர். ஆனால் மதுரைக்கு வடக்கே திருச்சி, கோவை, தஞ்சை, புதுவை, சென்னை, சேலம், வேலூர் போன்ற நகரங்களில் நாட்டுப்புறவியல் என்ற சொல்லே ஆசிரியர்களாலும் ஆய்வாளர்களாலும் பயன்படுத்தப்படுகின்றது. ஆறு. அழகப்பன், சு. சக்திவேல், ஆறு. இராமநாதன், சரஸ்வதி வேணுகோபால், சு. சண்முகசுந்தரம் போன்றோர் நாட்டுப்புறவியல் என்று பயன்படுத்துவதையே வழக்கப்படுத்தியுள்ளனர். இச்சொல்லையே இன்று பெரும்பான்மை பயன்படுத்துகின்றனர்.

## முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

1. Folklore என்ற சொல்லை உருவாக்கிய ஆங்கில அறிஞர் யார்?
2. Folklore குறித்து தே. லூர்து கருத்து யாது?
3. நாட்டுப்புறவியல் என்ற சொல்லை முதன் முதல் தமிழில் பயன்படுத்தியவர் யார்?

4. நாட்டுப்புறவியலுக்குத் தமிழகத்தில் பயன்படுத்திய வேறுபெயர்கள் யாவை?

குறிப்பு

## 2.4. தொல்காப்பியத்தில் நாட்டுப்புற இலக்கியக் கூறுகள்

ஒவ்வொரு மொழியிலும் எழுத்து தோன்றுவதற்கு முன்பு பாடல்களும், கதைகளும் தோன்றத் தொடங்கின. அவற்றில் சில கதை வடிவத்தில் பாடப்பட்டன என்பார் நா. வானமாமலை. தொடக்க கால மனிதர்கள் ஏடும் எழுத்தாணியும் கொண்டு கவிதைகளையும், காவியங்களையும் புனைவதற்கு முன்னரே அவர்கள் கற்றதும் களித்ததும் நாட்டுப்புறப் பாடலைத்தான் என்பதற்குத் தொல்காப்பியம் கூறும் இலக்கியக் கூறுகள் நமக்குத் துணைநிற்கின்றன. யாப்பின் ஏழு பகுதிகளை,

*"பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே*
*அங்கதம் முதுசொல் அவ்வேழ் நிலத்தும்*
*வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்*
*நாற்பே ரெல்லை அகத்தவர் வழங்கும்*
*யாப்பின் வழிய தென்மனார் புலவர்"*

என்கின்றார் தொல்காப்பியர். பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் என்று சொல்லப்படுவதில் நாட்டுப்புற வகைப்பாடுகளைக் குறிப்பிடுகின்றார். அதோடு அடிவரையறை இல்லாத ஆறு வகைகளைக் கூறி,

*"அவைதாம்*
*நூலினான உரையினான*
*நொடியொடு புணர்ந்த பிசியினானே*
*ஏது நுதலிய முமொழியான*
*மறைமொழி கிளந்த மந்திரத்தான*
*கூற்றிடை வைத்த குறிப்பினான"*

என்று விளக்கம் தருகின்றார். அதாவது, அடிவரையறை இல்லாதவை ஆறு என்று கூறப்பட்ட அவைதாம், நூலின் கண்ணவும்; உரையின் கண்ணவும்; நொடித்தன் மாத்திரையாகிய பிசியின் கண்ணவும்; ஒரு

மொழிக்கேதுவாகி வரும் முதுமொழிக் கண்ணவும்; மறைத்துச் சொல்லுஞ் சொல்லாற் கிளந்த மந்திரத்தின் கண்ணவும்; சொல்லுகின்ற பொருளை இடைகரந்து சொல்லும் குறிப்பின் கண்ணவும் என ஆறு வகைப்படும் என்கின்றார்.

குறிப்பு

## 2.4.1. பண்ணத்தி

தொல்காப்பியர் கூறும் பண்ணத்தி இன்றைய நாட்டுப்புறப் பாடல்களைக் குறிக்கிறது எனலாம். 'பண்ணத்தி' என்ற சொல்லுக்குப் பண்ணை விரும்புவது என்று பொருள். இசைப்பாட்டில் வரையறையான இசைப்பாட்டிற்குரிய வரையறையில்லை. ஆதலின் பண்ணமைந்த பாடல் என்னாமல் பண்ணத்தி எனலாம். தொல்காப்பியர் பண்ணத்தியைப் பற்றிக் கூறும்போது,

*"பாட்டிடைக் கலந்த பொருள வாகிப்*
*பாட்டி னியல பண்ணத் தியல்பே"*

என்ற நூற்பாவில், 'பாட்டிடைக் கலந்த பொருள ஆகி' என்பது பாட்டினிடைக் கலந்த பொருளையுடைத்தாகி என்றவாறும், 'பாட்டின் இயல பண்ணத்தியல்பே' என்பது பாட்டுக்களின் இயல்பை உடையவாம் பண்ணைத் தோற்றுவிக்கும் செய்யுட்கள் என்றவாறும் பொருள் கொள்வர்.

*"அதுவே தானும் பிசியொடு மானும்"*

என்ற நூற்பாவில் மேற்சொல்லப்பட்ட பண்ணத்தி பிசியோடு ஒத்த அளவிற்று என்றவாறு. 'பிசி' என்பது இரண்டடி அளவின்கண்ணே வருவதொன்று. ஆதலால் பண்ணத்திபோல் பிசியும் இரண்டடியான் வரும் என்கின்றார்.

*"அடிநிமிர் கிளவி யீரா றாகும்*
*அடியிகந்து வரினுங் கடிவரை யின்றே"*

என்ற நூற்பாவும் பண்ணத்தி பாகுபடுமாறு உணர்த்துகின்றது. பண்ணத்தி என்பது பாவினம் எனலாம். துறை, தாழிசை, விருத்தம் ஆகிய மூன்று பாவினங்களிலும் பாடல்கள் அமையும். இவ்வாறு, நாட்டுப்புறப் பாடல்கள் அமைந்திருக்கும் ஐவகைத் தன்மைகளைத் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

பேராசிரியர் தனது உரையில் மெய் வழக்கில்லாத புற வழக்குடையது என்றும், எழுதும் பயிற்சி இல்லாத புறவுறுப்புப் பொருட்களை உரையில், மெய் வழக்கில்லாத புறவழக்குடையது என்றும், எழுதும் பயிற்சி இல்லாத புறவுறுப்புப் பொருட்களை உடையது என்றும் பண்ணத்திக்கு விளக்கம் சொல்வார். அதாவது கற்பனை நிறைந்தது என்றும், வாய்மொழியாக வருவது என்றும் பொருள் கொள்ளலாம்.

## 2.4.2. பழமொழி

பழமொழியை முதுசொல், முதுமொழி என்கின்றார் தொல்காப்பியர்.

*"நுண்மையும் சுருக்கமும் ஒளியும் உடைமையும்*
*மென்மையும் என்றிவை விளங்கத் தோன்றிக்*
*குறித்தப் பொருளை முடித்தற்கு வரூஉம்*
*ஏது நுதலிய முதுமொழி"*

என்று பழமொழிக்கு விளக்கம் தருகிறார். நுண்மை விளங்கவும், சுருக்கம் விளங்கவும், ஒளியுடைமை விளங்கவும், மென்மை விளங்கவும் என்று இத்தகையன விளங்குமாறு தோன்றிக், கருதின பொருளை முடித்தற்கு வரும் ஏதுவைக் குறித்தன, 'முதுமொழி' என்று கூறுவர் புலவர். அதாவது, நுண்மை, சுருக்கம், ஒளி, உடைமை, மென்மை ஆகிய ஐந்து பண்புகளைப் பழமொழி கொண்டு விளங்குகிறது.

*"உழுத உழுத்தஞ்செய் ஊர்க்கன்று மேயக்*
*கழுதை செவியரிந் தற்றால்"*

என்ற பாடலை பேராசிரியர் பழமொழிக்குச் சான்றாகத் தருகின்றார். உரை, நூல், பிசி ஆசிய மூன்றையும் சிறப்பித்து முதுமொழி வரும் என்பதையும் பேராசிரியர் உரையால் அறியலாம்.

## 2.4.3. விடுகதை

விடுகதையைத் தொல்காப்பியர் 'பிசி' என்கின்றார். அதை இரண்டு வகையாக விளக்குகிறார்.

*"ஒப்பொடு புணர்ந்த உவமத் தானும்"*
*தோன்றுவது கிளந்த துணிவி னானும்*

*என்றிரு வகைத்தே பிசிநிலை வகையே.”*

என்று கூறுகின்றார். அதாவது, பிசியைத் தொல்காப்பியர் இரண்டு வகையாகக் கூறுகிறார். ஒன்று, ஒப்பொடு புணர்ந்த உவமம் ஆகும். இது உவமையால் கூறிய பொருளை விடுவிக்கும். இதனைக் ‘கிண்ணம் போலே பூ பூக்கும் கிடாரம் போலே காய் காய்க்கும்’ என்பதாலும், மற்றொன்று, ‘தோன்றுவது கிளந்த துணிவினான்’ வருவது. இதனை ‘நீராடான் பார்ப்பான் நிறஞ்செய்யான் நீராடின் ஊராடு காக்கை’ என்பதாலும் முறையே பரங்கிக்கொடி, நெருப்பு என்று உணர்ந்தும் என்பர்.

குறிப்பு

பிசி என்பது, அரிய பொருளைத் தாங்கி நிற்றலால் அரும்பொருள் நடையென்றும், இதனுள் அமைந்த சொல்லால் இதனைக் கேட்டோர் விடுவிக்குமாறு அமைந்திருத்தலால் விடுகதை, விடுகவி என்றும், சிறு துணுக்குப் போலிருத்தலால் பிதிர் என்றும், கேட்பவர்க்குப் புதுமையை விளைத்தலால் புதிர் என்றும் இவ்வாறு பல பெயருடையதாக வழங்குகிறது. விடுவித்தல் என்னும் பொருளுடைய விடுகதையை உலக மக்கள் வெடி என்றும் கூறி வருகின்றனர். பின்னர், பண்ணத்தியில் ஒருபகுதி சிறிய உருவத்தில் வருமாதலின் அப்பண்ணத்தி பிசி போல் சிறிதாக வரும் என்ற கருத்தால் “அதுவே தானும் பிசியொடு மானும்” என்பர். இப்பிசி, உரைநடையாகவும் இருக்கும்; பாட்டினைப் போலவும் இருக்கும். ஆதலால், இதற்கு விடுகதை, விடுகவி என்றும் பெயருண்டு.

## முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

5. தொல்காப்பியம் சுட்டும் நாட்டுப்புற வகைகள் யாவை?
6. தொல்காப்பியர் சுட்டும் ‘பண்ணத்தி’ எதனைக் குறிக்கும்?
7. பழமொழியைத் தொல்காப்பியர் எவ்வாறு சுட்டுகிறார்?
8. ‘பிசி’ - சிறு குறிப்பு வரைக.

## 2.5. தொகுத்துக் காண்போம்

- Folklore என்ற சொல் எவ்வாறெல்லாம் நாட்டில் வழங்கிற்று என்பது பற்றித் தெரிந்து கொண்டோம்.
- நாட்டுப்புறவியல் என்ற சொல் முதன் முதலில் பயன்படுத்தியவர் யார் என்பது பற்றித் தெரிந்து கொண்டோம்.

குறிப்பு

- நாட்டுப்புறவியல் என்ற சொல்லை தமிழகத்தில் எவ்வாறெல்லாம் பயன்படுத்தினர் என்பன பற்றியெல்லாம் தெரிந்து கொண்டோம்.
- தொல்காப்பியத்தில் இடம்பெற்றுள்ள நாட்டுப்புறக் கூறுகள் பற்றித் தெரிந்து கொண்டோம்.

## 2.6. முன்னேற்றத்தைச் சோதிக்கும் வினாக்களுக்கான விடைகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | 2.3. | 2. | 2.3. |
| 3. | 2.3. | 4. | 2.3. |
| 5. | 2.4. | 6. | 2.4.1. |
| 7. | 2.4.2. | 8. | 2.4.3. |

## 2.7. பாடம் பயின்றபின் செய்யும் பயிற்சிகள்

1. Folklore குறித்து அயல்நாட்டாரின் கருத்து குறித்து கட்டுரை வரைக.
2. நாட்டுப்புறவியல் குறித்து தமிழறிஞர்களின் கருத்து குறித்து கட்டுரை வரைக.
3. தொல்காப்பியத்தில் நாட்டுப்புற இலக்கியக் கூறுகள் பற்றி எடுத்துக்காட்டுகளுடன் விளக்குக.

## 2.8. மேலும் பயில்வதற்கான நூல்கள்

1. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - செய்யுளியல், இளம்பூரணம், அடிகளாசிரியர் (பதி.), தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1985.

# கூறு 3. இந்திய நாட்டுப்புறவியல் - தமிழக நாட்டுப்புறவியல்

குறிப்பு

## 3.1. முன்னுரை

உலக அளவியல் நாட்டுப்புறவியல் துறையானது எழுத்துருவம் பெற்றது கி.பி.16ஆம் நூற்றாண்டுதான். என்றாலும் மக்களின் மத்தியில் மக்கள் வாழத் தொடங்கிய காலந்தொட்டே நாட்டுப்புறக் கூறுகள் அவர்களிடம் இருந்து வந்துள்ளன. இருப்பினும் எழுத்துரு பெறப்பட்ட காலத்திலிருந்து இந்திய நாட்டுப்புறவியல் பற்றியும், தமிழக நாட்டுப்புறவியல் பற்றியும் எடுத்துரைப்பதே இப்பாடப் பகுதி.

## 3.2. குறிக்கோள்கள்

- உலக நாட்டுப்புறவியலின் தோற்றம் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- இந்திய நாட்டுப்புறவியல் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- தமிழக நாட்டுப்புறவியல் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.

## 3.3. உலக நாட்டுப்புறவியல்

பதினாறு, பதினேழாம் நூற்றாண்டுகளில் இங்கிலாந்தில் நாட்டுப்புற இயல் செய்திகள் தொகுக்கப்பட்டன. 19ஆம் நூற்றாண்டில் இவ்வாய்வில் அக்கறை மிகத் தொடங்கியது. ஜெர்மனியில் ஜேக்கப், வில்கெம் கிரிம் ஆகியோர் இந்நூற்றாண்டில் நாட்டுப்புறக் கதைகளில் ஆய்வினைத் தொடங்கி வைத்தனர். தாமஸ் கெய்ட்டிலி புராணக் கதைகளில் ஆய்வு செய்தார். பின்லண்டில் 1831இல் நாட்டுப்புறவியல் கழகம் ஆம்பிக்கப்பட்டது. 1872இல் ப்ளோரினஸ் பழமொழிகளைத் தொகுத்து வெளியிட்டா இங்கிலாந்தில் 1878லும் அமெரிக்காவில் 1888லும் நாட்டுப்புற இயல் கழகம் ஆரம்பிக்கப்பட்டது. ஆங்கிலக் கதைப்பாடல்கள் 1826இல் வெளியானது. டெய்லர், சுமித் ஆகியோர் பிரிட்டிஷ் நாட்டு ஆய்வாளராவர். ப்ரேசரின் ‘கோல்டன் பௌ’வும், மரியா லச்சின் அகராதியும் சிறந்த நாட்டுப்புற இயல் வழிகாட்டிகள் ஆகும்.

ருசிய நாட்டில் வால்டிமார் பராப் நாட்டுப்புறக் கதைகளில் அமைப்பியல் ஆய்வினைச் செய்தார். செக்காலாவும் ருசிய நாட்டுப்புற அறிஞராவர்.

குறிப்பு

## 3.4. இந்திய நாட்டுப்புறவியல்

அயல்நாட்டாரின் முயற்சியே இந்திய நாட்டுப்புற இயலின் தொடக்கமானது. அயல்நாட்டார் பயணிகளாகவும், அதிகாரிகளாகவும், குருமார்களாகவும் இந்தியாவில் விளங்கினர். 19ஆம் நூற்றாண்டில் இம்முயற்சி தொடங்கப்பட்டதை வங்காளம், பம்பாய், பிரிட்டன், ஐர்லண்டு ஆகிய நாடுகளின் ராயல் ஆசியாட்டிக் சொசைட்டியில் வெளியான இதழ்களால் அறிந்து கொள்ளமுடிகிறது.

நாட்டுப்புறவியல் துறை இந்தியாவில் ஏறத்தாழ இரண்டு நூற்றாண்டுகளாக வளர்ந்து வருகிறது. அறிவியல் துறைசார்ந்த வளர்ச்சி சுமார் அறுபது ஆண்டுகளாகத்தான் நடைபெற்று வருகிறது.

இந்திய புராணங்களும் பஞ்சதந்திரக் கதைகளும் மாக்ஸ் முல்லர், பென்பே முதலிய மேலை நாட்டு அறிஞர்களின் ஆய்வுகளுக்குப் பயன்பட்டன. இந்திய மக்களின் வாய்மொழி வரலாறுகள், கதைகள், கதைப்பாடல்கள், பழமொழிகள், விடுகதைகள், வழிபாடுகள் முதலிய வழக்காறுகள் பலவாறு சேகரிக்கப்பட்டு ஆய்வு செய்யப்பட்டு வருகின்றன. ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் உயர் அரசுப் பணியிலிருந்தவர்களும் சமயப் பணியாற்ற இந்தியா வந்தவர்களும் தாங்கள் வாழ்ந்த பகுதிகளில் வழங்கிய வாய்மொழிப் பாடல்கள், கதைகள், பழமொழிகள் முதலியவற்றைச் சேகரித்துள்ளனர். இந்தியாவிலும் பல்வேறு மொழிகளில் ஆங்கிலேயரைப் பின்பற்றி ஆய்வாளர்களும் ஆர்வமுடையோரும் நாட்டார் வழக்காற்றுச் சேகரிப்புப் பணியைத் தொடர்ந்தனர். பல்கலைக் கழகங்களிலும் கல்வித்துறை சாராத அரசியல் சமூக இலக்கியங்களிலும் நாட்டுப்புற வழக்காறுகளைச் சேகரிப்பதுடன் ஆய்வுகளும் மேற்கொள்ளப் பட்டன. அந்த ஆய்வுகள் பரந்துபட்டவையாக அமைந்தன. கோட்பாடு அடிப்படை ஆய்வுகள் தொடக்கத்தில் அதிகமாகச் செய்யப்படவில்லை. ஆய்வுகள் பெரும்பாலும் விளக்க முறையிலேயே அமைந்திருந்தன.

இந்தியாவில் இன்று மானிடவியல் (anthropology), சமூகவியல் (Socialogy), உளவியல் (Psychology), மொழியியல் (Lingustics), தகவல் தொடர்பியல் (Communication), அமைப்பியல் (Structuration), குறியியல் (Semiotics), குறியீட்டியல் (Symbolis) முதலிய பல்துறைகளின் இணை படிப்பாக நாட்டுப்புறவியல் துறை வளர்ந்துள்ளது. தமிழகத்தைப் போன்று கேரளம், கர்நாடகம், ஆந்திரம், அஸ்ஸாம், மணிப்பூர், மேற்கு வங்காளம் முதலிய மாநிலங்களின் நாட்டுப்புறவியல் வளர்ச்சி கவனிக்கத்தக்கது.

இந்தியாவில் தமிழகத்தைத் தவிர ஏனைய பகுதிகளில் நாட்டுப்புறவியல் வளர்ந்ததைச் சுருக்கமாகக் காண்போம்.

### 3.4.1. காஷ்மீர்

G.H. Leitner முதல் முதலில் 1872இல் Dardu Legends Proverbs, Fables and Riddles என்ற கட்டுரையை Indian Antiquaryஇல் எழுதினார். F.A.Steel, J. Knowles, Somnath Dhar, Nandalal Chatta போன்றோர் காஷ்மீர் நாட்டுப்புறக் கதைகளைத் தொகுத்தவர்களுள் முக்கியமானவர்கள் ஆவர்.

### 3.4.2. இமாசலப்பிரதேசம்

A.E. Dracha, 1960இல் Simla Villae Folktales from the Himalayas என்ற நூலை வெளியிட்டார். O.S. Oakleyk, T.D. Gariolaவும் சேர்ந்து Himalayan Folklore என்ற நூலை 1935இல் வெளியிட்டனர்.

### 3.4.3. பஞ்சாப்

1884இல் C. Swinerton என்பவர் The Adventure of the Punjab Hero Raja Rasalu and other Folktales of Punjab என்ற நூலை எழுதினார். இவர் பஞ்சாபிக் கதைகளைக் கிரேக்கக் கதைகளுடன் ஒப்பாய்வும் செய்தார். Macnair மற்றும் T. Baslow ஆகியோர் சேர்ந்து The Oral tradition from the Indus என்ற நூலை

குறிப்பு

1908இல் உருவாக்கினர். Devendhra Sathyarthi நாட்டுப்புறப் பாடல் தொகுதியை முதலில் வெளியிட்டார். 1946இல் Meet my people என்ற நூலையும், 1952இல் Bajat Are Dhol என்ற நூலையும் எழுதினார். பஞ்சாபில் இவர் குறிப்பிடத்தக்கவர். அரியானா நாட்டுப்புற இலக்கியத்தைத் தொகுத்து M.S. Ramdhawalaவும், D.S. Pravakrவும் வெளியிட்டனர். S.L. Yadav அவர்களும் Hariyana Pradesh Ka lok Sahitya என்ற நூலை 1960இல் வெளியிட்டுள்ளார்.

### 3.4.4. உத்திரப்பிரதேசம்

S.S. Chaturvediஇன் நாட்டுப்புறக் கதைகள் பற்றிய மூன்று நூல்களும், Hamari Lok Kathym என்ற நூலும் சிறப்பானவை. K.P. Bahadur-ம் கதைகளில் கவனம் வைத்தார். 1972இல் இவரது Folktales of Uttar Pradesh வெளியாயிற்று. நாட்டுப்புறப் பாடல்களில் A.G. Sheriff, Devendra Sathyarthi, S. Mishra போன்றவர்கள் ஆர்வம் கொண்டு தொகுத்து வெளியிட்டனர். மிஸ்ரா, பாடல்களைச் சமூகப் பொருளாதார அரசியல் பண்பாட்டுக் கோணங்களில் ஆராய்ந்துள்ளார். இந்திர தேவா பாடல்களைச் சமூகவியல் பார்வையில் அணுகியுள்ளார். பாண்டே, சத்தியேந்திரா, சத்தியப் பிரகாஷ் ஆர்யா போன்றவர்களும் நாட்டுப்புறவியல் ஆர்வலர்கள் ஆவர்.

### 3.4.5. பீகார்

Sampat Aryan மராகி மக்கள் இலக்கியம் பற்றி ஆராய்ந்தார். C.P. VidyarthiAk; Ganesh Chanbeyk; Bihar in Folklore Study என்ற நூலை 1972இல் எழுதியுள்ளனர். இங்கு வெளியான நூல்களின் அடைவினை H.C. Prasadம் Gita Sen Guptaயும் 1971இல் உருவாக்கினர். Jphn Christian என்பவர் 1891இல் Bihari Proverbs என்று பழமொழித் தொகுப்பில் ஈடுபட்டார். F.T. Cole, Campell ஆகியோர் சந்தால் நாட்டுப்புறக் கதைகளைத் தொகுத்தனர். C.H. Bompass, P.O. Bodding, sarat Chandra Mitra, Sarath Chandra Ray போன்றவர்கள் விரிவான ஆய்வுகளைச் செய்துள்ளனர்.

குறிப்பு

## 3.4.6. மேற்கு வங்காளம்

Grierson நாட்டுப்புற இயலை அறிவியல் அடிப்படையில் ஆராய்ந்தார். G.H. Darnant, Bengali Folklore பற்றி 1872, 1880 வாக்கில் கட்டுரைகள் எழுதினார். கதைப்பாடல்களில் கவனம் வைத்தவர் மணிச்சந்திரா அவர்கள். 1883இல் Lal Bihari Dey, Folktales of Bengal என்ற நூலையும், 1874இல் Pengal Peasant Life என்ற நூலையும் எழுதியுள்ளார். Dinesh Chandra Sen, East Bengal Ballads என்ற நூலை வெளியிட்டார். G.S. Datta, 1960இல் Folk dances of Bengal என்ற நூலை எழுதினார்.

## 3.4.7. அசாம்

P.d. Goswami 1960இல் Ballads and tales of Assam என்ற ஆய்வினைச் செய்தார். B.K. Baruaவின் அசாமிய நாட்டுப்புற இலக்கிய நூலுக்கு அகாடமி பரிசு கிடைத்தது. கோசுவாமியின் ஆய்வுகள் அசாம் மாநிலத்தில் குறிப்பிடத்தக்க நாட்டுப்புறவியல் ஆய்வுகளாகும்.

## 3.4.8. ஒரிசா

Gopal Chandra Praharaj நாட்டுப்புற இலக்கிய ஆய்வாளர்களின் முன்னோடி ஆவார். Utkal Kahani என்பது இவரது நூல். Pitambari Debi ஒரிய பழமொழிகளை இரு தொகுதிகளாக வெளியிட்டார். Kapileswara Vidya Bhusan 1876இல் Oriya Proverbs நூலை வெளியிட்டார். அதோடு, முன்ஷிஷேக் அப்துல்மஜித்தும், சந்திரசேகர் பஹினிபதியும் பழமொழிகளைத் தொகுத்தனர். Upendra Narayana Dutta Gupta கதைகளை ஆங்கிலத்தில் வெளியிட்டார்.

## 3.4.9. மத்தியப்பிரதேசம்

Siva Sabai Chaturvethi, பண்டல்கண்ட் நாட்டுப்புறக் கதைகளைத் தொகுத்தார். T.H. Twente, Hiralal, Russel போன்றோர் கதைகளைத் தொகுத்து வெளியிடுவதில் விருப்பம் கொண்டனர். S.C.

Dube, L.P. Singh போன்றோர் பாடல்களின் மீது பிரியம் வைத்தனர். 1947, 1953 வாக்கில் அவை நூலாயின. Shyam Parmar இன் Folklore of Madhya Pradesh என்ற நூல் சிறப்பானது.

குறிப்பு

### 3.4.10. இராஜஸ்தான்

Devilal Sarmarஇன் இரண்டு நூல்கள் குறிப்பிடத்தக்கவை. Sahalம் சுதிவீர்சிங்கும் பழமொழிகளைத் தொகுத்தனர். Sutyakaran Pareeksம், Dasம் பாடல்களையும், Devilal Sarma நாடகங்களையும் தொகுத்து ஆய்ந்தனர். 1959இல் அகர்வால் பாடல்களைத் தமது டாக்டர் பட்டத்துக்கு ஆராய்ந்தார். Bhagawati Prasad Darulca, Om Prakash Cupta போன்றவர்கள் 1961இல் மார்வாடிப் பாடல்களை வெளியிட்டனர்.

### 3.4.11. குஜராத்

Kincaid என்பவர் கதைகளிலும், Jhaver Chand Meghani பாடல்களிலும் கவனம் செலுத்தினர். A.K. Forbes நாட்டுப்புற இலக்கியங்களில் ஆய்வு செய்தார். Sudhaben Desai நாடகங்களையும், Jeyma Parmar பண்பாட்டினையும், Narmada Shankar Metha மதத்தொடர்பாகவும் ஆய்வு செய்தனர்.

### 3.4.12. மஹாராஷ்டிரம்

அனுசுயா பஹாபம், கமலாபாய் தேஷ்பாண்டே, காகா காவேல்கர், மாலதி தண்டேகர், துர்க்கா பகவத், விநாயகராவ் ஜோஷி போன்றோர் மஹாராஷ்டிர நாட்டுப்புறவியலில் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர். சரோஜினி பாபர் 1962இல் Marathi Folk Literature என்ற நூலை எழுதியுள்ளார். D.G. Borse, W.E. Dexter, M. Krishnaswamy Rao போன்றோர் பாடல்களையும், Durga Bagavat விடுகதைகளையும் ஆராய்ந்தனர்.

## 3.4.13. ஆந்திரப்பிரதேசம்

பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே தெலுங்கு கதைப்பாடல்கள், நாட்டுப்புறப் பாடல்கள் முதலியன தொகுக்கப்பட்டு வெளியிடப்பட்டன. ஆயினும் நாட்டுப்புறவியல் பற்றிய விழிப்புணர்வு அங்கு அண்மையில்தான் ஏற்பட்டது. கர்னல் காலின் மக்கன்சி, பிரௌன், அபாயில், கேப்டன் கார் ஆகியோர் பத்தொன்பதாம் நூற்றாண்டில் நாட்டார் வழக்காறுகளைத் தொகுக்கும் பணியில் ஈடுபட்டனர்.

பி. ஆதிநாராயண சாஸ்திரி, ஏ. உமாகாந்த வித்யாசேகரா, வி. பிரபாகர சாஸ்திரி, எம். சோமசேகர சர்மா, எஸ். பிரதாப ரெட்டி, நந்திராஜ் சலபதி ராவ், எம்.என். வெங்கடசாமி, என். வேங்கடமணய்யா, டி. அச்சுதரஜ், கி. நாராயணராவ், பி. இராமராஜு முதலியோர் இத்துறையில் மிக்க ஆர்வத்துடன் பணியாற்றினர்.

வி.என். யூலுண், என். கோபாலகிருஷ்ணா, ஒய். ஸ்ரீராமமூர்த்தி, சிந்தா தீட்சிதலு, ஏ. இராமராவ், டி. சிவசங்கரசுவாமி, வி. சோமயாஜுலு, டி. காமேஸ்வரராவ், எஸ். கோபால கிருஷ்ணமூர்த்தி, என். கங்காதரன், ஜி. பாஸ்கரராவ், எம். இராதா கிருஷ்ணமூர்த்தி, கே.சபா.எச். ஆதி சேஷுலு முதலியோர் பல நூல்களையும் கட்டுரைகளையும் எழுதியுள்ளனர்.

1905இல் G.R. Pandulu, Folklore of Telugus என்றொரு நூல் எழுதியுள்ளார். கங்காதரன் போன்றோர் ஆயிரக்கணக்கான பாடல்களைத் தொகுத்தனர். எம்.என். வெங்கடசாமி கிரகணம் சம்பந்தப்பட்ட கதைகளைத் தொகுத்துள்ளார். P.C. Reddy, M.V. Ramarau, M.N. Srinivas, N.G. Ranga போன்றவர்கள் பாடல்களை ஆராய்ந்தனர்.

ஆந்திரா பல்கலைக்கழகங்களில் பலர் நாட்டுப்புறவியல் துறை ஆய்வுகளில் ஈடுபட்டு முனைவர் பட்டங்கள் பெற்று வருகின்றனர். யட்சகானத்தின் வரலாறு, தெலுங்கு நாட்டுப்புறப் பாடல்கள், தெலுங்கு கதைப்பாடல்கள், தெலுகுலோ கதகேயலு ஆகிய ஆய்வேடுகள் குறிப்பிடத்தக்கவை. ஆர்.வி.எஸ். சுந்தரம் வெளியிட்டுள்ள ஜனபத சாகித்ய ஸ்வரூபம், தெலுங்கு கன்னட ஜனபதி கோயலு, ஜனபத

சாகித்ய மூல தத்வகளு, ஆந்த்ருல ஜனபத விஜனம் ஆகிய நூல்கள் ஆந்திர நாட்டுப்புறவியலை அறியத் துணைசெய்பவை.

குறிப்பு

### 3.4.14. கர்நாடகம்

கர்நாடகத்தில் நாட்டுப்புறவியல் கல்வித்துறை சார்ந்ததாகப் பல காலமாகச் செயல்பட்டு வருகிறது. கிறித்தவப் பாதிரிமார்களும் ஆங்கிலேய அதிகாரிகளும் பத்தொன்பதாம் நூற்றாண்டில் இத்துறையின் முன்னோடிகளாக விளங்கினர். மேரி பரேரே 1868இல் 25 நாட்டுப்புறக் கதைகளை வெளியிட்டார். கிட்டர் 1894இல் வெளியிட்ட கன்னட ஆங்கில அகராதியில் 4000 கன்னடப் பழமொழிகளை இணைத்துள்ளார். ஏ.சு. பர்னல் துளுவர்களின் பூத வழிபாட்டு மரபுகளையும் கொம்மே கூர்க் மக்களின் வீரப்பாடல்களையும் தொகுத்துள்ளனர்.

அனந்தகிருஷ்ண ஐயர் முதலில் The Mysore Tribes and Castes என்ற நூலை எழுதினார். 1921இல் White head தனது Village gods of Southern India என்ற நூலில் கிராமத் தெய்வங்களைப் பற்றி விளக்கியுள்ளார். A.C. Bnruel 1894இல் Devie Worship of Teluvas என்ற கட்டுரையில் பேய் வழிபாட்டை விளக்கியுள்ளார். H.M. Nayak மர வழிபாட்டின் தோற்றம் வளர்ச்சி பற்றி ஆராய்ந்துள்ளார். M.N. Srinivas குடகு மக்களின் பழக்க வழக்கங்களையும் நம்பிக்கைகளையும் ஆராய்ந்தார். Shivaama Karantha கர்நாடக நாட்டுப்புறவியல் துறை முன்னோடிகளுள் ஒருவர்.

சின்னப்பா, ஸ்ரீகண்டையா, பெந்தரே, மதுராச்சன்னா, மஸ்தி வெங்கடேச ஐயங்கார், பி. ரங்கசாமி, தேவுடு நரசிம்ம சாஸ்திரி ஆகியோர் கன்னட நாட்டுப்புறவியலுக்குப் பெருங்காற்றினர். தேவுடு நரசிம்ம சாஸ்திரியின் கர்நாடக சமஸ்கிருதி (1936) என்ற நூலில்தான் Folklore என்னும் சொல் முதன் முதலில் இடம்பெற்றது. 1950க்குப் பின் பி.எஸ். கட்சிமத் கர்நாடகா முழுவதிலும் நாட்டுப்புறவியல் கூறுகளைப் பற்றிய செய்திகளைத் தொகுத்தார். அது எதிர்கால ஆய்வுகளுக்குப் பெரும் தூண்டுகோலாக அமைந்தது.

1960க்குப் பின்பு கர்நாடக நாட்டுப்புறவியலில் அறிவியல் பூர்வமான ஆய்வுகள் வெளிவரத் தொடங்கின. மைசூர்

பல்கலைக்கழகத்தின் கன்னடத் துறையினர் நாட்டுப்புறவியல் ஆய்வுகளை முனைப்புடன் நிகழ்த்தினர். மைசூர்ப் பல்கலைக்கழகத்தில் முதன் முதலில் நாட்டுப்புற இயலில் முதுகலைப்பட்ட வகுப்பு தொடங்கப்பட்டது. இப்பல்கலைக் கழகத்தில் நாட்டுப்புறவியல் அருங்காட்சியகமும் உள்ளது.

குறிப்பு

## 3.4.15. கேரளம்

நாட்டுப்புற வழக்காறுகள் கேரளத்தில் மிகவும் செல்வாக்குப் பெற்றுள்ளன. ஆனால் நாட்டுப்புறவியல் ஆய்வுகள் மிகக் குறைவாகவே நடைபெற்றுள்ளன. முதன் முதலில் பாலிமஸ் பாதிரியார், பெர்ரி மக்லன் ஆகியோர் கதைப்பாடல்களையும் குண்டெர்ட் என்பவர் பழமொழிகளையும் தொகுத்து வெளியிட்டனர்.

கேரளத்தின் தலைசிறந்த எழுத்தாளர்களும் நாட்டுப்புற வழக்காறுகளைத் தொகுத்துப் பதிப்பித்து அருந்தொண்டாற்றினர். சுண்டல் என்பவர் கேரள நாட்டுப்புற இலக்கியம், கிறித்துவ நாட்டுப்புறவியல் முதலிய 18 நூல்களை இயற்றியுள்ளார். பார்கவன் பிள்ளை பண்பாடுகள் என்னும் நூலையும் ஜி. சங்கரப்பிள்ளை தோற்றம் பாட்டுக்கள் என்ற நூலையும் வெளியிட்டுள்ளனர்.

களியாட்டம், கோலம் துள்ளல், ஓட்டம் துள்ளல், முடியேற்று, கோல்களி, திருவாதிரைக்களி முதலிய ஆட்டக்கலைகள் கேரளத்தில் மிகவும் புகழ்வாய்ந்தவை. கேரளத்திலுள்ள வடக்கன் பாட்டுகளும் தெக்கன் பாட்டுகளும் தொகுக்கப்பெற்று வெளியிடப்பட்டுள்ளன.

கேரளக் கதைப்பாடல்களைப் புராணக் கதைப்பாடல்கள், வரலாற்றுக் கதைப்பாடல்கள், சமயக் கதைப்பாடல்கள் என மூவகைப்படுத்தலாம். மனவரதம் பாட்டு என்னும் பழைய கதைப்பாடல், கோவிந்தன் பிள்ளையால் பதிவு செய்யப்பட்டு செ. அச்சுத மேனனால் மேலும் ஆய்வு செய்யப்பட்டது. அவரது பணி கேரளாவின் நாட்டுப்புறப் பண்பாட்டு ஆய்வில் ஒரு புத்தொளியாகக் கருதப்பட்டது.

பாலன் நம்பியார், வடகேரளத்தில் பரவலாக நிகழ்த்தப்படும் முக்கிய கலை வடிவமான தெய்யாட்டத்தை விரிவாக ஆய்வு

செய்துள்ளார். தென்னிந்திய காளி திருநடனங்களில் தெய்யாட்டம் மிகவும் முக்கியமாகக் கருதப்படுகிறது.

குறிப்பு

களியாட்டம், தெய்யாட்டு, கணியான் களி, பகவதிப்பாட்டு ஆகியவை சமயச் சடங்குகளுடன் தொடர்புடைய நாட்டுப்புறக் கலைகளாகும். சாக்கியர் கூத்து, கிருஷ்ணனாட்டம், இராமாயண நிழலாட்டம் ஆகியவை சமயத்தோடு தொடர்புடையன. ஆயினும் அவை சடங்குகளில் நிகழ்த்தப்படுவதில்லை. கைகொட்டி களி, குறத்தியாட்டம், மோகினியாட்டம் முதலிய நிகழ்த்துக்கள் பரவலாக நிகழ்த்தப்படும் கலைகளாகும்.

கோழிக்கோடு பல்கலைகக்கழகத்தில் அண்மையில் தொடங்கப்பட்ட நாட்டுப்புறவியல் துறை கோட்டுபாட்டு ஆய்வுகளில் சிறப்பான கவனம் செலுத்துகிறது. கேரள நாட்டுப்புறவியல் நூலை மலையாளத்தில் எழுதிய இராகவன் நொய்டா தலைமையில் அத்துறை நாட்டுப்புறவியல் ஆய்வுகள் நிகழ்த்தின. கே.கே.என். குறுப்பு அப்பல்கலைக்கழகத் துணைவேந்தராக இருந்து நாட்டுப்புறவியல் துறைக்கு மேலும் ஊக்கம் கொடுத்து வளர்த்தார்.

அனந்தகிருஷ்ண அய்யரின் Castes and tribes of Cochin என்ற நூலில் முதன் முதலாக கேரளாவில் நாட்டுப்புறவியல் பற்றிச் சொல்லப்பட்டது. கே.பி. பத்மநாப மேனன் கேரள வரலாற்று நூலில் நாட்டுப்புற மக்களின் வாழ்க்கை முறையை விளங்குகிறார். அச்சுத மேனனும், எஸ்.கே. நாயரும் Ballads of North Malabar என்ற நூலைப் பதிப்பித்தனர். பி.கே. நாராயண பிள்ளை, சூரநாட்டுக் குஞ்சன் பிள்ளை, கே. இராகவன் பிள்ளை போன்றோர் சமயச் சடங்கு சம்பந்தப்பட்ட பாடல்களைச் சேகரித்தனர்.

எம்.டி. ராகவன் 1947இல் Folk plays and dances of Kerala என்ற நூலை எழுதினார். எஸ்.கே. நாயர் பாடல்கள் பற்றியும், பி.டி. நாயர் பழமொழிகள் பற்றியும், பாலரத்னம் பாம்பு வணக்கம் பற்றியும் ஆராய்ந்துள்ளனர். பத்மநாபன் தம்பி 1960இல் காடரது மதம் பற்றியும், 1960இல் துள்ளல் ஆட்டம் பற்றியும் எழுதியுள்ளார். விஷ்வாம்பரன், அப்பாத்துரை அய்யர், ராவ், சிவசங்கரன், சங்குண்ணி, நம்பூத்ரி,

உள்ளானர் பரமேஸ்வர அய்யர், கே.கே.என். குருப் போன்றோரின் நூல்களும் கேரளத்தில் எண்ணத்தக்கவையாகும்.

குறிப்பு

## முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

1. பஞ்சாப் நாட்டுப்புறவியல் - குறிப்பு வரைக.
2. Folk Dances of Bangal என்ற நூலின் ஆசிரியர் யார்?
3. கிரகணம் சம்பந்தப்பட்ட கதைகளைத் தொகுத்தவர் யார்?
4. முதுகலை நாட்டுப்புறவியல் எந்தப் பல்கலைக்கழகத்தில் முதன்முதல் தோற்றுவிக்கப்பட்டது?

## 3.5. தமிழக நாட்டுப்புறவியல்

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இருந்துதான் தமிழகத்தில் நாட்டுப்புறவியல் பற்றிய கவனம் மக்களின் மத்தியில் திரும்பியது எனலாம். தமிழக நாட்டுப்புறவியல் நாட்டுப்புறப் பாடல்கள், நாட்டுப்புறக் கதைகள், நாட்டுப்புறக் கதைப்பாடல்கள், நாட்டுப்புறப் பழமொழிகள், நாட்டுப்புற விடுகதைகள் போன்றவற்றினைத் தொடர்ந்து இவைகள் தொடர்பான ஆய்வுகளும் தமிழக நாட்டுப்புறவியலில் இடம்பிடித்திருக்கின்றன.

### 3.5.1. நாட்டுப்புறப் பாடல்கள்

தொன்றுதொட்டு இருந்துவரும் நாட்டுப்புறப் பாடல்களை மக்கள் மத்தியில் முதன் முதலில் அச்சிட்டு வெளிக்கொணர்ந்த பெருமை மு. அருணாசலத்தையே சாரும். 1943ஆம் ஆண்டு ‘காற்றிலே மிதந்த கவிதை’ என்னும் நூலினை நாட்டுப்புறப் பாடல்களின் தொகுப்பாக வெளியிட்டார். இதுவே நாட்டுப்புறப் பாடல்களின் முதல் தொகுப்பு நூலாகக் கருதப்பெறுகிறது. இந்நூல் வெளிவருவதற்கு முன்னரே 1871ஆம் ஆண்டு ஆங்கிலத்தில் கோவர் என்பார் தமிழ்ப் பாடல்களைத் தொகுத்துள்ளார்.

இவரைத் தொடர்ந்து கி.வா. ஜகந்நாதன் நாடோடி இலக்கியம், மச்சுவீடு, குழந்தை உலகம், கஞ்சியிலும் இன்பம் ஆகிய நூல்களை வெளியிட்டுள்ளார். ஆறு. அழகப்பன், தமிழண்ணல் ஆகியோர்

குறிப்பு

தாலாட்டுப் பாடல்களைத் தொகுத்து வெளியிட்டனர். பேராசிரியர் ந. வானமாமலை, மு.வை. அரவிந்தன், ர. அய்யாசாமி ஆகியோர் நாட்டுப்புறப் பாடல்களைத் தொகுத்து வெளியிட்டனர். ஒப்பாரிப் பாடல்களை மட்டும் தொகுத்து மதுரை முதலியார் வெளியிட்டார். இலங்கை நாட்டுப் பாடல்களைத் தொகுத்து வ.மு. இராமலிங்கமும், 'ஏட்டில் எழுதாக் கவிதைகள்' என்ற தலைப்பில் செ. அன்னகாமுவும் வெளியிட்டுள்ளனர். செ.ப. கணபதி 'கண்ணீர்ப் பூக்கள்' என்ற தலைப்பிலும், சு. சண்முகசுந்தரம் 'தமிழக நாட்டுப்புறப் பாடல்கள்' என்ற தலைப்பிலும், கிருஷ்ணசாமி 'கொங்கு நாட்டுப்புறப் பாடல்கள்' என்ற தலைப்பிலும், சு. சண்முகசுந்தரம் 'திருநெல்வேலி நாட்டுப்புறப் பாடல்கள்' என்ற தலைப்பிலும், ஆறு. இராமநாதன் 'வட ஆற்காடு மாவட்டப் பாடல்கள்' என்ற தலைப்பிலும், சரசுவதி வேணுகோபால் 'மதுரை நாட்டுப்புறப் பாடல்கள்' என்ற தலைப்பிலும், இ. பாலசுந்தரம் 'ஈழத்து நாட்டார் பாடல்கள்' என்ற தலைப்பிலும், முருகானந்தம் 'நாட்டுப்புறப் பாடல்கள்' என்ற தலைப்பிலும் நாட்டுப்புறப் பாடல்களைச் சேகரித்து வெளியிட்டுள்ளனர்.

இவை தவிர ஏ.என். பெருமாளின் கும்மிப் பாடல்களும், ருக்மணியின் பேயோட்டும் உடுக்கடிப் பாடல்களும், நா. வானமாமலையின் தமிழக நாட்டுப் பாடல்களும், தமிழ் நாட்டுப் பாமரர் பாடல்களும், டாக்டர் மெ. சுந்தரத்தின் நாட்டுப்புறப் பாடல்களும், டாக்டர் தமிழண்ணலின் இராவண்ணப் பாடல், தாலாட்டு நூல்களும் சிறப்புக்குரியன. நாட்டுப்புறப் பாடல்களைப் பொறுத்தவரை இவை போன்ற இன்னும் சில வெளியீடுகளும் தமிழில் வெளிவந்துள்ளன.

ச. முருகானந்தம், மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு, என். சந்திரன், கே. இளங்கோ, வ. பெருமாள், மு. முகம்மதலி ஜின்னா, மா. வரதராஜன் போன்றோர் நாட்டுப்புறப் பாடல்கள் பற்றிய நூல்களை எழுதியுள்ளனர். சு. சண்முகசுந்தரத்தின் தமிழில் நாட்டுப்புறப் பாடல்களும், ஆறு. அழகப்பனின் நாட்டுப்புறப் பாடல்கள் திறனாய்வும் சிறந்த விளக்க நூல்களாக அமைந்திருக்கின்றன.

### 3.5.2. நாட்டுப்புறக் கதைகள்

நாட்டுப்புறக் கதைகளில் ஏடுகள் என்று நோக்கினால் 19ஆம் நூற்றாண்டிலிருந்தே நூல் வடிவில் வந்து கொண்டிருக்கின்றன. 1867ஆம் ஆண்டில் வீராசாமி நாயக்கர் மயில் ராவணன் கதையை வெளியிட்டார். 1871இல் விக்கிரமாதித்தன் கதைகளும், 1873இல் கதா சிந்தாமணியும், 1876இல் விநோத ரசமஞ்சரியும் வெளியாயின. 1886இல் பண்டித நடேச சாஸ்திரி 'திராவிட மத்திய காலக் கதைகள்' மற்றும் 'தக்காண பூர்வ கதைகள்' என்ற தொகுப்புகளை வெளியிட்டார். 1897இல் பூலோக விநோதக் கதைககளை இராஜேந்திரம் பிள்ளை வெளியிட்டார். 1951இல் கதாமஞ்சரி வெளிவந்தது. 1952இல் ஈசாப் கதைகள் ஒரு குழுவும் உலக நாடோடிக் கதைகளைத் திருவாணனும் வெளியிட்டனர்.

கா. அப்பாத்துரை நாட்டுப்புறக் கதைகள், நாடோடிக் கதைகள் என்ற தொகுப்பையும், வி. கோவிந்தன் பழங்காலக் கதைகள் என்ற தொகுப்பையும், கி. ராஜ்நாராயணன் தமிழ் நாட்டு கிராமியக் கதைகள் என்ற தொகுப்பையும், இரா. இளங்குமரன் தமிழ் நாட்டுப் பழங்கதைகள் என்ற தொகுப்பையும், ஆறு. இராமநாதன் நாட்டுப்புறக் கதைக்களஞ்சியம் என்ற பதினைந்திற்கும் மேற்பட்ட தொகுப்புகளையும் வெளியிட்டுள்ளனர்.

### 3.5.3. நாட்டுப்புறக் கதைப்பாடல்கள்

நாட்டுப்புற மக்களிடம் வழங்கப்படும் கதைப்பாடல்களும் ஏட்டில் வெளிவந்துள்ளன. கதைப்பாடல்கள் அச்சில் வெளிவந்ததும் பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலேயே என்று கூறலாம். 1868இல் கொந்தலகான் என்பவர் சித்திரபுத்திர நயினார் கதைப்பாடலை வெளியிட்டார். இதே ஆண்டு அமராவதி கதையும் வெளிவந்துள்ளது. இதனைத் தொடர்ந்து கருணானந்த சுவாமிகள் நல்லதங்காள் கதைப்பாடலை வெளியிட்டார். 1869இல் மதுரைவீரன் கதைப்பாடலை கருணானந்த சுவாமிகள் வெளியிட்டார். இதனையடுத்து தேசிங்குராஜன் கதையை பரசுராம முதலியாரும், அல்லி அரசாணி மாலையையும், புலந்திரன் தூதுவையும், இறவுகல்கூல் படைப்போரையும், நல்லதங்காள் கதையையும், பவளக்கொடி மாலையையும், பஞ்சபாண்டவர் வனவாசத்தையும் கருணானந்த சுவாமிகள் வெளியிட்டார்.

குறிப்பு

1870இல் கான்சாயுடு சண்டை, ஸ்ரீராமர் சீதாதேவி போன்ற நூல்களையும், கேசவ முதலியார் துரோபதை குறத்தையும் வெளியிட்டனர். ஆறுமுக சுவாமிகள் 1873இல் காத்தவராயன் கதையையும், பரசுராம முதலியார் கோவலன் கதையையும் வெளியிட்டனர். 1874இல் மின்னொளியாள் குறம், வித்வான் குறம், சிறுத்தொண்ட பக்தன் கதை, பொன்னுருவி மசக்கை, கர்ண மகாராஜன் சண்டை, புலந்திரன் களவு மாலை போன்றவை அச்சாயின. 1877இல் ஏணியேற்றமும், 1885இல் ஆரவல்லி சூரவல்லி கதையும், 1878இல் அல்லி மகாராஜன் கதையும், தர்மர் அசுவமேத அம்மானையும், 1893இல் விராடபர்வ அம்மானையும், 1895இல் அபிமன்னன் சண்டையும் வெளிவந்தன.

1934இல் கட்டபொம்முதுரை கதையும், 1934இல் நீலிக் கதையும் அச்சேறின. நா. வானமாமலை 1967இல் வீணாதி வீணன் கதையையும், 1971இல் முத்துப்பட்டன் கதை, கான்சாகிபு சண்டை, காத்தவராயன் கதை, வீரபாண்டிய கட்டபொம்மு கதைப்பாடல் ஆகியவற்றையும், 1972இல் கட்டபொம்மு கூத்தையும், 1974இல் ஐவர் ராஜாக்கள் கதையையும் பதிப்பித்தார். ஆறுமுகப் பெருமாள் நாடார் 1967 வாக்கில் ஏறக்குறைய பதினைந்துக்கும் மேற்பட்ட கதைப்பாடல்களைப் பதிப்பித்தார். அவற்றுள் தோட்டுக்காரி அம்மன் கதை, சுடலைமாடன் கதை போன்றவை குறிப்பிடத்தக்கவை.

சக்திக்கனல் 1971இல் அண்ணன்மார் சுவாமியைப் பதிப்பித்தார். டாக்டர் தி. நடராஜன் 1976இல் குருசாமி கதை, 1977இல் வன்னியடி மறவன் கதை, தம்பிமார் கதை போன்றவற்றைப் பதிப்பித்தார். டாக்டர் சு. சண்முகசுந்தரர் 1974இல் ஈனமுத்துப் பாண்டியன் கதையையும், 1976இல் மெச்சும்பெருமாள் பாண்டியன் கதையையும், 1984இல் நீலிக்கதை, தேசிங்குராஜன் கதை, மதுரைவீரன் கதை ஆகியவற்றையும் பதிப்பித்தார். 1977இல் லாரன்ஸ் நாயகம் வன்னிராசன் கதையையும், 1983இல் ஏ.என். பெருமாள் வெள்ளைக்காரன் கதையையும் பதிப்பித்தனர். அண்மைக் காலத்தில் ஓலைச்சுவடிகளில் இருந்து பலப்பல கதைப்பாடல்களை ஆ. தசரதன், மோ.கோ. கோவைமணி மற்றும் சு. தாமரைபாண்டியன் ஆகியோர் பதிப்பித்து வருகின்றனர்.

குறிப்பு

இவ்வாறு கதைப்பாடலின் பதிப்புகள் கணக்கற்ற முறையில் அமைந்துள்ளன. நாட்டுப்புறவியலிலேயே கதைப்பாடல் துறை மிகவும் ஆரோக்கியமாக உள்ளது. தமிழில் மு. அருணாசலம் 'Ballads' என்ற நூலில் 1976இல் கதைப் பாடல்களைப் பற்றிய ஆய்வினை வைத்தார். சு. சண்முகசுந்தரம் 1980இல் கதைப்பாடலின் வரலாற்றை ஆராய்ந்தார். கோ. கேசவன் 1985இல் கதைப்பாடலும் சமூகமும் என்ற நூலிலும் 1987இல் புராணச் சார்புக் கதைப்பாடல்களில் ஆண்பெண் உறவுநிலை என்ற நூலில் கதைப்பாடல் பற்றிய ஆழமான ஆய்வுகளைச் செய்துள்ளார். 1987இல் ஏ.என். பெருமாள் கதைப்பாடல்கள் பற்றிய ஒரு ஆய்வு நூல் வெளியிட்டுள்ளார். 2016இல் மோ.கோ. கோவைமணியின் தமிழில் கதைப்பாடல் சுவடிகள் என்னும் நூலில் உதயத்தூர் புலைமாடத்தி வரத்து, சிறுத்தொண்டன் கதை - வில்லுப்பாட்டு, சின்னத்தம்பி கதை, தேவமாதா அம்மானை, முத்துநாச்சி சண்டை, வல்லான் காவியம் போன்றவற்றை ஆய்வு செய்துள்ளார்.

## 3.5.4. நாட்டுப்புறப் பழமொழிகள்

நாட்டுப்புற இலக்கியத்துள் பாடல்களும், கதைகளும், கதைப்பாடல்களும் வெளிவந்ததைப் போன்றே பழமொழி தொகுப்புகளும் தமிழில் அச்சாகியுள்ளன. ஏட்டிலக்கியமான தொல்காப்பியம், சங்க கால இலக்கியங்கள், சங்கம் மருவிய கால இலக்கியங்கள் ஆகியவற்றில் பழமொழிகள் பயன்படுத்தப்பட்டு வந்துள்ளன என்பதை அந்நூல்கள் வழி அறியலாம். இவை தவிர தமிழ் ஓலைச்சுவடிகளில் உள்ள பழமொழிகளும் வெளியிடப்பட்டுள்ளன. இவற்றைத் தொடர்ந்து 'தமிழகப் பழமொழிகள்' எனும் நூலை பெ. பெரிசிவல் பாதிரியார் 1842இல் வெளியிட்டார். 1861இல் கே.என். லெட்சுமணன் காரைக்குடியிலிருந்து 'தமிழகப் பழமொழிகள்' என்னும் நூலை வெளியிட்டுள்ளார். டபுள்யு. லாரி 'பழமொழிகள்' என்னும் நூலை 1870லும், எஸ். வேணுகோபால் நாயுடு பழமொழிப் புத்தகம் என்னும் நூலை 1877லும், க. கருப்பண்ண பிள்ளை பழமொழித் திரட்டு என்னும் நூலையும், தி. செல்வகேசவராய முதலியார் இணைப் பழமொழிகள் என்ற நூலை 1899லும், சோமலே 'கோயம்புத்தூர் மாவட்டம்' என்ற

குறிப்பு

நூலுள் கோவை மாவட்டத்துப் பழமொழிகள் பற்றியும் விளக்கியுள்ளார். ப. இராமஸ்வாமி உலகப் பழமொழிகள் என்னும் நூலை எழுதியுள்ளார்.

1902இல் G.V. பார்த்தசாரதிப் பிள்ளை பழமொழிகளைத் திரட்டினார். 1923இல் அனவரதநாயகம் பழமொழி அகராதி உருவாக்கினார். 1946இல் கஸ்தூரி திலகம் 1001 அபூர்வ பழமொழிகளைத் தொகுத்தார். 1952இல் சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் பழமொழிகளை அகர வரிசை செய்தது. 1955இல் பண்டிதர்சுப்பிரமணிய நாவலர் பழமொழிகளைத் திரட்டினார். 1957இல் வி.நந்தகோபாலன் பழமொழிகளைக் கொத்தாக்கினார். 1960இல் எஸ்.கே. சாமி தமிழ்நாட்டுப் பழமொழிகளைத் தொகுத்தார். 1961இல் கே.எஸ். லெட்சுமணனும் அவ்வாறே செய்தார். 1964இல் இவர் உயிர் இனங்கள் பற்றிய பழமொழிகளைத் தொகுத்தார். 1965இல் புலவர் செந்துறை முத்து பழமொழிகளைப் பண்பாட்டின் அடிப்படையிலும், பூவை எஸ். ஆறுமுகம் 1966இல் பகுத்தறிவு அடிப்படையிலும், கே.எஸ். லெட்சுமணன் 1967இல் வாழ்வியல் அடிப்படையிலும் தொகுத்தனர். ஏ. சுலைமான் ஆயிரம் பழமொழிகளைத் தொகுத்து வெளியிட்டார். ப. ராமஸ்வாமி குடும்பப் பழமொழிகளை 1969லும், தமிழ்வாணன் 1976இல் ஒரு குத்து மதிப்பாகவும் தொகுத்தனர். வேளாண்மைப் பழமொழிகளை இல.செ. கந்தசாமி 1976இல் தொகுத்தார். 1980இல் இதையே டாக்டர் ந.வீ. ஜெயராமனும் செய்தார். 2002இல் முத்துக்குமரன் பழமொழிகள் 5000 எனும் நூலை வெளியிட்டுள்ளார். டாக்டர் சாலை இளந்திரையன் சமுதாய நோக்கில் பழமொழிகளை 1975இல் ஆய்ந்து வெளியிட, வ. பெருமாளும் 1987இல் பல நோக்கில் பழமொழிகளை ஆராய்ந்து வெளியிட்டார். 1988இல் எஸ். சௌந்தரபாண்டியனின் ‘தமிழில் பழமொழியும் இலக்கியமும்’ குறிப்பிடத்தக்க ஆய்வு நூலாகும்.

இவற்றைப்போல் பல பழமொழி நூல்கள் வெளியிடப்பட்டுள்ளன. இவை தவிர, இதழ்களிலும், பத்திரிக்கைகளிலும் பழமொழி பற்றிய கட்டுரைகளும் செய்திகளும் வெளியாகியுள்ளன.

### 3.5.5. நாட்டுப்புற விடுகதைகள்

பழமொழிகளைப் போன்றே விடுகதைகள் பற்றிய குறிப்புகள் ஏட்டிலக்கியத்தில் வெளியாகி இருந்தாலும், விடுகதைகள் பற்றிய

செய்திகளாக இதழ்களிலும், பத்திரிக்கைகளிலும் வெளியிடப்பட்டுள்ளன. பதினெட்டாம் நூற்றாண்டு வரை புலவர்கள் செய்யுளில் விடுகதையைக் கூறி வந்தனர். பாமரர்கள் உரைநடை கலந்த பாடல்களில் விடுகதையைக் கூறி வந்தனர். பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஐரோப்பியர் தொடர்பால் தமிழ்நாட்டிலும் பாமரர்களின் விடுகதைகளைத் தொகுக்கும் எண்ணமும் இலக்கியமும் தோன்றின. இருபதாம் நூற்றாண்டில்தான் விடுகதைகள் ஆர்வத்துடனும் அக்கறையுடனும் தமிழகத்தில் தொகுக்கப்பட்டன.

1877இல் அருணாசல முதலியார் விடுகதைகளை ‘இருசொல் அலங்காரம்’ என்ற பெயரில் தொகுத்தார். 1877இல் பெருமாள் நாடார் ‘இருசொல் அலங்காரமும் முச்சொல் அலங்காரமும்’ என்ற நூலை வெளியிட்டார். 1892இல் முனுசாமி முதலியார் வினோத விடுகதைகளைத் தொகுத்தார். 1897இல் விவிலிய விடுகதைகளும் வெளியாயிற்று.

1933இல் குப்புசாமி நாயுடு விவேக விளக்க விநோத விடுகவி பொக்கிஷம் என்ற நூலையும், 1940இல் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் சிறுவர்க்கான விடுகதைப் பாட்டுகளையும் வெளியிட்டனர்.

விவேக சிந்தாமணி, ஜன விநோதினி, பஞ்சாமிர்தம், கலாநிலையம், செந்தமிழ்ச் செல்வம், தமிழரசு, தாமரை, முல்லைச்சரம் போன்ற இதழ்கள் விடுகதைகளை வெளியிட்டன. இவற்றைத் தொடர்ந்து ராணி, புலமை, புதுவெள்ளம் போன்ற இதழ்களும் விடுகதைகளை வெளியிட்டன. இவற்றிற்கு அடுத்து வெ. சுந்தரம் பிள்ளை இருசொல் அலங்காரம், முச்சொல் அலங்காரம் என்ற நூலை வெளியிட்டார். இவரைத் தொடர்ந்து அ. சிவசிதம்பரம் பிள்ளை ‘விசித்திர வினாவிடை’ என்ற நூலையும், விட்லாபுரம் வெங்கட்ராய ரெட்டியார் விடுகவித் திரட்டு என்ற நூலையும், அ.அ. சுப்பராயப் பிள்ளை ‘மடவார் தோழி’ என்ற நூலையும், இராமசாமி ரெட்டியார் விடுகவி மஞ்சரியும், விநோத விடுகதைகளும் என்ற நூலையும் வெளியிட்டுள்ளனர். இவற்றிற்குப்பின் பூர்ணிமா சகோதரிகள் ‘தமிழ்நாட்டு விடுகதைகள்’ என்ற நூலையும், பி.ஜி.எஸ். மணியன் விநோதப் புதிர்கள் என்ற நூலையும் வெளியிட்டனர். இவற்றிற்குப் பின் ச.வே. சுப்பிரமணியன் ‘தமிழில் விடுகதைகள்’ என்ற

குறிப்பு

நூலினை வெளியிட்டார். 1982இல் 'காதலர் விடுகதைகள்' என்ற நூலினை ஆறு. இராமநாதன் வெளியிட்டார். இவரே 1978இல் தமிழில் புதிர்கள் ஓர் ஆய்வு என்ற ஆய்வு நூலையும் வெளியிட்டார். இவற்றைப் போன்று காலந்தோறும் இன்றுவரை பல விடுகதைத் தொகுப்புகள் வெளிவந்து கொண்டே இருக்கின்றன.

## முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

5. முதன் முதலில் தமிழக நாட்டுப்பாடல்களைத் தொகுத்த ஆங்கிலேயர் யார்?
6. கொந்தலகான் வெளியிட்ட கதைப்பாடல் எது?
7. பெர்சிவல் பாதிரியார் வெளியிட்ட நூல் பெயர் யாது?
8. விடுகதைகளை வெளியிட்ட தமிழக இதழ்கள் நான்கினைக் குறிப்பிடுக?

## 3.6. தொகுத்துக் காண்போம்

- உலகளவில் நாட்டுப்புறவியல் தோன்றியது பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- இந்திய அளவில் காஷ்மீர், இமாசலப்பிரதேசம், பஞ்சாப், உத்தரப்பிரதேசம், பீகார், மேற்கு வங்காளம், அசாம், ஒரிசா, மத்தியப்பிரதேசம், இராஜஸ்தான், குஜராத், மஹாராஷ்டிரம், ஆந்திரபிரதேசம், கர்நாடகம், கேரளம் ஆகிய பகுதிகளில் நாட்டுப்புறவியல் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- தமிழகத்தில் நாட்டுப்புறவியல் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- நாட்டுப்புறவியல் வகைகளின் அச்சுத் தோற்ற நிலைகள் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.

## 3.7. முன்னேற்றத்தைச் சோதிக்கும் வினாக்களுக்கான விடைகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | 3.3.3. | 2. | 3.3.6. |
| 3. | 3.3.13. | 4. | 3.3.14. |
| 5. | 3.4.1. | 6. | 3.4.3. |
| 7. | 3.4.4. | 8. | 3.4.5. |

குறிப்பு

## 3.8. பாடம் பயின்றபின் செய்யும் பயிற்சிகள்

1. இந்திய நாட்டுப்புறவியல் பற்றிக் கட்டுரை வரைக.
2. தமிழக நாட்டுப்புறவியல் பற்றிக் கட்டுரை வரைக.
3. தமிழக நாட்டுப்புறவியல் வகைகளில் ஏதேனும் இரண்டினை விவரிக்கவும்.

## 3.9. மேலும் பயில்வதற்கான நூல்கள்

1. சு. சண்முகசுந்தரம், நாட்டுப்புறவியல், காவ்யா பதிப்பகம், சென்னை, மூன்றாம் பதிப்பு 2003.

2. சற்குணவதி, தமிழக நாட்டுப்புறவியல், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2004.

# கூறு 4.

# ஏட்டிலக்கியங்களுள் நாட்டுப்புற இலக்கியத் தாக்கம் - சங்க இலக்கியங்களில் நாட்டுப்புற இலக்கியக் கூறுகள்

## 4.1. முன்னுரை

காலங்காலமாக நாட்டுப்புற இலக்கியம் மக்கள் மத்தியில் செல்வாக்குப் பெற்று வளர்ந்து வந்தாலும், அவைகள் ஏட்டிலக்கியங்களில் அமையும் போதுதான் அதற்கான சிறப்பினை எக்காலத்தவரும் அறிய முடிகிறது. இந்நிலையில் சங்க காலம் தொடங்கி இக்காலம் வரை வளர்ந்த ஏட்டிலக்கியங்களில் நாட்டுப்புற இலக்கியத்தின் செல்வாக்கு எவ்வாறெல்லாம் இடம்பெற்றிருக்கிறது என்பது பற்றி அறிந்துகொள்ள இப்பகுதி உதவுகிறது.

## 4.2. குறிக்கோள்கள்

குறிப்பு

- ஏட்டிலக்கியங்களில் நாட்டுப்புற இலக்கியங்களின் தாக்கங்கள் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- சங்க இலக்கியத்தில் நாட்டுப்புறக் கூறுகள் இடம்பெற்றுள்ளதைப் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.

## 4.3. ஏட்டிலக்கியங்களுள் நாட்டுப்புற இலக்கியத் தாக்கம்

தமிழிலக்கிய வரலாற்றில் ஏட்டிலக்கியம் என்று கொண்டோமானால் சங்க இலக்கியம், பதினெண் கீழ்க்கணக்கு, காப்பியங்கள், பக்தி இலக்கியம், சிற்றிலக்கியம், இக்கால இலக்கியம் என்று பகுத்துக் கொள்ளலாம். இவற்றில் சங்க இலக்கியத்திற்குத் தனித் தலைப்பில் எடுத்துரைக்கப்படவிருப்பதால் ஏனையவற்றை மட்டும் இங்குக் காணலாம்.

### 4.3.1. பதினெண் கீழ்க்கணக்கு

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் நாட்டுப்புறப் பாடல்களின் செல்வாக்கு இல்லை. காரணம், அவை அதிக அளவில் நீதி இலக்கியமாக அமைந்ததுதான். எனவே, நாட்டுப்புற இலக்கியத்தில் ஒரு வகையான பழமொழியின் செல்வாக்கு பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் அதிகம் காணப்படுகிறது. பழமொழி நானூற்றிலும், திருக்குறளிலும் பழமொழிகளின் செல்வாக்கினை அறியலாம்.

*"அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்*
*கடுத்தது காட்டும் முகம்"*

என்ற திருக்குறளிலும்,

*"நாய்பெற்ற தெங்கல் பழம்"*

*"நிறைகுடம் நீர்த்தளும்பல் இல்"*

ஆகியன பழமொழி நானூற்றிலும் காணலாம். திருக்குறளின் தாக்கத்தை நாம் பழமொழியில் காண்கிறோம். நாலடியாரின் தொடர்கள் பல நாட்டில் வழங்கிய பழமொழிகளாகவே தோன்றுகின்றன. அவை, பழமொழி நானூற்றில் பழமொழிகளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மற்றும் இன்னா நாற்பது, இனியவை நாற்பது, திரிகடுகம் போன்ற நூல்களிலும் பழமொழிகள் சில இடம்பெற்றுள்ளன.



## 4.3.2. காப்பியங்கள்



இலக்கிய வரலாற்றில் காப்பியக் காலம் என்பது ஒரு நீண்ட நெடிய காலம். கவிதைகளின் செல்வாக்குக் குறைந்து கதைகளின் செல்வாக்கு மிகுந்த காலம். தன்னுணர்ச்சியைத் தள்ளிவிட்டுச் சமுதாய உணர்ச்சிக்குத் தாவிய காலமே காவிய காலம். இக்காப்பியங்களிலும், நாட்டுப்புறப் பாடல்களின் செல்வாக்குகள் நிறைந்துள்ளன. ஐம்பெருங்காப்பியங்கள் ஒரு பகுப்புக்குள் அடங்க மறுத்து, இராமாயணம், மகாபாரதம், புராணம், வெண்பா என்று பல்கத் தொடங்கின. அனைத்துக் காப்பியங்களிலும் நாட்டுப்புறப் பாடல்களின் செல்வாக்கினைக் காணலாம்.

## 4.3.3.1. சிலப்பதிகாரம்

சிலப்பதிகாரத்தில்தான் நாட்டுப்பாடல் இலக்கிய நிலை அடைந்தது எனலாம். சிலம்பு தரும் வரிப்பாடல்கள் நாட்டுப்பாடலே யாகும். குரவைப் பாடல்களும் இந்நிலையில் அமைந்தவையே. கானல் வரியானது, ‘திங்கள் மாலை வெண்குடையான்’ என்றும், வேட்டுவ வரியானது, ‘கொற்றவை கொண்ட அணிகொண்டு’ என்றும், ஊர்சூழ் வரியானது, ‘பட்டேன் படாத துயரம்’ என்றும், அம்மானை வரியானது, ‘வீங்கு நீர்வேலி உக்காண்டு’ என்றும், கந்துக வரியானது, ‘பின்னும் முன்னும் எங்கணும்’ என்றும், ஊசல் வரியானது, ‘ஒரைவரைம் பதின்மர் உடன் றெழுந்து’ என்றும் தொடங்குகின்றன.

இவற்றில் ஊர்சூழ் வரியானது ஒப்பாரியையும், அம்மானை வரியானது சுழற்சிப் பாடலையும், கந்துக வரியானது பந்தாட்டப் பாடலையும், ஊசல் வரியானது ஊஞ்சல் பாடலையும் நினைவூட்டுகின்றன.

கோவலன், கண்ணகியைக் காதல் மீதூறப் புகழ்ந்து பாடும் ‘மழையிடைப் பிறவா மணியே என்கோ’ என்ற பாடல் தெம்மாங்குச் சுவையுடன் விளங்குகின்றது. சிலம்பில் வள்ளிக்கூத்து, துணங்கைக்கூத்து போன்ற நாடோடி நடனங்களும், சில நாடோடிக்

கதைகளும், சில நம்பிக்கைகளும், பழக்க வழக்கங்களும் நாட்டுப்புறச் செல்வாக்குடன் விளங்குகின்றன.

குறிப்பு

### 4.3.3. பக்தி இலக்கியம்

பக்தி என்பது தன்னை மறந்த லயம், தன்னில் மறந்த லயம் தலைவனைத் தேடும் லயம், தலைவனின் தேடும் லயம். தேவார திருவாசகங்களும், நாலாயிரத் திவ்வியப் பிரபந்தங்களும் இவ்வகையிலேயே அமைந்துள்ளன. இப்பக்தி இலக்கியங்களில் பாமர இலக்கியத்தின் செல்வாக்கு மிகவே உண்டு. இறைவனின் அன்பில் உருகிப் பாடிய நாயன்மார்களும், ஆழ்வார்களும் நாட்டுப்பாடல் உத்தியைக் கையாண்டு உள்ளனர். திருப்பாவையும், திருவெம்பாவையும் நாட்டுப்பாடலின் திருந்திய வடிவங்கள். பெரியாழ்வார் பாடிய அச்சோபத்தும் நாட்டுப்பாடல் சாயலைக் கொண்டது. குலசேகராழ்வாரின் தாலாட்டு நாட்டுப் பாடலின் வளர்ச்சிக்கு ஒரு எடுத்துக்காட்டு. தன்னைத் தாயாக்கி இராகவனைத் தாலாட்டுகின்றார். மாணிக்கவாசகர் அனைவருள்ளும் முன்னோடியாய் நிற்கின்றார்.

உணர்ச்சியினால் உந்தப்பட்டுப் பாடிய தாலாட்டும் சபதமும் பிற பாடல்களும் தேவாரம், பிரபந்தம் போன்ற இலக்கியங்களில் இடம்பெற்று உள்ளதைக் காண்கிறோம். தேவாரப் பாடல்கள் எல்லாம் கூட்டுப் பாடல்களே. நாயன்மார்கள் பக்தி இயக்கத்தைப் பரப்பும் போது தங்களோடு தொண்டர்களையும் அழைத்துச் செல்வர். அப்போது அவர்கள் பாடும் பாடல்கள் நாட்டுப்புறப் பாடல்களின் பண்புகளான எளிமை, இனிமை, திரும்பவரல் ஆகியவற்றைக் கொண்டு விளங்கின.

சுந்தரர், 'பந்தும் கிளியும் பயிலும் பாவை' என்று பந்து விளையாடுதலையும், 'வரிபுரி பாட' என்று வரிப்பாடலையும், 'அருங்கை நெல்லியின் பழம், பஞ்சிலிடப் பட்டில் சீறுமோ' என்ற பழமொழிகளையும் தம்முடைய பாடல்களில் நாட்டுப்புற இலக்கியச் செல்வாக்கைக் காட்டியுள்ளார்.

அப்பர், 'பழமொழி' என்ற ஒரு பதிகத்தில் பத்துப் பாடல்களில் பழமொழியை இறுதியில் பெய்து பாடியுள்ளார். குறிப்பாக,

*"கனியிருக்கக் காய்கவர்ந்த கள்வனேன்*

*முயல்விட்டுக் காக்கைப்பின் போன வாரே"*

என்பது போன்ற பழமொழிகள் நிறைந்துள்ளன.

மாணிக்கவாசகர், கவிதை அளவில் பொதுமக்களைத் தொடுவதற்காகத் தெம்மாங்குப் பாடல்களை முன் மாதிரியாகக் கொண்டுள்ளார். இவரின் பாடல்களில் மகளிர் விளையாட்டை உணர்தும் பல செய்யுட்கள் அமைந்துள்ளன.

*"செங்கண் நெடுமாலும் சென்றிடந்துங் காண்பரிய*
*பொங் மலர்ப்பாதம் பூதலத்தே போந்தருளி*
*எங்கள் பிறப்பறுத்திட் டெந்திரமும் ஆட்கொண்டு*
*தொங்கு திரள்சோலைத் தென்னன் பெருந்துரையான்*
*அங்கணன் அந்தணனாய் அறைகூவி வீடருளும்*
*அங்கருணை வார்கழலே பாடுதுங்காண் அம்மானாய்"*

என்று திருவம்மானையில் மாணிக்கவாசகர் பாடுகிறார். சிலம்பில் அம்மானை வரி என்பது இங்குத் திருவம்மானை என்று ஆகியுள்ளது. அரசைப் பாடிய நிலை மாறி ஆண்டவனைப் பாடும் நிலை வந்தபோது, இம்மகளிர் பாட்டு மிகச் செல்வாக்குற்றது எனலாம்.

*"கூவுமின் தொண்டர்புறம் நிலாமே*
*குனிமின் தொழுமின் எம்கோன் எம்கூத்தன்*
*தேவியும் தானும் வந்து எம்மையாயச்*
*செம்பொன் செய்சுண்ணம் இடித்து நாமே"*

என்று திருப்பொற் சுண்ணத்தில் பாடுகிறார். இது வள்ளைப் பாட்டின் பிறிதொரு உருவம். இதை உரற்பாட்டு, உலக்கைப்பாட்டு எனவும் அழைப்பதுண்டு. காதலில் இருந்து பக்திக்கு மாறியதை அறிகிறோம். இது ஆண்டவனுக்கு வாசனைப்பொடி இடிக்குங்கால் பாடும் திருப்பாட்டாக அமைந்துள்ளது. திருத்தெள்ளேணம், திருச்சாழல் போன்றவையும் நாட்டுப்புற இலக்கியச் சாயலைக் காணலாம்.

ஆழ்வார்களில் பெரியாழ்வார், குலசேகர ஆழ்வார், நம்மாழ்வார், ஆண்டாள் ஆகியோரின் பாடல்களில் நாட்டுப்புற இலக்கியச் செல்வாக்குகள் அதிகமுண்டு.

குறிப்பு

தாம் தாயாயிருந்து முழுமுதற் பொருளான இறைவனையே குழந்தையாக ஏந்தியெடுத்துத் தாலாட்டுப் பாடி, அதன்மேல் அடியவர் உள்ளமெல்லாம் அன்பு வெள்ளம் கரை கடந்தோடியும் தமிழ் இலக்கியம் பல துறையிலும் விரிந்து வளரவும், புதுவழி வகுத்தவர் பெரியாழ்வார் ஆவார்.

*"மாணிக்கம் கட்டி வயிரம் இடைகட்டி*
*ஆணிப்பொன்னால் செய்த வண்ணச் சிறுதொட்டில்*
*பேணி உனக்குப் பிரமன் வீடுதந்தான்*
*மாணிக் குறளனே தாலேலோ*
*வைய மளந்தானே தாலேலோ"*

என்று பெரியாழ்வார் கண்ணனைக் குழந்தையாக பாவித்துப் பாடுகின்றார். பெரியாழ்வாரின் வளர்ப்பு மகளான ஆண்டாளும் நாட்டுப்புறப் பாடலான பாவைப் பாடலைப் பாடுகின்றார்.

*"எல்லே இளங்கிளியே*
*இன்னும் உறங்குதியோ*
*மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளில்*
*நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர்*
*சீர்மல்கும் ஆய்பாடிச் செல்வச் சிறுமீர்"*

என்ற பாவைப் பாடல் நாட்டுப்புறப் பாடல்களின் சிறப்புப் பாதிப்புகளாகும்.

## 4.3.4. சிற்றிலக்கியங்கள்

நாட்டுப்புற இலக்கியத்தின் செல்வாக்கானது சிற்றிலக்கியங்களிலும் சிறப்பாக இடம்பெற்றுள்ளது. பள்ளு, குறவஞ்சி என்ற இரு இலக்கியங்களிலும் நாட்டுப்புற இலக்கியமே என்று சொல்லும் வகையில் செல்வாக்குற்று, நாட்டுப்புற இலக்கியத்தையே மூலமாகக் கொண்டு முளைவிட்டவை. ஏனையவற்றில் நாட்டுப்புற இலக்கியத்தின் கூறுகளையும், குறிப்புகளையும் காணலாம். இலக்கைய வகையான அம்மானை, தூது, மாலை, நொண்டி நாடகம், பள்ளு, குறவஞ்சி முதலியவையும் நாடோடிப் பாடல்களையே ஆதாரமாகக் கொண்டு திருத்தி அமைக்கப்பட்டவையே யாகும்.

குறிப்பு

## 4.3.5. இக்கால இலக்கியம்

எமக்குத் தொழில் கவிதை என்று இறக்கும் வரை கவிதை எழுதிக் குவித்தவர் பாரதியார். இவர் பாட்டு, உலக்கைப் பாட்டு, சாந்திடிக்கும் பாட்டு, பெண்கள் பாட்டு, கும்மிப் பாட்டு போன்ற நாட்டுப்புறப் பாடல் வடிவங்களில் ஏராளமான பாடல்களை எழுதிக் குவித்தவர். பாரதிதாசன் பாரதியாரைச் 'சிந்துக்குச் சிகரம்' எனப் போற்றுகின்றார்.

*"நெஞ்சு பொறுக்கு தில்லையே - இந்த*
*நிலைகெட்ட மனிதரை நினைத்துவிட்டால்*
*அஞ்சி யஞ்சிச் சாவார் - இவர்*
*அஞ்சாதப் பொருளில்லை அவனியிலே"*

என்று நொண்டிச் சிந்து பாடுகின்றார். பள்ளர்கள், வயலில் தங்கள் களைப்பை மறக்கப் பாடி வரும் பள்ளிசையைப் பாரதியார், விடுதலை வேள்விக்கு நெருப்பாக்குகிறார்.

*"ஆடுவோமே பள்ளு பாடுவோமே*
*ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோமென்று"*

என்று பாடும் போது, ஆடாத கால்களில்லை, அசையாத மனங்களில்லை. "பாரதியைப் பாரதக் கவிஞன் என்பதைவிட பாமரர் கவிஞன் என்றும் நாட்டுப் புலவன் என்பதைவிட நாட்டுப்புறப் புலவன் என்பதுதான் மிகப் பொருந்தும்" என்கிறார் டாக்டர் சு. சண்முகசுந்தரம்.

பாரதிக்குப் பிறகு பாரதிதாசன் பாடல்களில் சிந்துப்பாடல்கள் பலவற்றைப் பாடிச் சென்றுள்ளார்.

*"அன்னவோர் மேடையிலே - திரை*
*ஆழ்ந்த மறைவினிலே*
*மின்னொளி கேட்டிருப்பாள் - கவி*
*வேந்தன் உரைத்திடுவான்"*

என்று சிந்தித்துக் கண்ணிகளைப் பாடுகின்றார். பாரதிக்குப் பின்வந்த பாரதிதாசன் பாரதியைப் போன்று நாட்டுப்புறப் பாடலால் கவரப்பட்டு,

அதன் செல்வாக்கால் அவரைப் போன்றே எல்லா வகைப் பாடலையும் பாடுகிறார். இவரது ஏற்றப் பாடல்கள் ஏற்றமிக்கன எனலாம்.

குறிப்பு

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கவிஞர்களில் ஒருவராக ஒளிவிடுபவர் கவியரசு கண்ணதாசன். இவர் பாடாத பொருளில்லை. படைக்காத இலக்கிய வகைகளில்லை. இவரது பாடல்களைத் திரைப்படப் பாடல்கள் என்றும், முறைப்பாடல்கள் என்றும் இருவகையாகப் பகுப்பினும் இரு பகுப்பினிலும் நாட்டுப்புற இலக்கியச் செல்வாக்கினை அறிந்து கொள்ளலாம்.

*“ஏன் பிறந்தாய் மகனே*
*ஏன் பிறந்தாயோ*
*இல்லையொரு பிள்ளையென்று*
*ஏங்குவோர் பலர் இருக்க*
*இங்குவந்து ஏன் பிறந்தாய்”*

என்று தாலாட்டுப் பாடுகிறார் கண்ணதாசன்.

*“மலடி மலடியென்று வையகத்தார் பேசாமல்*
*பிள்ளைக்கலி தீர்க்கவந்த, பெருமானே கண்ணுறங்கு”*

என்ற நாட்டுப்புறத் தாலாட்டினைக் கவிஞர் அப்படியே பாடலாக வடித்துள்ளார்.

*“சாலையிலே ரெண்டு மரம் சாமிதுரை வச்சமரம்*
*எல்லோர்க்கும் ஏத்தமரம், உனக்குத்தாண்டா தூக்குமரம்”*

என்ற தெம்மாங்குப் பாடலைக் கவிஞர் சிறிது மாற்றத்துடன் திரைப்பாடலாக உருவாக்கியுள்ளார்.

*“உறவைச் சொலி அழுவதனாலே*
*உயிரை மீண்டும் தருவானா”*

என்று கவியரசு கண்ணதாசன் பாடியுள்ளார்.

## முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

1. பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் இடம்பெற்ற நாட்டுப்புற இலக்கிய வகை எது?

*Self-Instructional Material*

2. அப்பர் பாடிய நாட்டுப்புற இலக்கியம் வடிவம் யாது?
3. நாடோடிப் பாடல்களை அடியொற்றி எழுந்த சிற்றிலக்கியங்கள் யாவை?
4. நாட்டுப்புறப்பாடல் சாயல் அமைந்த கண்ணதாசன் பாடல் ஒன்றைச் சுட்டுக.

குறிப்பு

## 4.4. சங்க இலக்கியங்களில் நாட்டுப்புற இலக்கியக் கூறுகள்

சங்க இலக்கியமான பத்துப் பாட்டும் எட்டுத்தொகையும் நாட்டுப்புறப் பாடல்களைப் பற்றிய செய்திகளையும், செல்வாக்குகளையும் தெரிவிக்கின்றன. தொல்காப்பியம் கூறும் பண்ணத்தியும் புலனும் சங்க இலக்கியங்களில் காணப்படவில்லை என்றாலும், அதனுடைய கூறுகள் பல உள்ளன.

இந்தச் சங்கப் பாடல்களுக்கிடையிலே இடையிடையே எத்தனையோ நாடோடிப் பாடல்கள் இடம்பெற்றிருப்பதை அறியமுடிகின்றது. 'ஆடியும் பாடியும் அருவியில் திளைத்தும் அகங்குழைந்தும் அவர்கள் கழித்த நாட்கள் அளவிலா. அவர்தம் ஆடலோடாய பாடல்கள் இணைந்து செல்லும் வகையில் கூட்டான நாட்டுப் பாடலாகவே பெரும்பாலும் இருந்தன எனக் காணமுடின்றதன்றோ' என்கின்றார் அ.மு. பரமசிவானந்தம். 'சங்க காலம் பாடல்களுக்குக் கை கொடுக்கக் கூடிய, கிராமியம், தன்னுழைப்பு, கவலையின்மை முதலியவை நிறைந்த காலமாகும். எனவே, நாட்டுப்புறப் பாடல்களை சாகாத்தன்மை பெற்றிருக்கச் சங்க கால வாழ்க்கை நிலை நன்கு அமைந்தது' என்கின்றார் ஆறு. அழகப்பன்.

### 4.4.1. சங்க இலக்கியத்தில் நாட்டுப்புறப் பாடல்கள்

சங்க இலக்கியங்களில் குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்னும் ஐவகை நிலங்களிலும் வாழும் மக்கள் அந்தந்த நிலங்களுக்கு ஏற்ற வகையில் பாடியும் ஆடியும் இன்புறுங் காட்சிகளைக் காண்கிறோம். பாணனும் பாடினியும், கூத்தரும் விறலியும் ஆடிப்பாடி மகிழ்ந்ததையும் மகிழ்வித்ததையும் அறிகிறோம். அவர் ஆடிய போது பாடிய பாட்டுக்கள் கிடைக்கப்பெற்றன. அவர்தம் ஆடலோடு பாடல்கள்

இணைந்து செல்லும் வகையில் கூட்டான நாட்டுப்புறப் பாடலாகவே இருந்திருக்கின்றன எனலாம்.

குறிப்பு

### 4.4.1.1. குறிஞ்சி நிலப் பாடல்கள்

*“வள்உயிர்த் தெள்விளி இடையிடைப் பயிற்றி*
*கிள்ளை ஒப்பியும்”* (குறி.99-100)

*“கிளிகடி மகளிர் விளிபடு பூசல்”* (மலை.329)

என்பவை கிளிகடி மகளிர் பாடல்களைச் சுட்டும்.

*“இன்னும் பாடுக பாட்டே அவர்*
*நல்நெடுங் குன்றம் பாடிய பாட்டே”* (குறுந்.22-23)

என்று குறுந்தொகை மூலம் குன்றைப் பாடும் பாடலை அறியலாம்.

### 4.4.1.2. முல்லை நிலப் பாடல்கள்

*“குரவை தரீஇயாம் மரபுளிப் பாடித்*
*தேயா விழுப்புகழ்த் தெய்வம் பரவுதும்”* (கலி.103:75-76)

என்ற குரவைப் பாடலையும்,

*“பாடுகம், வம்மின் பொதுவன் கொலையேற்றுக்*
*கோடு குறிசெய்த மார்பு”* (கலி.104:64-64)

என்று பெண்டிரின் பாடலையும் முல்லை நிலத்தில் பாடக் கேட்கிறோம்.

### 4.4.1.3. மருத நிலப் பாடல்கள்

*“தமர் பாடும் துணங்கையுள்*
*அரவம் வந்தெடுப்புகே”* (கலி.70:5-6)

என்று துணங்கைப் பாடலையும்,

*“அள்ளல் தங்கிய பகடுஉறு விழுமம்*
*கள்ஆர் களமர் பெயர்க்கும் ஆர்ப்பே”* (மது.256-257)

என்று உழவுப் பாடலையும் மருதநிலத்தில் கேட்கிறோம்.

*“ஒள்ளிஇழை மகளிர் உயர்பிறை; தொழூஉம்*

*புல்லென் மாலை”* (அகம்.239)

*“தொழுதுகாண் பிறையின் தோன்றி யாம்நுமக்கு*
*அரியம் ஆகிய காலைப்”* (குறுந்.178)

குறிப்பு

என்று பிறைதொழும் வழக்கமானது இன்றைய ‘ராவண்டை’ பாடலைக் குறிக்கும். இரண்டாயிரம் ஆண்டுகட்கு மேலாக இருந்து வரும் நாகரிகத்தின் சின்னமாக ராவண்டைப் பாட்டு என்ற நாட்டுப் பாடல் இலக்கியம் மகளிடையே இன்றும் வழங்கி வருகின்றது என்கின்றார் தமிழண்ணல்.

### 4.4.1.4. நெய்தல் நிலப் பாடல்கள்

*“நீர்த்தெவ்வும் நிரைத்தொழுவர்*
*பாடு சிலம்பும் இசை ஏற்றத்”* (மதுரை.89-90)

என்று நீர் இறைப்போர் பாடலையும்,

*“பரதவர் மகளிர் குரவையொ டுஒலிப்ப”* (மதுரை.94)

என்ற குரவைப் பாடலையும்,

*“செய்உயர் ஊசல் சீர்நீஒன்று பாடித்தை”* (கலி.131:21)

என்ற ஊசற் பாடலையும்,

*“மடல் ஊர்ந்து ஒருத்தி*
*அணிநலம் பாடி வரற்கு”* (கலி.141:5-6)

என்ற மடல் பாடலையும நெய்தல் நிலத்தில் கேட்கின்றோம்.

### 4.4.1.5. பாலை நிலப் பாடல்கள்

*“ஆறுஅலை கள்வர் படைவிடை அருளின்*
*மாறுதலை பெயர்க்கும் மருவுஇன் பாலை”* (பொரு.21-22)

என்ற பாடலைப் பாலை நிலத்தில் பாடக் கேட்கிறோம்.

### 4.4.1.6. நாட்டுப்புறச் சாயல்

நாட்டுப்புறப் பாடல்களில் ராசாத்தி, தங்கரத்தினமே என்ற சொற்கள் அடிக்கடி மீண்டும் வருவது போன்று ஐங்குறுநூற்றுப் பாடல்களில் வேழம், எருமை, கள்வன் போன்ற சொற்கள் மீண்டும் மீண்டும் வருகின்றன. குறிப்பாக வேழம் என்ற சொல் ஐங்குறுநூற்றுப்

பதின்மூன்றாம் பாடல் தொடங்கி இருபதாவது பாடல் முடிய ஒவ்வொரு பாடலிலும் வேழம் என்ற சொல் வெவ்வேறு நிலைகளில் பயன்படுத்தப்பட்டுள்ளதைக் காணலாம்.

**குறிப்பு**

*"அடைகரை வேழம் வெண்பூப் பகரும்"* (புறம்.13)
*"கொடிப்பூ வேதும் தீண்டி"* (புறம்.14)
*"வேழம் மூதூர் ஊரன்"* (புறம்.15)
*"ஓங்குபூ வேழத்துத் தூம்புடைத் திரள்கால்"* (புறம்.16)
*"புதல்மிசை நுடங்கும் வேழ வெண்பூ"* (புறம்.17)
*"இருஞ்சாய் அன்ன செருந்தியொடு வேழம்"* (புறம்.18)
*"வேழ வெண்பூ வெள்உளை சீக்கும்"* (புறம்.19)
*"காம்புகண் டன்ன தூம்புடை, வேழத்துத்"* (புறம்.20)

என்றவாறெல்லாம் அமைந்திருக்கும். மேலும், நாட்டுப்புறப் பாடல்களில் மூன்றடுக்கி வரும் சொல்நிலையைக் காணலாம்.

*"பறத்தெரு வீதியிலே - கண்ணே அங்கே*
*பறச்சி கூடி நிற்கையிலே*
*இடைத்தெரு வீதியிலே - கண்ணே அங்கே*
*இடைச்சி கூடி நிற்கையிலே*
*வலைத்தெரு வீதியிலே - கண்ணே அங்கே*
*வலைச்சி கூடி நிற்கையிலே"*

என்று மூன்றடுக்கி வருவது போன்று கலித்தொகையிலும் வருவதைக் காணலாம்.

*"பலவுறு நறுஞ்சாந்தும் படுப்பவர்க் கல்லதை*
*மலையுளே பிறப்பினும் மலைக்கவைதா மென்செய்யும்*
*நினையுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே;*
*சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை*
*நீருளே பிறப்பினும் நீர்க்கவைதா மென்செய்யும்*
*தேருங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே;*
*ஏழ்புண ரின்னிசை முரல்பவர்க் கல்லதை*
*யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதா மென்செய்யும்*
*சூழுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே"* (கலி.9)

என்று மும்முறை திரும்பத் திரும்ப வந்திருக்கிறது.



## 4.4.2. ஒப்பாரிப் பாடல்கள்

குறிப்பு

மூவேந்தரும் முற்றுகை இட்டிருந்த அந்த நிலாக் காலத்தின் வெண்மையான நிலா ஒளியில் எங்கள் தந்தையை நாங்கள் பெற்றிருந்தோம். எங்களுடைய மலையையும் பிறர் கொள்ளவில்லை; எங்களிடமே இருந்தது. இந்த நிலாக் காலத்தின் வெண்மையான நிலா ஒளியில் வென்று ஒலிக்கும் முரசினைக் கொண்ட வேந்தர்கள் எம்முடைய மலையைக் கொண்டார். நாங்கள் எங்கள் தந்தையையும் இழந்தோம் என்று பாரியினுடைய மகளிர் தந்தையையும் நாட்டையும் இழந்து பாடிய கையறுநிலைப் பாடலாக,

*"அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவின்*
*எந்தையும் உடையேம்; எம்குன்றும் பிறர்கொளார்;*
*இற்றைத் திங்கள் இவ்வெண் நிலவின்,*
*வென்றுஎறி முரசின் வேந்தர்எம்*
*குன்றும் கொண்டார்;யாம் எந்தையும் இலமே!"* (புறம்.112)

என்ற பாடல் புறநானூற்றில் அமைந்திருக்கிறது.

ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன் இறந்ததைக் கண்ட புலவர் குடவாயில் கீரத்தனார் மிகவும் வருந்தினார். தம் வருத்தத்தை வெளிப்படுத்தும் வகையில், ஒரு முல்லைக் கொடியைப் பார்த்து, "ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன் இறந்ததால், அனைவரும் பெருந்துயரத்தில் உள்ளனர். இந்நேரத்தில் நீ பூத்திருக்கிறாயே? யார் உன் பூக்களைச் சூடப் போகிறார்கள்?" என்று ஒப்பாரிப் பாணியில் கூறுகின்றார். அப்பாடல்,

*"இளையோர் சூடார்; வளையோர் கொய்யார்;*
*நல்யாழ் மருப்பின் மெல்ல வாங்கிப்*
*பாணன் சூடான்; பாடினி அணியாள்;*
*ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த*
*வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை*
*முல்லையும் பூத்தியோ, ஒல்லையூர் நாட்டே?"*(புறம்.242)

என்றமையும்.

## 4.4.3. காதல் பாடல்கள்

குறிப்பு

இலக்கியக் காதலர்கள் சோலையிலும் தினைப்புனத்திலும் சந்தித்து மகிழ்வதுபோல், நாட்டுப்புறக் காதலர்கள் ஆற்றோரம், குளக்கரை, வயற்புறம், தென்னந்தோப்பு முதலிய இடங்களில் சந்தித்து மகிழ்கின்றனர். சங்க இலக்கிய அகத்திணைப் பாடல்களில் இடம்பெறும் பல்வேறு துறைகளை ஒத்த செய்திகள் நாட்டுப்புறப் பாடல்களிலும் இடம்பெறுவதைக் காணலாம். தோழி கூற்று, பாங்கன் கூற்று முதலிய நாட்டுப்புறப் பாடல்களில் பெரும்பாலும் இடம்பெறுவதில்லை. தலைவனும் தலைவியும் நேராகவே பேசிக்கொண்டு தங்கள் காதலை வளர்த்துக் கொள்கின்றனர். நல்லதையும், கெட்டதையும் நேருக்குநேர் எடுத்துச் சொல்லித் தங்கள் விருப்பு வெறுப்புகளை ஒருவருக்கொருவர் வெளியிட்டுக் கொள்கின்றனர். இலக்கியங்களில் பேரிடம் பெற்ற தோழியை நாட்டுப்புறப் பாடல்களில் காணமுடியாது.

காதலுக்கு அடிப்படையாக அமைவனவற்றுள் உடல் அழகும் ஒன்றாகும். உடலால் கவரப்பட்டு உள்ளத்தால் ஒன்றுபட்ட தலைவன் தலைவியர் ஒருவருக்கொருவர் புகழ்ந்து பேசுவதை இவ்விரு இலக்கியங்களிலும் காணலாம். பெண்ணின் அழகுக்கு அழகு தருவது அவளது நீண்டு வளர்ந்த கூந்தல். கூந்தலின் நீளத்திற்கும் செறிவிற்கும் மயில் தோகை உவமையாகக் கூறப்படுவதைக்,

*"கலிமயில் கலாவத் தன்ன இவள்*
*ஒலிமென் கூந்தல் நம்வயி னானே"* (நற்.265)

என்ற பாடல் வரிகளால் அறியலாம். நீண்டு வளர்ந்த கூந்தலை அழகிய முறையில் தூக்கி முடிந்து கொண்டை போட்ட செய்தியையும் இலக்கியத்தில் சுட்டிக் காட்டப்படுகிறது. இதனை,

*"... வாழைப், பூவெனப் பொலிந்த ஓதி"*

என்று சிறுபாணாற்றுப்படை குறிப்பிடுகிறது.

குறிப்பு

## 4.4.3.1. அம்பலும் அலரும்

தலைவனும் தலைவியும் களவு வாழ்க்கையில் ஈடுபடுவதைக் கண்ணுற்ற ஊர் மக்கள் தமக்குள் பேசிக் கொள்வதே அம்பலும் அலருமாகும். களவு வாழ்க்கையில் ஈடுபட்ட தலைவியை ஊர்த்தெருவில் பெண்டிர் சிலரும் பலருமாகக் கூடி நின்று கடைக்கண்ணால் சுட்டி நோக்கி மூக்கின் உச்சியில் சுட்டுவிரல் சேர்த்து அலர் தூற்றினர் என்பதனை நற்றிணையில் வரும் தோழி கூற்று,

*"சிலரும் பலரும் கடைக்கண் நோக்கி*
*மூக்கின் உச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி*
*மறுகிற் பெண்டீர் அம்பல் தூற்றி"* (நற்.149)

என உணர்த்துகிறது. இதே கருத்துடையதாக,

*"கடலோட கல்லுரச*
*கடலுத் தண்ணி மீனொரச*
*உன்னோட நானுரச*
*உலகம் பொறுக்கலையே"*

என்ற நாட்டுப்புறப் பாடல் தலைவி புலம்புவதை எடுத்துரைக்கிறது.

## 4.4.3.2. உடன்போக்கு

களவு வாழ்க்கை வெளிப்பட்டு ஊராரால் அலர் தூற்றப்பட்டு தாயால் கண்டிக்கப்பட்ட தலைவி தன்னுடைய வீட்டை விட்டு வெளியேறக் கருதுகிறாள். அதனால் தன் வீட்டைவிட்டு உடன்போக்கு மேற்கொள்ள முற்படுகிறாள்.

*"சாலை கடந்து வாடி*
*சந்தைப் பேட்டை கடந்து வாடி*
*ஓடை கடந்து வாடி - நாம்*
*ஓடிப் போவோம் ரெங்கூனுக்கு"*

என்ற நாட்டுப்புறப் பாடல் வழி அறியலாம். இதனைக் கண்டோர் கூற்றாக,

*"வில்லோன் காலன கழலே; தொடியோள்*
*மெல்லடி மேலவும் சிலம்பே; நல்லோர்*

*யார்கொல் அளியர் தாமே ஆரியர்"* (குறுந்.7)

குறிப்பு

என்ற குறுந்தொகை பாடல் வழி அறியலாம். அதாவது, மூங்கில் அடர்ந்த காட்டு வழியாக முன்னிச் செல்வோர் இருவரில் வில்லையுடைய இளையவன் காலில் கழல்கள் உள்ளன. வளையலணிந்த மெல்லிய அடிகளையுடையாள் பாதங்களில் சிலம்புகள் உள்ளன. எனவே திருமணமாகாத இவர்கள் இப்படி அச்சமின்றிக் காட்டுவழி தேடிச் செல்கின்றனரே அந்தோ நல்லவர்களாகத் தோன்றும் இவர்கள் யாரோ என்று கூறுகின்றனர் கண்டோர்.

### 4.4.3.3. ஊடல்

ஊடல் என்பது காதலன் காதலியரிடையே நிகழும் அன்புச் சண்டை, தலைவி தனக்கே உரியவளாக அமைய வேண்டும் என்று தலைவனும், அவன் தனக்கு மட்டுமே உரியவனாக விளங்க வேண்டும் என்று தலைவியும் விரும்புவர். ஒருவர் அன்பு இன்னொருவரிடம் செல்வதாக நினைத்தால் கூட உரிமைப் பூசல் முறைத்துவிடும். இத்தகைய அன்புச் சண்டை காதல் வாழ்வுக்குச் சுவையூட்டும். இவ்வாறு உரிமைப்போர் தொடுப்பவர் பெரும்பாலும் தலைவியே ஆவாள்.

*"அம்பணத் தன்ன யாமை ஏறிச்*
*செம்பின் அன்ன பார்ப்புப் பலதுஞ்சும்*
*யாணர் ஊர நின்னினும்*
*பாணன் பொய்யன் பல சூளினனே"* (ஐங்.43)

என்ற மருதத்திணை, தலைவி கூற்றால் தலைவன் பரத்தையர் வீட்டிற்குச் சென்று திரும்ப வருகிறான். தலைவியிடம் தன் நிலைமையை விளக்கிய பொழுது தலைவி மறுத்துக் கூறுவதாக இப்பாடல் அமைகின்றது. இப்பாடல் கருத்தினை,

*"கருப்பு கருப்புண்டு*
*காரங் குத்திப் பேசாதிங்க*
*கருப்பு இனிப்பாகுமே"*

என்ற நாட்டுப்பாடல் வழி அறிகின்றோம்.

குறிப்பு

### 4.4.3.4. பிரிவுத் துன்பம்

காதலர் வாழ்வில் தாங்குவதற்கு ஆற்ற இயலாத துன்பம் ஒருவரை ஒருவர் பிரிந்திருக்கும் போது ஏற்படுவதே பிரிவுத்துன்பம் ஆகும்.

*"சந்தனக் கும்பாவிலே*
*சாதம் போட்டு உன்கையிலே*
*உங்கள நினைக்கையிலே செல்லையா*
*நான் உன்கிரது சாதமில்லை"*

என்று புலம்புகிறாள் நாட்டுப்புறத் தலைவி. இதேபோன்று முல்லைப்பாட்டில் தலைவன் போருக்காகச் சென்றிருக்கும் பொழுது தலைவி தலைவனை நினைத்து அழுது புலம்புகிறாள்.

*"காட்டவுங் காட்டவுங் காணாள் கலுழ்சிறந்து*
*பூப்போ லுண்கண் புலம்பு முத்துறைப்பக்"* ((முல்.22-23)

*". . . . . . . . . . . துயருழந்து*
*நெஞ்சாற்றுப் படுத்த நிறைதடி புலம்பொடு*
*நீடு நினைந்து தேற்றியும் ஓடுவளை திருத்தியும்"* ((முல்.81-82)

என்றெல்லாம் புலம்புவதைக் காணலாம்.

### 4.4.4. நம்பிக்கைகளும் சகுனங்களும்

பண்டைக் காலம் முதல் மனிதன் இயற்கையோடு இணைந்து வாழ்ந்து வருகிறான். இயற்கை மாறுதலுக்கு ஏற்ப மனித மனமும் மாறுபடுகின்றது. இயற்கையோடு இயைந்த மனித வாழ்க்கையில் நம்பிக்கைகள் தோன்றலாயின. 'கூகை அலறினால் சாவு வரும்' என்ற நம்பிக்கை பண்டைத் தமிழரிடையேயும் இன்றும் நிலவி வருவதை அறியலாம். இதனை,

*"அஞ்சுவரு குராஅல் குரலுந் தூற்றும்"*

என்று புறநானூற்று வரி கூறுகின்றது. 'காகம் கத்தினால் விருந்தினர் வருவர்' என்பது அக்காலம் தொட்டு இருந்து வரும் நம்பிக்கை. இதனை,

*"மறுவில் தூவிச் சிறுகருங் காக்கை*
*அன்புடை மரபினின் கிளையோ டார"*

குறிப்பு

என்கிறது குறுந்தொகைப் பாடல் வரிகள். ஏதேனும் நல்ல காரியத்திற்குப் புறப்படும் பொழுது காகம் இடப்பக்கத்திலிருந்து வலப்பக்கம் செல்லுதல் நல்லது என்று நம்புகின்றனர். பண்டைக் காலத்தில் காட்டிடையே மக்கள் செல்லும்போது ஆறலைக் கள்வர் மிகுந்த தொல்லை கொடுத்துக் கொண்டே இருப்பர். ஆறலைக் கள்வர் நடமாட்டத்தைக் 'கணந்துள்' என்ற பறவை சத்தம் எழுப்பி மற்றவர்கக்கு எச்சரிக்கை விடுத்த செய்தியை,

*"ஆற்றய லிருந்த இருந்தோட் டஞ்சிறை*
*நெடுங்காற் கணந்துள் ஆளறி வுறீஇ*
*ஆறுசெல் வம்பலர் படைதலை பெயர்க்கும்"*

என்கிறது குறுந்தொகைப் பாடல் வரிகள். கனவு காணல், பள்ளி செல்லுதல், கண் துடித்தல் பற்றிய நம்பிக்கைகளும் மக்களிடையே காண்கின்றோம். இடது கண் துடிப்பது பெண்களுக்கு நல்லது என்றும், தலைவனை எதிர்நோக்கும் தலைவிக்குக் கண் துடித்தால் தலைவன் விரைவில் வருவான் என்றும் நம்புகின்றனர். இச்செய்திகளை,

*"நல்லெழி லுண்கணு மாடுமா லிடனே"*

என்று கலித்தொகை வரியும்,

*"நுண்ணேர் புருவத்த கண்ணு மாடும்"*

என்று ஐங்குறுநூற்று வரியும் குறிப்பிடும். அடியார்க்கு நல்லார் 'கனாநூல்' பற்றியும் குறிப்பிடுகின்றார். இரவில் காணும் கனவுகளுக்குப் பலன் கூறுவதை இன்றும் மக்களிடையே பழக்கத்தில் உள்ளது. விடியற் காலையில் காணும் கனவு உடனே பலிக்கும் என்று நம்புகின்றனர். தன்னை ஒருவர் நினைத்தால் தும்மல் வரும் என்ற நம்பிக்கை சங்க இலக்கியங்களில் காண்கிறோம்.

*"சென்றவர் உள்ளிய தம்மையர் போலு மடுத்தடுத்து*
*ஒள்ளிய தும்மல் வரும்"*

என்ற ஐந்திணை எழுபதால் உணரலாம். தும்மல் வரும் போது வலது மூக்கு வலித்தால் யாரோ ஏசுகிறார்கள் என்றும், இடது மூக்கு வலித்தால் யாரோ நினைக்கிறார்கள் என்றும் நம்புகின்றனர்.

யாரேனும் ஒரு காரியத்திற்குப் போகும்போது தலைவிரி கோலமாக ஒரு பெண்ணைக் கண்டால் கெட்ட சகுனமாகக் கருதுகின்றனர். இதனை,

*“நெடுநகர் வரைப்பின் விளக்கும் நில்லா”*

என்ற புறநானூற்று வரி உணர்த்தும். ‘பல்லி சொல்லுதல்’ தமிழர்கள் வாழ்வில் முக்கிய இடம் பெற்றுள்ளது. இதனை,

*“பகுவாய்ப் பல்லி படுதொறும் பரவி*
*நல்ல கூறென நடுங்கிப்*
*புல்லென் மாலையொடு பொருங்கொ ரானே”*

என்று அகநானூற்றுப் பாடல் வரிகளும்,

*“நெடுஞ்சுவர்ப் பல்லியும் பாங்கிற் றேற்றம்”*

என்று நற்றிணை வரியும் பல்லி சொல்லுதல் பற்றி எடுத்துரைக்கிறது.

## முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

5. ‘கிளிகடி மகளிர் விளிபடு பூசல்’ எதனை உணர்த்துகிறது?
6. ஒப்பாரிப்பாடலைச் சங்க இலக்கியத்தில் எவ்வாறு குறிப்பிடுவர்?
7. நாட்டுப்புற இலக்கியத்தில் அம்பலும் அலருக்கும் குறித்து குறிப்பு வரைக?
8. நாட்டுப்புற இலக்கியத்திலும் சங்க இலக்கியத்திலும் ஊடல் பெற்ற சிறப்பினை விவரி.

## 4.5. தொகுத்துக் காண்போம்

- ஏட்டிலக்கியங்களில் நாட்டுப்புற இலக்கியம் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- காப்பியங்களில் நாட்டுப்புற இலக்கியத்தின் செல்வாக்கு பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- பக்தி இலக்கியங்களிலும் சிற்றிலக்கியங்களிலும் நாட்டுப்புறவியல் வகைகள் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- இக்கால இலக்கியங்களில் நாட்டுப்புற இலக்கியங்களின் செல்வாக்கு பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.

- ➢ சங்க இலக்கியத்தில் நாட்டுப்புறக் கூறுகள் இடம்பெற்ற தன்மை குறித்துத் தெரிந்து கொண்டீர்கள்.

குறிப்பு

## 4.6. முன்னேற்றத்தைச் சோதிக்கும் வினாக்களுக்கான விடைகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | 4.3.1. | 2. | 4.3.3. |
| 3. | 4.3.4. | 4. | 4.3.5. |
| 5. | 4.4.1.1. | 6. | 4.4.2. |
| 7. | 4.4.3.1. | 8. | 4.4.3.3. |

## 4.7. பாடம் பயின்றபின் செய்யும் பயிற்சிகள்

1. காப்பியங்களில் இடம்பெற்றுள்ள நாட்டுப்புற இலக்கிய வகைகள் பற்றிக் கட்டுரை வரைக.
2. பக்தி இலக்கியத்தில் நாட்டுப்புறவியல் கூறுகள் பற்றிக் கட்டுரை வரைக.
3. இக்கால இலக்கியத்தில் நாட்டுப்புற இலக்கிய வகைகள் இடம்பெற்ற நிலையினை விளக்குக.
4. சங்க இலக்கியத்தில் நாட்டுப்புற இலக்கிய வகைமைகள் இடம்பெற்றுள்ளமை பற்றிக் கட்டுரை வரைக.

## 4.8. மேலும் பயில்வதற்கான நூல்கள்

1. ச.வே. சுப்பிரமணியன் (தொகுப்பு.), சங்க இலக்கியம், மணிவாசகர் பதிப்பகம், சென்னை.
2. ம.வெ. பசுபமதி, செம்மொழித்தமிழ், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2010.

# பிரிவு 2. நாட்டுப்புறக் கலைகள்

## கூறு 5. தாலாட்டு-ஒப்பாரி-விடுகதை-பழமொழி

குறிப்பு

### 5.1. முன்னுரை

நாட்டுப்புற மக்களால் காலந்தோறும் தன்னுடைய எண்ணங்களை வாய்மொழியாக வழங்கி வந்தவையே நாட்டுப்புறப் பாடல்கள். நாட்டுப்புற மக்கள் வழி வழியாக, வாய்மொழி மூலம் கற்றுக் கொண்டு வாய்மொழியாகவே பாடப்பட்டவை நாட்டுப்புறப் பாடல்கள். இப்பாடல்கள் மழலைப் பாடல்களாகவும், இளமைப் பாடல்களாகவும், முதுமைப் பாடல்களாகவும், பக்திப் பாடல்களாகவும், காதல் பாடல்களாகவும், மங்கல வாழ்த்துப் பாடல்களாகவும், தாலாட்டுப் பாடல்களாகவும், தொழிற் பாடல்களாகவும், சமுதாயப் பாடல்களாகவும், ஒப்பாரிப் பாடல்களாகவும், விளையாட்டுப் பாடல்களாகவும், திருமணப் பாடல்களாகவும், கதைப் பாடல்களாகவும், கும்மிப் பாடல்களாகவும் எனப் பல்வேறு பரிமாணங்களில் காணப்படுகின்றன. இங்குத் தாலாட்டுப் பாடல்களும், ஒப்பாரிப் பாடல்களும், விடுகதை மற்றும் பழமொழிகளும் பாடப் பகுதியாக அமைந்திருக்கிறது.

### 5.2. குறிக்கோள்கள்

- நாட்டுப்புறப் பாடல்களின் பொதுத்தன்மைகள் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- நாட்டுப்புறப் பாடல்களில் தாலாட்டு மற்றும் ஒப்பாரி பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- விடுகதைகள் மற்றும் பழமொழிகள் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.

### 5.3. நாட்டுப்புறப் பாடல்கள்

கிராமங்களில் வாழும் மக்களால் பாடப்படும் பாடல்களே நாட்டுப்புறப் பாடல்கள். எழுத்தறிவில்லாத கிராமிய மக்கள் வழிவழியாக, வாய்மொழி மூலம் கற்றுக் கொண்டு வாய்மொழி

வழியாகவே பாடப்படும் பாடல்களே நாட்டுப்புறப் பாடல்கள் ஆகும். இப்பாடல்களில் சொல் நயமும், இனிய ஓசை நயமும், யதார்த்தமான கருத்து நயங்களும் அமைந்திருக்கும். நாட்டுப்புற மக்களின் வாழ்விலே பிறந்து அவர்கள் வாழ்விலே வளர்ந்து அவர்கள் வாழ்வோடு பின்னிப்பிணைந்திருப்பவை நாட்டுப்புறப் பாடல்கள். மடியில் கண் விழித்து மரணத்தில் கண்மூடும் வரை மனிதனோடு, நாட்டுப்புற மக்களோடு நாட்டுப்புறப் பாடல்கள் கலந்துள்ளன.

குறிப்பு

பிறந்த குழந்தையைத் தாலாட்டித் தூங்க வைக்கும் தாலாட்டுப் பாடல்கள், கை தட்டி மகிழ்ச்சியைக் கொண்டாடும் கும்மிப் பாடல்கள், கோல் தட்டிப் பாடும் கோலாட்டப் பாடல்கள், வேலை களைப்பு இல்லாமல் இருக்கப் பாடப்படும் தொழிற்பாடல்கள், தங்கள் எண்ணங்களைப் பரிமாறிக்கொள்ளும் காதல் பாடல்கள், கடவுளை வழிபடும் பக்திப் பாடல்கள், வாழ்வின் நிகழ்ச்சியின் போது பாடப்படும் சடங்குப் பாடல்கள், வாழ்ந்து முடிந்த மனிதனை வழியனுப்பும் கண்ணீர்த்துளி நிறைந்த ஒப்பாரிப் பாடல்கள், விடுவிக்க வேண்டிய ஒன்றினை மறைத்து வெளிப்படுத்தும் விடுகதை, உலகத்திற்கு உணர்த்தும் உண்மையை ஒரு சிறிய வாக்கியத்தின் மூலம் சுருக்கிக் கூறும் பழமொழி போன்றன நாட்டுப்புறப் பாடல்களில் சிறப்பிடம் பெறத்தக்கவையாகும்.

### 5.3.1. **தாலாட்டு**

மடியில் கண்விழித்து குழந்தையைத் தொட்டிலில் இட்டு ஆட்டி, தன் நாவினை ஆட்டிப் பாட்டிசைத்து தூங்க வைக்கும் ஒரு தாயின் பாட்டே தாலாட்டு. தாய்மை உணர்வின் வெளிப்பாடாகவே இத்தாலாட்டுப் பாடல்கள் பாடப்படுகின்றன. உலகை இன்னதென்று அறிந்திராத பூந்தளிர் மேனி கொண்ட குழந்தையின் பிஞ்சு உள்ளங்கள் அமைதியான, மென்மையான, இனிமையான உறக்கத்தைத் தழுவிக் கொள்ள வேண்டும் என்கின்ற உன்னத எண்ணத்தில் ஒரு தாய் தன்னுடைய குழந்தையைத் தூளியில் (தொட்டிலில்) இட்டோ, தன் தோளில் இட்டோ மென்மையான அசைவோடு பாடும் பாட்டுதான் தாலாட்டுப் பாடல். தாலாட்டுதான் மனிதன் கேட்கும் முதல் பாட்டு. தொட்டில்தான் மனிதனின் ஆரம்பப் பள்ளி. அவன் தாய் தான்

குறிப்பு

அவனுக்கு ஆசிரியர். புரியாத வார்த்தைகளாக இருந்தாலும் இசையானது குழந்தையைத் தூங்க வைக்கின்றது. குழந்தை தூக்கமடைவதற்கு எவ்வளவு நேரம் பிடிக்கிறதோ அவ்வளவு நேரம் தாயின் பாடலும் நீடிக்கிறது. இப்பாடல்களைத் தாய்தான் பாடவேண்டும் என்றில்லை. தாய்க்குப் பதிலாக குழந்தையின் சித்தி, அத்தை, அக்காள் என்று யார் வேண்டுமானாலும் பாடலாம்.

ஆழங்காண முடியாத அன்புக் கடலான, ஒப்பிட்டுக் கூற இயலாத, உயர்ந்த கருணையான தாயின் வெளிப்பாடே தாலாட்டு எனலாம். தாலாட்டிக் குழந்தையை உறங்க வைக்கும் இப்பாடல்கள் தாயின் அன்பை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளன.

குழந்தை எப்படியெல்லாம் வளர்ந்து வாழவேண்டும் என்ற எதிர்பார்ப்பை, தந்தையின் வீரத்தை, பாட்டனின் பரம்பரைச் சிறப்பை, மாமனின் சீர்வரிசையை, தாய்வீட்டுச் சீதனப் பட்டியலை, கடவுள் குழந்தையைக் காண வேண்டும் என்ற வேண்டுதலை, குழந்தையின் சிறப்பை, குழந்தைக்குரிய கருவிகளின் சிறப்பை எடுத்துரைப்பது தாலாட்டு.

இவை போன்ற தாயின் பல்வேறு எண்ணங்களின் வெளிப்பாடாகத் தாலாட்டுப் பாடல்கள் பாடப்படுகின்றன. இவையாவையும் தாய் செய்வது போலவும், சேய் கேட்பது போலவும் பாடப்படுகின்றன. அவற்றோடு குழந்தையிடம் வினா எழுப்பி அதற்குக் குழந்தை பதில் அளிப்பதாகவும், தானே தாய் கற்பிதம் செய்துகொண்டும் தாலாட்டுப் பாடல்கள் பாடப்படுகின்றன.

### 5.3.1.1. தாலாட்டுப் பாடல்கள்

இத்தாலாட்டுப் பாடல்களில் ஆராரோ - ஆரீரரோ என்றோ; தூறி தூறி என்றோ; ராரிராரோ ராராரோ என்றோ ராகமிட்டுப் பாடுவதுண்டு.

*“ஆராரோ. . . ஆரீரரோ*
*என் கண்ணே ஆராரோ. . . ஆரீரரோ!*
*தூங்காத கண்ணுக்கு என் கண்ணே*
*துரும்பு கொண்டு மையெழுதி*
*உறங்காத கண்ணுக்கு என் கண்ணே*

குறிப்பு

*ஓலை கொண்டு மையெழுதி*
*தூளிக்கா அழுத கண்ணே*
*தூக்கமுள்ள தொட்டிலிலே*
*பாலூக்கா அழுத கண்ணே*
*பாலகனே மடிமேலே*
*யாரடிச்சு நீ அழுத என் கண்ணே*
*அடிச்சவிய சொல்லி அழு*
*ஆக்கினைகள் செய்திடலாம்"*

என்று தாய் குழந்தையின் அழுகைக்குக் காரணம் கேட்டுப் பாடுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. மேலும், குழந்தை அழுது களைத்துவிட்டது, தூங்கினால் அதன் உடம்புக்கு நல்லது என்பதை அறிந்த தாய்,

*"கண்ணே கண்ணுறங்கு - என்*
*கண்மணியே நீயுறங்கு"*

என்று தாலாட்டுகின்றாள். அக்குழந்தை அழுது அடம் பிடிக்குமானால்,

*"ஆரடித்தார் நீயழுதாய்*
*அடித்தாரைச் சொல்லியழு"*

என்று தாய் கேட்கின்றாள். அக்குழந்தை ஆணாக இருந்தால்,

*"முப்பாட்டனார் ஆண்ட - என் கண்ணே*
*முழுதும் கிராமமும்*
*தானாள வேண்டுமென்று - என் கண்ணே நீ*
*தவம் செய்து வந்தவனோ"*

என்று தாய் எண்ணி மகிழ்கின்றாள். அக்குழந்தை பெண்ணாக இருந்தால்,

*"வைகையாம் பொய்கை - நீ பிறந்த*
*மதுரையாம் வானெறியாம்*
*வானெறியும் தேடி*
*வழிதேடி நிற்கையிலே*
*தானறிய நாணுமென்று*
*தவம் பெற்று வந்தாளோ"*

என்று தாய் சொல்லி மகிழ்கிறாள். தாலாட்டுப் பாடல்கள் தாய்மையின் ஆழத்தையும், தாயும் சேயும் என்ற உறவுப் பிணைப்பின் வலிமையையும், அவற்றின் உணர்ச்சி வடிவமாக அமைந்துள்ளது எனலாம்.

குறிப்பு

## 5.3.2. ஒப்பாரி

மடியில் கண் விழிக்கும் மனிதன் மரணத்தில் கண்மூடும் போதும் நாட்டுப்புற மக்கள் பாடல்கள் பாடி வழியனுப்புகின்றனர். அதாவது தங்களது ஆதங்கங்களை வெளிப்படுத்துவதாகவும், தாங்கள் வாழ்க்கையைத் திரும்பிப் பார்ப்பதாகவும் ஒப்பாரிப் பாடல்கள் அமைகின்றன.

தாய்மையின் முதல் இலக்கிய வெளியீடு தாலாட்டென்றால், அதே தாய்மையின் இறுதி இலக்கிய வெளிப்பாடு ஒப்பாரி. இதனை, ‘ஆரம்பமாவது மண்ணுக்குள்ளே, அவன் ஆடி அடங்குவதும் மண்ணுக்குள்ளே’ என்பார்கள். இவ்வொப்பாரி பெண்மைக்குரிய சோகத்தின் பிரதிபலிப்பாக, சோக உணர்ச்சிகளின் தொகுப்பாக எழுகிறது.

கணவன் இறந்தபோது மனைவியும், தாய் தந்தையர் இறப்பின் போது மகளும், மகள் மற்றும் மகன் இறப்பின்போது தாயும், உடன்பிறந்தோர் இறந்த போது சகோதரியும் ஒப்பாரிப் பாடல்களில் சோகத்தைக் கரைக்க முயல்வதைக் காணலாம். தங்கள் உள்ளத்தில் மறைந்து கிடக்கும் சொல்ல முடியாத சோகத்தை வெளிப்படுத்தும் வாய்க்காலாக ஒப்பாரிப் பாடல்கள் அமைகின்றன.

### 5.3.2.1. ஒப்பாரிப் பாடல்கள்

ஒப்பாரிப் பாடல்களில் இடம்பெறும் சொற்கள் எல்லாம் சோகச் சுமையுடன் விளங்குவன. இறந்தவர்களுக்காக ஒப்பாரி, மாரடி, கழிலடி, கருமாதி போன்ற பாடல்களைப் பாடி வருகின்றனர்.

*“தாலியிண்ணாத் தாலி - நான்*
*தங்கத்தால் பொன்தாலி -*
*தாலி கழற்றிட எந்தன்*
*தருமருக்கே சம்மதமோ”*

குறிப்பு

என்று பெண்கள் கணவருக்காக ஒப்பாரி பாடுவர். பேரப்பெண்டிர் தம் பாட்டன் பாட்டிக்கு,

*"பாலு கொண்டு வந்தியளோ*
*பாதரவம் தீத்தியளோ*
*மோரு கொண்டு வந்தியளோ*
*மோட்சகதி பெத்தியளோ"*

எனப் பாடுவர். கருமாதிச் சடங்கன்று,

*"செத்தவங்களோட செத்தவங்களா*
*மாண்டவங்களோட மாண்டவங்களா*
*நீங்கப் போய்ச் சேர்ந்து*
*எங்கக் கைகாலுக்குச் சுகத்தைக் கொடுங்க"*

எனப் பழங்குடிகள் பாடுகின்றனர். கணவன் இறந்த பிறகு தன் நிலையை நினைத்து வேதனையோடு ஒரு பெண்,

*"தாலிக்கு அரும்பெடுத்த*
*தட்டானும் கண் குருடோ!*
*சேலைக்கு நூலெடுத்த*
*சேணியனும் கண் குருடோ!*
*பஞ்சாங்கம் பாக்க வந்த*
*பார்ப்பானும் கண் குருடோ!*
*எழுதினவன் தான் குருடோ!*
*எழுத்தாணி கூர் இல்லையோ"*

*"தூரத்து அண்ணன்மாரே*
*என் தோளு நிறைஞ்ச மாலை*
*தூக்கி எறியப் போறேன்*
*தூரப் போய் நின்னுடுங்க"*

என்று பாடுகின்றாள். இவ்வாறு நாட்டுப்புற மக்களின் உள்ளத்துள் ஆழப் பதிந்துள்ள சோக உணர்ச்சிகளின் வெளிப்பாடாக ஒப்பாரிப் பாடல்கள் விளங்குகின்றன.

## முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

1. தாலாட்டு என்றால் என்ன?
2. தாலாட்டு யார் யாரெல்லாம் பாடுவர்?
3. ஒப்பாரி வைப்பவர்கள் யார்யார்?
4. நாட்டுப்புறப் பாடல்களில் சோகப் பாடல் எது?

## 5.3.3. விடுகதை

விடுகதை என்ற சொல் வினைத்தொகையில் அமைந்து விட்ட கதை, விடுகின்ற கதை, விடும் கதை என்று முக்காலப் பொருளையும் தருகின்றது எனலாம். விடுகதை என்ற சொல்லிலேயே ஒரு புதிருக்கான பொருள் அடங்கிக் கிடக்கிறது. புதிர் கொண்ட கூற்றே விடுகதையாகும். இதனுடைய பண்பினை வைத்து புதிர், நொடி, வெடி, கணக்கு என்று வேறு பெயர்களால் குறிக்கின்றனர்.

இரண்டு பேர் சேர்ந்து பேசும்போது மூன்றாமவருக்குத் தெரியாமல் பேசுவது புதிர்ப்பேச்சு எனலாம். கிராமப்புற மக்கள் வேடிக்கைக்காகவும், பொழுது போக்கிற்காகவும் புதிர்மைத் தன்மையோடு தங்களுக்குள் உரைநடையாகவோ, கதையாகவோ, கணக்காகவோ பேசிக் கொள்ளும் தொடர்கள், கதைகள், பாடல்கள் யாவும் நாட்டுப்புறப் புதிர்கள் எனப்படும். இப்புதிர்களே விடுகதைகள் எனப்படும்.

### 5.3.3.1. விடுகதையின் வடிவங்கள்

விடுகதையின் வடிவங்களைச் ச.வே. சுப்பிரமணியம் புதிர், சொல் விளையாட்டு, மாற்றெழுத்துப் புதிர், விநோத வார்த்தை, எழுத்துக்கூட்டு, விகடப்பா, ஓவிய வடிவப்புதிர், சொற்புதிர், நொடிவினா என ஒன்பது வகைகளாகப் பாடுபடுத்தி இருக்கின்றார். ஒவ்வொரு வகைக்கும் எடுத்துக்காட்டுடன் பின்வருமாறு காணலாம்.

1. புதிர் என்பது முந்தைய விடுகதை வடிவம். புதிர் என்றால் மறைபொருள் அமைப்பினை உடையது எனலாம். இயற்கைப் பொருளில் காணப்படும் ஒற்றுமைக் கூறினை உருவகப்படுத்துவது. எ.டு.

*“ராசாமகள் கத்திக்கிட்டுப் போறா*

*கூப்பிட நாதியில்ல"* (நிலவு)

குறிப்பு

2. சொல் விளையாட்டு என்பது ஒரு சொல் அல்லது அதன் பகுதி பற்றிய குறிப்பைக் கொண்டு ஊகித்துக் காண முயலும் விளையாட்டாகும். ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு பொருளைக் குறிக்க, இணைத்துப் பார்க்கும்போது முழுமையான விடையினை ஊகித்தறிய முடியும். எ.டு.

*"முதலெழுத்தை நீக்கி விட்டால்*
*மன்னன் பெயராம்*
*நடுவெழுத்து நீங்கி விட்டால்*
*நல்லதொரு மிருகமாகும்*
*கடையெழுத்தை நீக்கிவிட்டால்*
*உள்ளாக மயக்கம் தரும்*
*மூன்றெழுத்தைக் கூட்டிவிட்டால்*
*புண்ணிய நகரமாகும்"* (மதுரை)

3. மாற்றெழுத்துப் புதிர் என்பது ஒரு பொருள் தரக்கூடிய சொல்லில் உள்ள எழுத்துக்களை மாற்றியமைப்பதன் மூலம் வேறொரு பொருள் தரக்கூடிய சொல்லினைப் பெறவைப்பது. இதனை இலக்கண நூலார் இலக்கணப்போலி என்பர். எ.டு.

"வைகை - கைவை"

4. விநோத வார்த்தை என்பது நகைப்பு வினாக்களிலிருந்து விநோத வார்த்தைகள் தோன்றும். எ.டு.

*"ஓடுவாள் சாடுவாள்*
*ஒற்றைக் காலில் நிற்பாள்"* (கதவு)

5. எழுத்துக் கூட்டு என்பது ஏறக்குறைய இருசொல் அலங்காரம் போன்றது. ஆனால், அதுவன்று. எழுத்துக்களைக் கூட்டியோ குறைத்தோ அல்லது மாற்றியமைப்பதன் மூலமோ திகைப்பை உண்டாக்கும் பண்புடையது. ஒரே சொல்லைப் பயன்படுத்தி இருவேறுபட்ட தன்மையினை உணர வைப்பது. எ.டு.

*"பார்ப்பான் புத்தி படிப்பதெப்படி?*
*பணக்காரன் அரையில் உடுப்பதென்னது-"* (பட்டுப்பட்டு)

6. விகடப்பா என்பது ஒரு கருத்தைப் புத்தி கூர்மையாகவும் வேடிக்கையாகவும் குறுகிய செய்யுள் வடிவம் கொண்டு உணர வைப்பது. எ.டு.

*“ஒன்பது கால்*
*எடுத்து வந்தான்”* (இரண்டேகால் என்னும் எண்ணிக்கை)

7. ஓவிய வடிவப்புதிர் என்பது எழுத்துகளையா அல்லது சொற்களையோ ஓவிய வடிவத்தில் அமைப்பதன் மூலம் கூற வந்த பொருளினையோ கருத்தினையோ உணர வைப்பது. எ.டு. குமரகுருபரரின சில பாடல்கள் இதற்குச் சான்று.

8. சொற்புதிர் என்பது வியப்பையும் திகைப்பையும் உண்டாக்கும். தடுமாறும் பொருளைத் தருவது. எ.டு.

*“ஊ எப்போது செவிடாகும்”* (காதுபோனால்)

9. நொடிவினா என்பது நொடிக்குள் விடை சொல்லத்தக்க வினாக்களே நொடி வினா. எ.டு.

*“மதுரை நடுவில் என்ன இருக்கிறது”* (து)

## 5.3.3.2. விடுகதையின் அமைப்புகள்

கேள்வி விடுப்பவன் விடையை மனத்தில் வைத்துக் கொண்டு விடை கொடுப்பவனைத் திண்டாடச் செய்து அவனுடைய திண்டாட்டத்தைக் கண்டு மகிழ்ச்சி உறுதலே விடுகதையினுடைய நோக்கம். நாட்டுப்புறங்களில், சிறுவர்கள்-கிழவர்கள்-கற்றோர்-கல்லார் எனப் பேதம் இன்றி விடுகதை போடுவர். நாட்டுப்புற விடுகதைகள் இன்னின்ன இடங்களில்தான் போடப்பட வேண்டும் என்கிற கட்டாயம் இல்லை.

- வேலை செய்கிறபோது வேளைப்பளு தெரியாமல் இருப்பதற்காக நாட்டுப்புற மக்கள் விடுகதைகள் போடுகிறார்கள். அதாவது அறுவடை செய்யும்போதும் இன்னபிற தொழில்கள் செய்யும் போதும் விடுகதைகள் போடுவதுண்டு.

- வீட்டில் சடங்குகள் செய்யும்போது இரவு நேரங்களில் கண் விழிக்க நேரிடும்போது விடுகதைகள் போடுவதுண்டு.
- இருவர் சந்தித்துக்கொள்ளும் போது முகமன் கூறும் முறையில் புதிர்கள் போடுவதுண்டு.
- பொழுது போக்கிற்காகப் புதிர்கள் போடுவதுண்டு.
- சிறுவர்களுக்குப் பெயரியவர்கள் அறிவுத் திறனை வளர்ப்பதற்காகப் புதிர் போடுவதுண்டு.
- வேடிக்கையாகப் பேசும்போது புதிர்கள் போடுவதுண்டு.
- பாலியல் தூண்டுதலுக்காக இருவர் பேசிக் கொள்ளும் போதும் விடுகதைகளைப் பாலியலாகக் கூறி விடையைச் சாதாரணமாகக் கூறுவதுண்டு.

## 5.3.3.3. விடுகதையின் தன்மைகள்

- நாட்டுப்புற விடுகதைகள் எளிய நடையினதாக இருக்க வேண்டும்.
- ஆவலைத் தூண்டும் படியாகவும் அறிவுத் திறனைச் சோதிப்பதாகவும் இருக்க வேண்டும்.
- நினைவாற்றல், தன்னம்பிக்கையை வளர்ப்பதாக இருக்க வேண்டும்.
- வேலைச் சுமையைச் குறைப்பதாக இருக்க வேண்டும்.

## 5.3.3. **பழமொழி**

நாம் வாழ்ந்தவற்றை, வாழ்வின் விமரிசனத்தைச் சொல்வன பழமொழிகள். வழி வழியாக வந்து நாத்தழும்பேற்றி நயம் பெற்ற மொழி வகையே பழமொழி. இதனைப் பார்க்கும்போது, பழமொழிகள் பழைய மொழிகள் என்ற முடிவுக்கு வந்து விடக்கூடாது. ஏனென்றால், நல்ல பொருட் செறிவும் ஆழ்ந்த கருத்துமுடைய சொற்றொடர்கள் நாளிதுவரை தொடர்ந்து நின்று, பழமொழிகள் என்னும் குறியுடன் வழங்கி வருகின்றன. இதனைத் தொல்காப்பியர், 'பிசி' என்கின்றார். இதனை முதுசொல், பழைய மொழி, சொலவடை என்று வழங்குவர். இவை தொன்மை வாய்ந்தவை எளிய தன்மை உடையவை. அதாவது மக்களது எண்ணங்கள், பழக்க வழக்கங்கள், முதலான பண்பாட்டினை உணர்த்தும் தன்மையது பழமொழி. உள் அர்த்தம் நிரம்பியதாகப் பழமொழிகள் அமைந்திருக்கும்.

குறிப்பு

## 5.3.4.1. பழமொழியின் அமைப்பு

புதியதாகத் தோன்றிய புதுமொழிகள் - பொன்மொழிகள், பழமொழிகளாவதும் உண்டு. அன்னியர் தொடர்பும், புதுமை வரவும், அறிவியல் விளைவும் புதுப்பழமொழிகளைத் தோற்றுவிக்கின்றன. 'மின்னுவதெல்லாம் பொன்னல்ல' என்ற பழமொழி ஆங்கிலேயர் தொடர்பால் வந்தது; 'எலக்டிரியை நம்பி எலை போடாதே' என்பது அறிவியலால் வந்த பழமொழி.

சில பழமொழிகள் சில மதங்களையே கிண்டல் செய்கின்றன. 'குல்லா போடுகிறான்' என்பது இசுலாமியர்களையும், 'நாமம் போட்டு விட்டான்' என்பது வைணவர்களையும், 'மொட்டையடித்துவிட்டான்' என்பது சைவர்களையும் குறிக்கின்றன. விடுகதை, இரட்டுற மொழிதல், நகைமொழி, சொல்லலங்காரம், குழந்தைப் பாடல், சொல் விளையாட்டு, கிண்டல் மொழி, உவமைத் தொடர் இவைகளில் இருந்து பழமொழிகளைப் பிரிக்கவேண்டும் என்பர். ஆனால், அவ்வாறு செய்வது மிகக் கடினம். ஏனெனில், இவை அனைத்தும் பழமொழிகளில் அடங்கியுள்ளன, பழமொழிகள் இவற்றில் அடங்கியுள்ளன என்பர்.

நாட்டுப்புற மக்களின் ஆழ்ந்த அறிவையும் அனுபவத்தையும் பழமொழிகள் பிரதிபலிக்கின்றன. இத்தன்மைகள் வாய்ந்த பழமொழிகள் எப்பொழுது தோன்றியது என்று கூற இயலாது. மனிதகுலம் எத்தனை தொன்மையானதோ அந்த அளவுக்குத் தொன்மையானது பழமொழி. நாட்டுப்புற மக்களிடம் இயற்கையாகத் தோன்றுபவை; சொல்கிற கருத்தை மென்மையாக, மிருதுவாகக் கூறக் கூடியவை; ஒரு பெரிய கருத்தைச் சுருக்கமாகக் கூறக்கூடியவை; எல்லோருக்கும் தெரிந்த; கவனித்த உணர்ந்த உண்மைகளையே சிறுவாக்கியத்தில் வெளிப்படுத்துபவை என்றெல்லாம் பழமொழியின் நிலையினை எடுத்துரைக்கலாம்.

## 5.3.4.2. பழமொழியின் வகைகள்

பழமொழிகளை இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். ஒன்று, எழுத்து முறைப் பழமொழி; மற்றொன்று, பேச்சு முறைப் பழமொழி. எழுத்துமுறைப் பழமொழி என்பது, தமிழ் இலக்கியங்களில்

குறிப்பு

கையாளப்பட்டிருக்கும் பழமொழியைக் குறிக்கும். பேச்சு முறைப் பழமொழி என்பது நாட்டுப்புற மக்களிடம் வாய்மொழியாக வழங்கப்படும் நாட்டுப்புறப் பழமொழிகள் ஆகும். இவற்றிற்கு ஆசிரியர் இல்லை. எழுத்து வடிவமில்லை. மக்கள் வாழ்க்கையில் கண்ட உண்மைகளை வாய்மொழியாகக் கூறுகின்றனர்.

இந்தச் சூழலில் தான் பழமொழிகள் சொல்லப்படும்; சொல்ல வேண்டும் என்கிற வரையறை இல்லை. நாட்டுப்புறப் பழமொழிகள் இவ்வாறுதான் இருக்க வேண்டும்; இப்பொழுதுதான் கூறவேண்டும்; இப்படித்தான் உச்சரிக்க வேண்டும் என்பது போன்ற வரையறைகள் எதுவும் கூறவியலாது. இத்தனை வகையாகக் கூற வேண்டும்; இத்தனை வகைகள் உள்ளன என்று யாரும் கூற இயலாது. இருப்பினும், இதுவரை கிடைக்கப்பெற்ற பழமொழிகளைக் கொண்டு முப்பது வகைகளாகப் பாகுபாடு செய்திருக்கின்றனர். அவை எடுத்துக்காட்டுடன் பின்வருமாறு காணலாம்.

1. **வாக்கிய அமைப்புடைய பழமொழி**

   *“அரண்டவ கண்ணுக்கு இரண்ட தெல்லாம் பேய்”*

2. **மேற்கோள் பழமொழி**

   *“சட்டியில் இருந்தா தானே அகப்பையில் வரும்”*

3. **ஒலியமைப்புப் பழமொழி**

   *“கள்ளனை நம்பினாலும் குள்ளனை நம்பாதே”*

4. **கேள்விப் பழமொழி**

   *“எருது நோவு காக்காக்குத் தெரியுமா?”*

5. **விவசாயப் பழமொழி**

   *“ஆடிப்பட்டம் தேடி விதை”*

6. **மிருகங்கள் தொடர்பான பழமொழி**

   *“எருமை மாட்டு மேல மழை பெஞ்சாப் போல”*

இதுபோல் பறவைகள் தொடர்பான பழமொழி, வேடிக்கைப் பழமொழி, தீயைப் பற்றிய பழமொழி, வானவியல் பற்றிய பழமொழி, அறிவுரைப் பழமொழி, குணம் தொடர்பான பழமொழி, நம்பிக்கை பழமொழி, விலங்கு பழமொழி, குறிப்பால் உணர்த்தப்படும் பழமொழி, திருமணம் பற்றிய பழமொழி, மிரட்டல் பழமொழி, தத்துவப் பழமொழி, எதிரான

கருத்துடைய பழமொழி, இரண்டு அர்த்தமுள்ள பழமொழி, ஒரே அர்த்தமுள்ள பழமொழி, திரிபு பழமொழி, ஒருசொல் பழமொழி, இரட்டைப் பகுப்புப் பழமொழி, மூன்று பகுப்புப் பழமொழி, நான்கு பகுப்புப் பழமொழி, அறிவுரைப் பழமொழி, வாழ்க்கை இயல்பு பழமொழி, நம்பிக்கையும் நடைமுறை தொடர்பான பழமொழி, நகைச்சுவைப் பழமொழி என அவை அமையும்.

இப்பழமொழிகள் பொருளுடையதாகவும், சிறிய அளவினதாகவும், ஓசையுடையதாகவும், எளிதில் நினைவில் நிற்கக் கூடியதாகவும், வார்த்தைகளில் கூர்மை உடையதாகவும், பொதுவான உண்மையின் அடிப்படையை எடுத்துரைப்பதாகவும், கவர்ச்சியான வழக்கில் காணப்படுவதாகவும், மக்களிடையே வழக்கில் காணப்படுவதாகவும், எல்லாச் சூழல்களிலும் சொல்லப்படுவதாகவும், தனித் தன்மை வாய்ந்ததாகவும், பண்பாட்டை விளக்குவதாகவும், இயற்கைத் தன்மையுடையதாகவும், நாட்டுப்புறவியலின் உயிராகவும், வாய்மொழியாகவும், மக்களுக்காக மக்களால் சொல்லப்படுவதாகவும், சுருங்கச் சொல்லி விளங்க வைக்கக் கூடியதாகவும், ஆழ்ந்த பொருளுடையதாகவும் அமைய வேண்டும்.

## முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

5. விடுகதை என்றால் என்ன?
6. விடுகதையின் வேறு பெயர்கள் யாவை?
7. பழமொழி என்றால் என்ன?
8. பழமொழிகளை எத்தனை வகைகளாகப் பாகுபடுத்தியிருக்கின்றனர்?

## 5.4. தொகுத்துக் காண்போம்

- நாட்டுப்புறப் பாடல்கள் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- தாலாட்டு பற்றியும், தாலாட்டின் வகைகள் பற்றியும் அவை பாடப்படும் முறைகள் பற்றியும் தெரிந்து கொண்டீர்கள்.
- ஒப்பாரி பற்றியும், ஒப்பாரியின் வகைகள் பற்றியும் அவை பாடப்படும் நிலைகள் பற்றியும் தெரிந்து கொண்டீர்கள்.

குறிப்பு

- விடுகதை பற்றியும், விடுகதையின் வகைகள் பற்றியும், அவை சொல்லப்படும் முறைகள் பற்றியும், தன்மைகள் பற்றியும் தெரிந்து கொண்டீர்கள்.
- பழமொழி பற்றியும், அவற்றின் வகைகள் பற்றியும், பழமொழியில் சொல்லப்படும் செய்திகள் பற்றியும் தெரிந்து கொண்டீர்கள்.

## 5.5. முன்னேற்றத்தைச் சோதிக்கும் வினாக்களுக்கான விடைகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | 5.3.1. | 2. | 5.3.1. |
| 3. | 5.3.2. | 4. | 5.3.2. |
| 5. | 5.3.3. | 6. | 5.3.3. |
| 7. | 5.3.4. | 8. | 5.3.4.2. |

## 5.6. பாடம் பயின்றபின் செய்யும் பயிற்சிகள்

1. தாலாட்டுப் பாடல்கள் பற்றிக் கட்டுரை வரைக.
2. ஒப்பாரிப் பாடல்களின் தன்மைகள் குறித்துக் கட்டுரை வரைக.
3. விடுகதைகள் வகைப்பாடுகளை எடுத்துக்காட்டுகளுடன் விளக்குக.
4. பழமொழிகள் உணர்த்துவன பற்றிக் கட்டுரை வரைக.

## 5.7. மேலும் பயில்வதற்கான நூல்கள்

1. முத்துக்குமரன், பழமொழிகள் 5000, குறிஞ்சி பதிப்பகம், சென்னை, 2002.

2. சற்குணவதி, தமிழக நாட்டுப்புறவியல், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2004.

# கூறு 6. நாட்டுப்புறக் கதைகள் - நல்லதங்காள் கதை – முத்துப்பட்டன் கதை – தேசிங்குராஜன் கதை

குறிப்பு

## 6.1. முன்னுரை

நாட்டுப்புறத்தில் வழங்கப்படுகின்ற கதைகளே நாட்டுப்புறக் கதைகள். இந்நாட்டுப்புறக் கதைகள் முன்னோர்களின் வரலாறுகளை எடுத்துரைப்பதாகவும் கொஞ்சம் கற்பனை கலந்ததாகவும் இருக்கும். பெரும்பாலான நாட்டுப்புறக் கதைகள் வாழ்க்கையில் ஏதாவது ஒரு சிறப்பினைப் பெற்ற ஒருவரைப் பற்றியே அமைந்திருக்கும். இந்நிலையில் இங்குப் பாடப் பகுதியாக நல்லதங்காள் கதை, முத்துப்பட்டன் கதை, தேசிங்குராஜன் கதை ஆகிய மூன்று கதைப்பாடல்கள் அமைந்திருக்கின்றன.

## 6.2. குறிக்கோள்கள்

- பொதுவான நாட்டுப்புறக் கதைகள் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- நல்லதங்காள் கதை பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- முத்துப்பட்டன் கதை பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- தேசிங்குராஜன் கதை பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.

## 6.3. நாட்டுப்புறக் கதைகள்

மண்ணிலே தோன்றி மண்ணிலேயே மறையும் மனிதர்களின் கதை மகத்தானது. கதை சொல்லுவதும் கேட்பதும் மாந்தர் இயல்பு. மனித வாழ்வின் ஒவ்வொரு நிகழ்ச்சியும் கதையாகிறது. மனிதனின் ஆசைகள், அவலங்கள், தேவைகள், விருப்பு வெறுப்புகள், கனவுகள், கற்பனைகள் அனைத்தும் கதைகளாகின்றன. நடந்த நிகழ்ச்சிகளை விரிவாக்கி கற்பனையை இணைத்து கதைகள் படைக்கப்பட்டாலும், அவை நம் மனித வாழ்வின் மகத்துவத்தையே பேசுகின்றன. இத்தகைய கதைகள் பெரும்பாலும் நாட்டுப்புற மக்களிடம் வழக்கத்திலுள்ளது. வாழ்க்கையில் ஏற்பட்ட பாதிப்பு, நடந்த நிகழ்ச்சிகள், உயர்வு, தாழ்வு மனப்பான்மை, அறம் உரைத்தல், மகிழ்வூட்டல், வேடிக்கை, நீதிகளை

எடுத்துரைத்தல், வாழ்வில் நடக்கும் தவறுகளைச் சுட்டுக்காட்டுதல், தவறு செய்தவரைத் திருத்துதல் போன்ற பல கருத்துக்களை உள்ளடக்கியதாக நாட்டுப்புறக் கதைகள் வழங்கப்படுகின்றன.

குறிப்பு

பெரியோர்கள் சிறியவர்களுக்குக் கதை சொல்வதாகவே பெரும்பான்மையான கதைகள் அமைகின்றன. இவற்றையும் இன்னார் இயற்றினார் என்று கூறவியலாது. மரபு வழியாக ஒருவருக்கொருவர், கேட்டு அவற்றைத் தங்கள் சந்ததியினருக்குச் சொல்வார்கள். அதனைக் கேட்டவர்கள் தங்கள் பிள்ளைகளுக்குச் சொல்வார்கள். இவ்வாறே நாட்டுப்புறக் கதைகள் பரவி வருகின்றன. உரையாகக் கதைகளைச் சொல்லி வருவார்கள். அவ்வாறு சொல்லப்படும் கதைகளே நாட்டுப்புறக் கதைகள் ஆகும்.

இந்நாட்டுப்புறக் கதைகள் குறிப்பிட்ட ஒருவரால் எழுதப் பெற்றதில்லை. ஏட்டில் இடம்பெறாமல் வாய்மொழியாகவே தொன்று தொட்டு வளர்ந்தும் தேய்ந்தும் உருமாறியும் வழங்கி வருபவை.

## 6.3.1. நாட்டுப்புறக் கதைகளின் தன்மைகள்

மண்ணுக்கேற்ற உண்மைகளோடு கற்பனை கலந்து படைக்கப்படுவதே நாட்டுப்புறக் கதைகள். குழந்தைப் பருவத்திலிருந்தே கதைகள் கேட்கப்படுவதால் குழந்தையின் உளவியல் வளர்ச்சிக்கேற்பவும் கதைகள் அமைந்திருக்கும்.

- இக்கதைகளில் மகிழ்ச்சி, கண்டுபிடிப்பு, படைப்பாற்றல், தன்மையின் வெற்றி, நேர்மை, விளையாட்டு, வேடிக்கை போன்றவை நிறைந்திருக்கும்.
- மந்திரம், அதீத நிகழ்ச்சிகள், அதாவது பறக்கும் கம்பளம், தேனாறுகள், தலையைத் தாண்டுதல், கடலைக் கடத்தல், இறந்தாரை எழுப்புதல் போன்ற அற்புதங்கள் கதைகளில் இருக்கும். நீதிக் கருத்துக்கள், தீமையை அழித்தல், கருணை, உதவி செய்தல், தவறான நடத்தைகள், ஆசைகள், கோபம், பொறாமை போன்ற பண்புகளை வெளிப்படுத்துவதாகவும் இக்கதைகள் அமைந்திரும்.

- கதைப் பாத்திரங்களில் சாதாரண மனிதர்கள் முதல் துறவிகள், கிழவிகள், கள்ளர்கள், மந்திர வாதிகள், வேசிகள், தெய்வங்கள் போன்றவர்கள் இருப்பார்கள்.
- இவர்களோடு பறவைகள், விலங்குகள், உயிரற்ற பொருட்கள் முதலானவை பேசுவது போலவும் அமைந்திருக்கும்.
- இவையே கதையின் முக்கியப் பாத்திரங்களாகவும் அமைவதுண்டு.

இவை போன்ற தன்மைகளை உடைய நாட்டுப்புறக் கதைகளை அவற்றின் தன்மைக்கேற்ப பெயரிட்டு அழைக்கலாம்.

## 6.3.2. நாட்டுப்புறக் கதைகளின் வகைகள்

நாட்டுப்புறங்களில் புழக்கத்தில் இருக்கக் கூடிய கதைகளைப் பல வகைகளில் பகுக்கலாம். அவை, மனிதக் கதைகள், மிருகக் கதைகள், மந்திர தந்திரக் கதைகள், தெய்வக் கதைகள், இதிகாச புராணக் கதைகள், நகைச்சுவைக் கதைகள், ஏனையவை என்று பாகுபடுத்தலாம்.

மனிதர்கள் கதைப் பாத்திரங்களாக இடம்பெறுவது கதைகள் ஆகும். அதாவது மனிதர்களின் ஒழுக்கம், நேர்மை, பேராசை, பொறாமை போன்ற பண்புகளை வெளிப்படுத்துவதாக வரும் கதைகள் மனிதக் கதைகளாகும். இவற்றில் காதல், குடும்பம், நாடு, கனவு, அதிர்ஷ்டம், விசித்திரம் போன்ற பல கூறுகள் இடம்பெறுபவை மனிதக் கதைகள் என்றும், மிருகங்களுக்குள் நடக்கும் நிகழ்ச்சிகளை வெளிப்டுத்துவது, மிருக வாழ்வின் சம்பவங்கள் மூலமாக மனிதர்களுக்குச் சில கருத்துக்களைச் சொல்வதாக அமைபவை மிருகக் கதைகள் என்றும், மனிதர்கள் பறந்து செல்வது போலவும், மந்திரவாதியின் துணையால் இறந்தவரை எழுப்புவது போலவும் அமையும் கதைகள் மந்திர-தந்திரக் கதைகள் என்றும், தெய்வங்கள் மனிதர்களோடு போவது போன்றும், உதவி செய்வது போன்றும் அமையும் கதைகள் தெய்வக் கதைகள் என்றும், மகாபாரதம், கம்பராமாயணம் போன்ற புராண இதிகாச கதைகளையும் நாட்டுப்புற மக்கள் சொல்வதுண்டு. இக்கதைகளில் முழுப் பகுதியையோ அல்லது சிறு சிறு பகுதியையோ கொண்டமையும் கதைகள் இதிகாச புராணக் கதைகள் என்றும், நாட்டுப்புற மக்கள் தங்கள் வாழ்க்கையில் நடந்ததாகச் சில நிகழ்ச்சிகளை வேடிக்கையாகக் கதை சொல்லும்

கதைகளை நகைச்சுவைக் கதைகள் என்றும், மேற்கூறிய பிரிவுகளுக்குள் அடங்காத பறவைகள், எறும்பு, சட்டிப்பானை, மரம், செடி, கொடிகள், மலை, ஆறு போன்றவை பேசுவது போன்று அமையும் கதைகளை ஏனையவை என்றும் அடக்கலாம்.

## 6.4. நல்லதங்காள் கதை

தமிழகத்தின் விருதுநகர் மாவட்டத்தில் உள்ள வத்திராயிருப்பு என்ற ஊருக்கு அருகில் உள்ள அர்ச்சுனாபுரத்தில் நல்லதங்காள் கோவில் உள்ளது. இக்கோயிலின் மூலவராக நல்லதங்காள் விளங்குகின்றாள். இத்தலம் குழந்தைப்பேறு கொடுக்கும் தலங்களில் ஒன்றாகக் கருதப்படுகிறது. இக்கோயில் மிகவும் பழமை வாய்ந்த கோயிலாகக் கருதப்படுகிறது. இக்கோயில் அமைந்துள்ள பகுதி வாழைமரம், பாக்குமரம், தேக்குமரம் ஏராளம் கொண்டு வானம் பொய்க்காத வளமான பூமியாகக் காணப்படுகிறது. இவ்வூரில்தான் நல்லதங்கள் பிறந்தாள். அவளின் வாழ்க்கைக் கதையே நல்லதங்காள் கதை.

## 6.4.1. நல்லதங்காள் கதை – கதைச்சுருக்கம்

விருதுநகர் மாவட்டம் வத்திராயிருப்புக்கு அருகில் உள்ள அர்ச்சுனா புரத்தில் இராமலிங்கம்-இந்திராணி தம்பதியர்க்கு நல்லதங்காள் பிறந்தாள். இவளுக்கு நல்லதம்பி என்ற ஒரு அண்ணன் உண்டு. நல்லதங்காள் சின்னப் பெண்ணாக இருந்தபோது தாயும் தந்தையும் இறந்துவிடுகின்றனர். நல்லதம்பிதான் தங்கச்சியைச் செல்லமாக வளர்க்கின்றான். மானாமதுரை ராஜா காசிராஜனுக்கு நல்லதங்காளைக் கட்டிக் கொடுக்கிறான். கல்யாணம் ஆகும்போது நல்லதங்காளுக்கு ஏழு வயது. காசிராஜன் நல்லதங்காளுக்கு நிறைய பரிசுப் பணம் கொடுத்தார். சித்திரை மாதம் கல்யாணம் நடந்தது. செல்வக் கல்யாணம்.

*பனைமரம் பிளந்து பந்தக்கால் நட்டார்கள்.*
*தென்னைமரம் பிளந்து தெருவெல்லாம் பந்தல் இட்டார்கள்*
*நல்லதம்பி தங்கச்சிக்கு நிறைய சீதனங்கள் கொடுத்தான்.*
*வேலி நிறைய வெள்ளாடுகள் பட்டி நிறைய பால்மாடுகள்*

*மோர் கடைய முக்காலி*
*அளக்குற நாழி பொன்னால்*
*மரக்கால் பொன்னால்*

இன்னமும் சீதனங்கள் நிறைய உண்டு. சொல்லிக்கொண்டே போகலாம். கல்யாணம் முடிந்தது. விருந்துச் சாப்பாடு முடிந்தது. நல்லதங்காளும் காசிராஜனும் மானாமதுரைக்குப் புறப்பட்டார்கள். நல்லதங்காளுக்கு அண்ணனைப் பிரிய மனம் இல்லை.

குறிப்பு

*அழுது புரண்டு அழுதாள் ஆபரணம் அற்று விழ,*
*முட்டி அழுதாள் முத்துமணி அற்று விழ.*

நல்லதம்பி தங்கச்சிக்கு ஆறுதல் சொன்னான். ஒரு வழியாக நல்லதங்காள் மானாமதுரைக்குப் புறப்பட்டுப் போனாள். நல்லதம்பிக்கு ஒரு மனைவி உண்டு. அவள் பெயர் மூளியலங்காரி. அவள் கொடுமைக்காரி. நல்லதங்காள் போன பிறகு நல்லதங்காளைப் பார்க்க நல்லதம்பி ஒரு தடவைகூட மானாமதுரை போகவில்லை. அதற்கு மூளியலங்காரிதான் காரணமாம். நல்லதங்காளுக்கு ஏழு குழந்தைகள் பிறந்தன. பிள்ளை குட்டிகளுடன் அவள் சந்தோஷமாக வாழ்ந்தாள். இதெல்லாம் கொஞ்ச காலம்தான். மானாமதுரையில் மழை இல்லை. பன்னிரண்டு வருடமாக மழை இல்லை. வயல்களில் விளைச்சல் இல்லை. மக்கள் பசியால் வாடினார்கள். பட்டினியால் தவித்தார்கள்.

*பஞ்சமோ பஞ்சம்*
*மரக்கால் உருண்ட பஞ்சம்*
*மன்னவரைத் தோற்ற பஞ்சம்*
*நாழி உருண்ட பஞ்சம்*
*நாயகரைத் தோற்ற பஞ்சம்*
*தாலி பறிகொடுத்து*
*கணவரைப் பறிகொடுத்து*
*கைக்குழந்தை விற்ற பஞ்சம்*

இப்படி மக்கள் பஞ்சத்தில் செத்தார்கள். நல்லதங்காள் வீட்டையும் பஞ்சம் விடவில்லை. தாலி தவிர மற்றது எல்லாம் நல்லதங்காள் விற்றாள். குத்தும் உலக்கை, கூடை, முறம்கூட விற்றுவிட்டாள். எல்லாம் விற்றும் பஞ்சம் தீரவில்லை. குழந்தைகள் பசியால் துடித்தன.

குறிப்பு

நல்லதங்காள் யோசித்துப் பார்த்தாள். இன்னும் கொஞ்ச நாள் நீடித்தால் பிள்ளைகள் பசியால் செத்துப்போகும் நிலை உருவாகலாம் என்று பயந்தாள். ஒரு முடிவு எடுத்தாள். அண்ணன் வீட்டுக்குப் பிள்ளைகளுடன் கொஞ்ச நாள் போய் இருக்கலாம் என்று முடிவு எடுத்தாள். காசிராஜனிடம் தன் முடிவைச் சொன்னாள். காசிராஜன் நல்லதங்காள் சொன்ன முடிவை ஒப்புக் கொள்ளவில்லை.

*அடி பெண்ணே! வாழ்ந்து கெட்டுப்போனால்*
*ஒரு வகையிலும் சேர்க்க மாட்டார்கள்.*
*கெட்டு நொந்து போனால்*
*கிளையிலும் சேர்க்க மாட்டார்கள்.*
*கை கொட்டிச் சிரிப்பார்கள்.*
*நீ போக வேண்டாம்.*
*கஷ்டம் வருவது சகஜம்.*
*நாம் பிடித்து நிற்க வேண்டும்.*
*சாணி எடுத்தாவது தப்பிப் பிழைப்போமடி!*
*வேலி விறகொடித்து விற்றுப் பிழைப்போமடி!*

என்று காசிராஜன் தன் மனைவி நல்லதங்காளிடம் பலவாறு சொல்கின்றான். காசிராஜன் சொன்னதை நல்லதங்காள் கேட்கவில்லை. இனியும் தாக்குப்பிடிக்க முடியாது என்று நினைத்தாள்.

*சந்தனம் தொட்ட கையால் - நான்*
*சாணி தொட காலமோ!*
*குங்குமம் எடுக்கும் கையால் - நான்*
*கூலி வேலை செய்ய காலமோ!*

என்று சொல்லி நல்லதங்காள் அழுதாள்.

இதற்குமேல் நல்லதங்காளைச் சமாதானப்படுத்த முடியாது என்று காசிராஜன் தெரிந்துகொண்டான்.

*சரி போய் வா.*
*பிள்ளைகளைப் பத்திரமாகப் பார்த்துக்கொள்*

என்று சொல்லி வழியனுப்பி வைக்கின்றான். நல்லதங்காள் பிள்ளைகளைப் பாசத்தோடு அழைத்தாள்.

*வாருங்கள் பிள்ளைகளா!*
*உங்கள் மாமம் வீட்டுக்குப் போவோம்.*
*அங்கே தின்பதற்கு தேங்காய் கிடைக்கும்*
*மாங்காய் கிடைக்கும்*
*ஓடி விளையாட மான் கிடைக்கும்*

**குறிப்பு**

என்று சொல்லி அழைத்தாள். பிள்ளைகள் ஆசை ஆசையாகப் புறப்பட்டன. நல்லதங்காளும் பிள்ளைகளும் மானாமதுரையில் இருந்து அர்ச்சுனாபுரத்துக்குப் புறப்பட்டு வந்தார்கள். காடு மலையெல்லாம் தாண்டி வந்தார்கள். வனாந்திரங்களைக் கடந்து வந்தார்கள். அர்ச்சுனாபுரம் பக்கம் வந்துவிட்டார்கள். ஆனால் பிள்ளைகளுக்கு நடக்க முடியவில்லை. பசி பசி என்று கத்தினார்கள். அழுதார்கள். அந்த நேரம் பார்த்து நல்லதம்பி அந்தப் பக்கம் வந்தான். படை பரிவாரங்களோடு வந்தான். வேட்டையாட வந்தான். வந்த இடத்தில் நல்லதங்காளையும் பிள்ளைகளையும் பார்த்தான். அந்தக் கோலத்தில் அவர்களைப் பார்த்ததும் கண்ணீர் முட்டிக் கொண்டு வந்தது.

*குதிரை அரிதாச்சோ குடி இருந்த சீமையிலே!*
*பல்லக்குதான் பஞ்சமோ பத்தினியே உனக்கு!*
*கால்நடையாய் வர காரணம் ஏன் தங்கச்சி?*

என்று அழுது புலம்பினான். நல்லதங்காள் தன் வீட்டு நிலைமைகளைச் சொன்னான். நல்லதம்பி அவளைத் தேற்றினான்.

*சரி தங்கச்சி நம் வீட்டுக்குப்போ*
*தெற்கு மூலையில் தேங்காய் குவிந்திருக்கும்*
*வடக்கு மூலையில் மாங்காய் குவிந்திருக்கும்*
*காட்டு யானை வாசலில் கட்டி இருக்கும்*
*காராம் பசுவும் உண்டு*
*போ தங்கச்சி போ!*
*போய்ப் பிள்ளைகளுடன் பசியாறி இரு*

என்று நல்லதம்பி சொன்னான். நல்லதங்காள் அண்ணன் இல்லாத வீட்டுக்குப் போக தயங்கினாள். அண்ணா! நீயும் கூடவா! என்று அண்ணனைக் கூப்பிட்டாள். அம்மா நல்லதங்காள் நீ முதலில் போ. உன் அண்ணி மூளியலங்காரி உன்னையும் பிள்ளைகளையும் நன்றாக

குறிப்பு

கவனித்துக் கொள்வாள். நான் பின்னால் வருகிறேன். சீக்கிரம் வந்துவிடுவேன். உன் பிள்ளைகளுக்கு விளையாட புள்ளிமான் கொண்டு வருவேன் என்று சொல்லி சமாதானப்படுத்தி அனுப்புகின்றான். நல்லதங்காள் அண்ணன் வீட்டுக்கு அரை மனதுடன் புறப்பட்டாள். அப்போது மூளியலங்காரி வீட்டு மாடியில் இருந்தாள். நல்லதங்காளும் பிள்ளைகளும் பசியோடு தன் வீடு வருவதைப் பார்த்துவிட்டாள். வேக வேகமாக இறங்கி வந்தாள். கதவுகளை அடைக்கச் சொன்னாள். இறுக்கிக் கதவை அடைத்தாள். ஈர மண் போட்டு அடைத்தாள். சோற்றுப் பானையை ஒளித்து வைத்தாள். பழந்துணி ஒன்றை உடுத்திக் கொண்டாள். முகத்தில் பத்துப் போட்டு மூலையில் படுத்துக் கொண்டாள். நல்லதங்காள் வந்தாள். அண்ணி அண்ணி என்று ஆசையாகக் கூப்பிட்டு கதவைத் தட்டினாள். கதவு திறக்கவில்லை. கால் கடுக்குது அண்ணி கதவைத் திற. தண்ணீர் தண்ணீர் என்று தவிக்குறார் பாலகர். அன்னம் அன்னம் என்று சொல்லி அலையுறார் பாலகர். புத்திரர் பசியாற கதவைத் திறவாயோ? என்று அழுது கூப்பிட்டாள். அதற்கும் கதவு திறக்கவில்லை. நல்லதங்காளுக்குக் கோபம் வந்தது.

*நான் பத்தினி யானால் கதவு படீர்என்று திறக்கட்டும்*

என்று கட்டளையிட்டாள். கதவுகள் திறந்தன. பிள்ளைகள் உள்ளே ஓடினார்கள். சுற்றிச் சுற்றி வந்தார்கள். ஒரு பண்டமும் இல்லை. மூளி அலங்காரி படுத்திருந்த இடத்தில் தேங்காயும் மாங்காயும் குவிந்து கிடந்தன. ஓடிச் சென்று ஒரு பிள்ளை தேங்காயை எடுத்தது. தாவிச் சென்று ஒரு பிள்ளை மாங்காயைக் கடித்தது. மூளி அலங்காரி விருட்டென்று எழுந்தாள். மாங்காயைப் பறித்துப் போட்டாள். ஆயிரம் அழுகல் மாங்காயில் ஒன்று எடுத்துக் கொடுத்தாள். தேங்காயைப் பறித்துப் போட்டாள். ஆயிரம் தேங்காயில் அழுகல் தேங்காய் ஒன்று எடுத்துக் கொடுத்தாள்.

பார்த்தாள் நல்லதங்காள். மனம் பதறினாள். அண்ணி என் மக்களின் பசியை ஆத்துங்க என்று கெஞ்சினாள். மூளி அலங்காரி ஏழு வருசம் மக்கிப்போன கேப்பையைக் கொடுத்தாள். திரிப்பதற்கு உடைந்த திருகையைக் கொடுத்தாள். உலை வைக்க ஓட்டைப்

குறிப்பு

பானையைக் கொடுத்தாள். நல்லதங்காள் பொறுமையாகக் கேப்பையைத் திருகையில் போட்டு அரைத்தாள். எப்படியோ கஷ்டப்பட்டு கஞ்சி காய்ச்சினாள். ஈர மட்டைகளை வைத்து எரித்தாள். கூழும் கொதிக்கணும், குழந்தை பசியாறணும் என்று தெய்வங்களை வேண்டிக் கொண்டாள். ஒரு வழியாகக் கஞ்சி கொதித்தது. ஆனால் பிள்ளைகள் கஞ்சியைக் குடிக்கப் போகும் நேரத்தில் மூளி அலங்காரி வந்தாள். பானையைத் தட்டிவிட்டாள். பானை உடைந்தது. கூழ் வழிந்து ஓடியது. பிள்ளைகள் அதை வழித்துக் குடித்தார்கள். நல்லதங்காளுக்கு இந்தக் காட்சியைப் பார்க்கச் சகிக்கவில்லை. இனியும் அவமானப்பட வேண்டாம். செத்துவிடலாம் என்று முடிவு எடுத்தாள். பிள்ளைகளைக் கூப்பிட்டு தெருவில் இறங்கினாள். வீதியில் நடந்தாள். அவளைப் பார்த்தவர்கள் பரிதாபப்பட்டார்கள். சாப்பிடுவதற்குத் தங்கள் வீட்டுக்கு அழைத்தார்கள்.

*பச்சரிசி குத்தித் தாரோம்*
*பாலும் கலந்து தாரோம்!*
*பாலரும் நீயும் பசியாறிப் போங்க!*

என்று கூப்பிட்டார்கள். நல்லதங்காள் மறுத்துவிட்டாள்.

*அரச வம்சம் நாங்கள்*
*அண்டை வீட்டில்*
*தண்ணீர் குடிக்க மாட்டோம்*

என்று சொல்லிவிட்டாள். காட்டு வழியே பிள்ளைகளைக் கூட்டிப் போனாள். பாழும் கிணறு தேடிப் போனாள். அண்ணன் வந்தால் அடையாளம் தெரியட்டும் என்று ஆவாரம் செடிகளை ஒடித்துப் போட்டுக் கொண்டே போனாள்.

நல்லதங்காளும் பிள்ளைகளும் நெடுந்தூரம் வந்து விட்டார்கள். ஒரு கிணறும் காணோம். அப்போது சிறுவர்கள் ஆடு மேய்த்துக் கொண்டு இருந்தார்கள். அவர்களைப் பார்த்து நல்லதங்காள் கேட்டாள். தண்ணீர் தாகமப்பா. தண்ணீர் குடிக்கணும். பாழும் கிணறு இருந்தால் பார்த்துச் சொல்லுமப்பா! என்று கேட்டாள். ஒரு சிறுவன் ஓடிச்சென்று ஆழமுள்ள பாழும் கிணற்றைக் காட்டினான். நல்லதங்காள் பிள்ளைகளோடு அங்குப் போனாள். கணவன் கண்ணில் படுமாறு

குறிப்பு

தாலியைக் கழற்றி கிணற்றுப் படியில் வைத்தாள். அண்ணன் கண்ணில் படுமாறு பாலூட்டும் சங்கை கிணற்று மேட்டில் வைத்தாள். அண்ணி கொடுத்த அழுகல் தேங்காயை ஓர் ஓரத்தில் வைத்தாள். ஒவ்வொரு பிள்ளையாக கிணற்றில் தூக்கிப் போட்டாள். ஒவ்வொரு பிள்ளையும் பயந்து பயந்து அம்மாவின் காலைக் கட்டிக் கொண்டன. காலைக் கட்டிய பிள்ளையைப் பிடித்து இழுத்து கிணற்றில் போட்டாள். இப்படி ஆறு பிள்ளைகளைப் போட்டுவிட்டாள். மூத்த பிள்ளை நல்லதங்காளுக்குப் பிடிபடாமல் ஓடினான். என்னை மட்டும் கொல்லாதே என்னை பெற்ற மாதாவே! என்று கெஞ்சினான்.

*தப்பிப் பிழைத்து அம்மா - நான்*
*தகப்பன் பேர் சொல்லுவேன்*
*ஓடிப் பிழைத்து அம்மா - நான்*
*உனது பேர் சொல்லுவேன்*

என்று சொல்லி தப்பித்து ஓடினான். ஓடிய பிள்ளையை நல்லங்காள் ஆட்டு இடையர்களை வைத்துப் பிடிக்கச் சொன்னாள். இடையர்களுக்கு விசயம் தெரியாது. தாய்க்கு அடங்காத தறுதலைப் பிள்ளை என்று நினைத்து அவனைப் பிடித்துக் கொண்டு வந்து நல்லதங்காளிடம் விட்டுவிட்டுப் போனார்கள். நல்லதங்காள் கதறி அழுத மூத்த மகனையும் பிடித்து கிணற்றுக்குள் போட்டாள். பிறகு தானும் குதித்தாள். நல்லதங்காளும், ஏழு பிள்ளைகளும் இறந்து மிதந்தார்கள்.

நல்லதங்காளுக்கு 16 அடிக் கூந்தல். அவள் கூந்தல் கிணறு பூராவும் பிரிந்து பரந்து கிடந்தது. பிள்ளைகளும் தெரியவில்லை. கிணற்றுத் தண்ணீரும் தெரியவில்லை. நல்லதங்காளின் கூந்தல் மட்டுமே கிணறு பூராவும் தெரிந்தது.

நல்லதங்காள் குடும்பம் இப்படி பட்டினியால் செத்து முடிந்தது.

நல்லதங்காள் புறப்பட்டு வந்த சில நாட்களிலேயே மானாமதுரையில் நல்ல மழை பெய்தது. பயிர்கள் திகிடுமுகடாக விளைந்தன. நாடு செழிப்பு அடைந்தது. காசிராஜன் தன் மனைவி நல்லதங்காளையும் தன் பிள்ளைகளையும் அழைப்பதற்குப் புறப்பட்டு வந்தான். நல்லதம்பி வேட்டை முடித்து வீட்டுக்கு வந்தான். தங்கச்சியைக் காணவில்லை. தங்கச்சி பிள்ளைகளையும் காணவில்லை.

பதறிப் போனான். மூளி அலங்காரியைப் பார்த்து என் தங்கச்சியையும், தங்கச்சி பிள்ளைகளையும் எங்கே என்று கேட்டான். மூளி அலங்காரி கூசாமல் பொய் சொன்னாள்.

*சீரகச் சம்பா சோறு ஆக்கிப் போட்டேன்*
*பத்து வகைக் காய்கறி வைத்தேன்.*
*சாப்பிட்டுப் போனாங்க*

என்று பொய் சொன்னாள்.

நல்லதம்பி இதை நம்பவில்லை. பக்கத்து வீடுகளில் போய்க் கேட்டான். அவர்கள் நடந்தது நடந்தபடி சொன்னார்கள். பிள்ளைகளைப் பட்டினி போட்டதைச் சொன்னார்கள். அவ்வளவுதான் நல்லதம்பிக்கு மீசை துடித்தது. கண் சிவந்தது. பக்கச் சதை எல்லாம் பம்பரம் போல் ஆடியது. தங்கையைத் தேடி காட்டு வழியே போனான். பதறிப் போனான். நல்லதங்காள் ஒடித்துப் போட்ட ஆவாரஞ் செடிகள் வழிகாட்டின. நல்லதம்பி பாழும் கிணற்றின் பக்கம் வந்தான். உள்ளே எட்டிப் பார்த்தான். அய்யோ தங்கையும் பிள்ளைகளும் செத்து மிதந்தார்கள். நல்லதம்பி ஓங்காரமிட்டு அழுதான்.

தங்கச்சி தங்கச்சி என்று தரையில் புரண்டு அழுதான். அம்மா அம்மா என்று அடித்துப் புரண்டு அழுதான். இப்படி அவன் அழுது புரண்டு கொண்டு இருந்தபோது காசிராஜனும் அங்கே வந்து விட்டான். பிள்ளைகளையும் மனைவியையும் பிணமாகப் பார்த்தான். மனைவியைக் கட்டிக் கொண்டு கதறி அழுதான். நல்லதங்காளையும் பிள்ளைகளையும் வெளியே எடுத்து தகனம் செய்தார்கள். நல்லதம்பி தன் முனைவி மூளி அலங்காரியைப் பழிவாங்க நினைத்தான். அவளை மட்டுமல்ல. அவள் குலத்தைப் பழிவாங்க ஏற்பாடு செய்தான். தன் மகனுக்கு உடனடியாக திருமணம் ஏற்பாடு செய்தான். மூளி அலங்காரியின் உறவினர்கள் உட்காரும் இடத்தில் இடிப்பந்தல் போட்டான். இடிப்பந்தலைத் தட்டிவிட்டு எல்லோரையும் கொன்றான். மூளி அலங்காரியையும் அரிவாளால் வெட்டிக் கொன்றான்.

இத்துடன் இக்கதை முடியவில்லை. நல்லதம்பி ஈட்டியில் பாய்ந்து தன் உயிரை விட்டான். அதேபோல் காசிராஜனும் ஈட்டியில் பாய்ந்து தன் உயிரை விட்டான்.

குறிப்பு

இவ்வாறு இரண்டு குடும்பங்களும் பூண்டோடு அழிந்தன. இதற்கு அடிப்படையான காரணம் என்ன? வறுமை ஒரு பக்கம். மூளி அலங்காரியின் கொடுமை மறுபக்கம். வறுமை கொடியது. பசி கொடியது. பட்டினி கொடியது. அதைவிடக் கொடியது மனிதத் தன்மையற்ற செயல் என்பதை இக்கதை உணர்த்துகிறது.

## 6.4.2. நல்லதங்காள் கோயில்

அண்ணன்-தங்கை பாசத்திற்கு நல்லதங்காள் கதையைப் பார்த்து மெச்சிய சிவனும், பார்வதியும் அங்கே தோன்றி, தற்கொலை செய்த நல்லதங்காள் மற்றும் அவளது ஏழு பிள்ளைகளை உயிர்பெறச் செய்தோடு, நல்லதம்பியையும் காசிராஜனையும் உயிர்ப்பிக்கின்றனர். அப்போது நல்லதங்காளும், நல்லதம்பியும், 'நாங்கள் இறந்தது, இறந்ததாகவே இருக்கட்டும். மனிதப் பிறவி எடுத்து மாண்டவர்கள் மீண்டும் உயிர் பெற்றார்கள் என்ற வரலாறு ஏற்பட வேண்டாம். எனவே நாங்கள் இறந்ததாகக் கருதி அருள் புரிய வேண்டும்' எனக் கூறினார்கள். சிவனும் அவ்வாறே அவர்களின் வேண்டுகோளை ஏற்றுக்கொண்டார். இந்த ஒரே காரணத்துக்காக நல்லதங்காள் தெய்வமாகிவிட்டாள்.

நல்லதங்காள் வாழ்ந்ததாகக் கருதப்படும் வத்திராயிருப்புக்குப் பக்கத்தில் உள்ள உள்ளது அர்ச்சுனாபுரம். அந்த அர்ச்சுனாபுரத்தில் பச்சை ஆடை போர்த்திய வயல்வெளிகளுக்கு மத்தியில் குழந்தைப்பேறு இல்லாதவர்களுக்கு அருள் பாலிப்பவளாக கோயில் கொண்டுள்ளாள் நல்லதங்காள்.

## முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

1. நாட்டுப்புறக் கதைகளின் தன்மைகள் யாவை?
2. நல்லதங்காள் பிறந்த ஊர் எது?
3. நல்லதங்காளின் அண்ணன் மற்றும் கணவன் பெயர் என்ன?
4. நல்லதங்காளுக்கு எத்தனை பிள்ளைகள்?

குறிப்பு

## 6.5. முத்துப்பட்டன் கதை

திருநெல்வேலி, கன்னியாகுமரி மாவட்டக் கொடை விழாக்களில் நிகழ்த்தப்படும் சடங்கியல் நிகழ்ச்சியில் வில்லிசைப் பாடலாக இன்றும் நிகழ்த்தப்பட்டு வரும் கதைப்பாடல்களில் முத்துப்பட்டன் கதைப்பாடலும் ஒன்று. இக்கதை நெல்லை மாவட்டத்தின் மேற்குப் பகுதியில் தோன்றியிருக்க வேண்டும். தென்பாண்டி மண்டல வில்லிசைப் புலவர் அனைவரும் இக்கதையினைப் பாடுகின்றனர். நெல்லை மாவட்டத்தின் மேற்குப் பகுதியில் இன்றும் முத்துப்பட்டன் வழிபாடு வழக்கில் உள்ளது. முத்துப்பட்டனை முதன்மைத் தெய்வமாகக் கொண்ட கோவில்களிலும் வேறு சில கோவில்களிலும் இக்கதைப்பாடல் பாடப்பட்டு வருகிறது. குமரி மாவட்டத்தின் பிற பகுதிகளிலும் இக்கதை பரவியுள்ளது. இக்கதை கி.பி.1658-1738ஆம் கால கட்டத்தில் நிகழ்ந்திருக்கலாம் என்பர்.

### 6.5.1. முத்துப்பட்டன் கதை – கதைச்சுருக்கம்

ஆரிய நாட்டில் அந்தணக் குடும்பத்தில் ஏழு சகோதரருக்குப் பின் எட்டாவதாகப் பிறந்தவன் முத்துப்பட்டன். குடும்பத்தைப் பிரிந்து கொட்டாரக் கரைக்குச் சென்று இராமராஜன் என்னும் சிற்றரசனிடம் பணிபுரிகிறான். சில ஆண்டுகளுக்குப் பின் முத்துப்பட்டனின் சகோதரர் அவனைக் கண்டு பிடிக்கிறார். அவனிடம்,

*“தாயும் தகப்பனாரும் தவித்தல்லவோ தேடுகிறார்.*
*சேய்யர் பெண்ணையல்லோ சிறப்பூட்டக் கேட்டிருக்கு*
*திரவியங்கள் உண்டுமானால் சீமைக்குப் போய்விடலாம்”*

எனக் குறிப்பிட, முத்துப்பட்டனோ அரசனிடம் விடைபெற்றுப் புறப்பட்டான். அவர்கள் ஆரியங்காவில் குளத்துப்புளி, சபரிமலை முதலிய ஊர்களின் வழியாகப் பொதிகைமலை வந்து சொரிமுத்துப் பாதை வழி தளவாய்க் கொட்டகையில் சுமையிறக்கி வைத்தனர். இளைப்பாறிப் புறப்பட்டு அரசடித்துறை வந்து சேர்ந்தனர். தாகம் தீர்த்து வரச்சென்ற பட்டன் பூசையில் மூழ்கியிருக்கும் பொழுது சக்கிலியப் பெண்டிர் இருவர் பாடுவது கேட்டு மயங்கி ஓடினான். அவர்களைச் சுற்றி மறித்தான். தன்னை மணந்து கொள்ளுமாறு வேண்டினான். அவர்கள் சினந்து தாங்கள் தாழ்த்தப்பட்ட சாதியினர் என்று கூறி ஓடி மறைந்தனர். பட்டன்

குறிப்பு

பாவையரைத் தேடி மயங்கி வீழ்கிறான். பாவையர் ஆடு மேய்த்துக் கொண்டிருந்த தம் தந்தை வாலப்பகடையிடம் முறையிட அவன் மாடுகளை அறுக்கும் கத்தியை எடுத்து வருகிறான். பட்டன் மயங்கிக் கிடப்பதைக் கண்டு மனமிரங்குகிறான். பட்டனை எழுப்பக் கையைத் தட்டி ஓசை எழுப்புகிறான். அவன் எழுந்தது கண்டு ஒரு கல்லை எடுத்து அவன் மேல்போட விழித்தெழுகிறான். வாலப்பகடை தன் மக்களை ஒரு பார்ப்பான் மோசன் செய்ய எண்ணியதை பின்வரும் கதைப்பாடல் பகுதி குறிப்பிடுகிறது.

*"அப்போது முத்துப்பட்டன் முறை செப்புவான்*
*தாயுடன் கூடப் பிறந்த அம்மானே*
*சமர்த்திகளுக் காசைப்பட்டு ஓடிவந்தேன்*
*என்று சொல்லி*
*நாலு பேரறிய மணஞ்சூட்டி வைப்பாய் நாளை"*

என்று முத்துப்பட்டன் கூற, சீற்றம் தணிந்த பகடை, திக்கித் திணறிப் பதிலிறுக்கிறான்.

*"நாயல்லவோ எங்கள் குலம் ஓ நயினாரே*
*நாற்றமுள்ள விடக் கொடுப்போம் ஓ நயினாரே*
*செத்த மாடறுக்க வேணும் ஓ நயினாரே*
*சேரிக் கெல்லாம் பங்கிடவேணும் ஓ நயினாரே*
*ஆட்டுத் தோலும் மாட்டும் தோலும் அழுக வைப்போம்*
*அதையடுத்து உமக்கு நன்றாய் அடியருப்போம்*
*அடியறுப்போம் சுவடு தைப்போம் வாரறுப்போம்*
*அதையடுத்துக் கடைக்குக் கடை கொண்டு விற்போமே*
*சாராயம் கள் குடிப்போம் வெறிபிடித்த பேர்*
*சாதியிலே சக்கிலியன் நான் நயினாரே"*

என்னும் தாழ்வு மனப்பான்மையில் பேசுகிறான். பின்னர் முத்துப்பட்டன் வாலப் பகடையிடம்,

*"சாதி முறையாகத் தாலிகட்டி வைத்தக்கால்*
*தாய் தகப்பன் நீரல்லவோ இன்று முதலுக்கு*
*சாதி சனம் போல்நின்று வாரேன் குடினுக்கு"*

எனப் பட்டன் கூறுகிறான். பட்டனை நம்பாத பகடை,

*"நாற்பது நாளைக்குள் முப்புரிநூலும் குடுமியும்*
*மெய்யுடன் அறுத்தெறிந்து எங்களைப்போல்*
*ஒப்புடன் நீர் செருப்புக் கட்டி வந்தக்கால்*
*எப்படியாகிலும் மக்களை கைப்பிடித்துத் தானே"*

எனச் சில நிபந்தனைகளை விதிக்கின்றான். பட்டன் தமையன்மாரிடம் கூறிவிட்டு வரச்சென்றான். அப்பொழுது பட்டனைத் தமையன்மார் ஒரு கல்லறையில் அடைக்கின்றனர். பட்டன் தப்பிச் சென்று சந்தையில் தோல் வாங்கி செருப்புத் தைத்துக் கொண்டு நடைவழியில் குடுமியைச் சிறைத்து பூணூலை அறுத்து நாலு திசையிலும் எறிந்துவிட்டு வாலப்பகடையின் வீட்டுக்குச் செல்கிறான். அங்கு வந்த பகடை செருப்பைக் கண்டு திகைக்கிறான். பின்னர் முறைப்படி பொம்மக்கா, திம்மக்கா கழுத்தில் தாலி கட்டுகிறான் பட்டன்.

அன்றிரவு பட்டன் திம்மக்கா மடியில் காலும் பொம்மக்கா மடியில் தலையும் வைத்துக் கண்ணயர்கிறான். பொல்லாத கனவு காண்கிறான். கதவு தட்டும் சத்தம் கேட்டு எழுகிறான். சிறுவன் ஒருவன் வந்து வாலப் பகடையின் மாடுகளை ஊத்துமலை வன்னியரும் உக்கிரங் கோட்டையாரும் கிடைசாய்த்துச் செல்வதாகக் கூறுகிறான். வல்லயம், தடி இரண்டையும் எடுத்துக் கொண்டு பட்டன் புறப்படுகிறான். மனைவியர் தடுக்கின்றனர். மீறிச் சென்ற பட்டன் பத்து பேரைக் கொல்கிறான். ஒருவன் தப்பிச் செல்கின்றான். பட்டன் ஆற்றில் இரத்தக் கரையைக் கழுவும்பொழுது மறைந்து இருந்த ஒருவன் முதுகில் குத்துகிறான். அவனையும் பட்டன் குத்திக் கொல்கிறான். செய்தியறிந்த மனைவியர் சிங்கம்பட்டி அரண்மனைக்குச் சென்று வரம் வாங்கி, தெய்வங்களாக மாறி நிலவுலகிற்கு வந்து சேர்கின்றனர்.

## 6.5.2. முத்துப்பட்டன் கதையின் உண்மைத் தன்மை

முத்துப்பட்டன் கதையில் வரும் கதாப்பாத்திரங்கள் உண்மையில் வாழ்ந்தவர்களாகத் தோன்றுகின்றனர். சமூக உண்மை கதை முழுவதும் ஊடுருவி நிற்கிறது. தற்காலத்தில் சொரி முத்தையன் கோவிலில் நடக்கும் தீக்குளிப்பு நிகழ்ச்சியும் இக்கதையின் நிகழ்ச்சிகள்

உண்மையென்பதை எடுத்துக்காட்டுகின்றன. இந்த நிகழ்ச்சியின்போது பட்டவராயன் கோவில் முன்பு விறகை எரிப்பார்கள். தெய்வ ஆவேசம் கொண்டு ஆடுபவர்கள் தணலில் இறங்கி மறுபுறம் செல்வார்கள். அவர்கள் தணலில் இறங்குவதற்கு முன்பு சிங்கம்பட்டி ஜமீன்தாரிடம் பாசிக்கொத்து வாங்கி அணிந்து கொண்டு செல்வார்கள். பாசிக்கொத்து சக்கிலியர்களின் தாலி. இதை அணிந்து கொண்டு செல்லும் அம்மன் கொண்டிகள் பொம்மக்கா, திம்மக்காவை உருவகப்படுத்துகிறார்கள். தீயிலிறங்குவது, உடன்கட்டை ஏறியதைக் குறிப்பிடுகிறது. சிங்கம்பட்டி ஜமீன்தார் பாசிக்கொத்து அளிப்பது அவருடைய முன்னோன் ஒருவன் உடன்கட்டையேற அனுமதி அளித்ததைக் குறிக்கிறது.

மேலும் பட்டவராயன் கோயிலின் முன்னுள்ள பாறையில் இக்கோயில் தோன்றிய காலம் 999ஸ்ரீ என்று பொறிக்கப்பட்டுள்ளது. இது கொல்லமாண்டு. 1883இல் இக்கோயில் தோன்றியது என விளங்குகிறது. மற்றொரு கல்வெட்டு இக்கோயில் சிங்கம்பட்டியாரால் கட்டப்பட்டதென்று கூறுகிறது. இக்கோயில் கட்டும்முன் இக்கோயிலில் உள்ள சிலைகள், இக்கோயில் இருக்கும் இடத்திற்குச் சுமார் நான்கு மைல் கீழேயுள்ள சுளியமுத்து பட்டவராயன் கோயிலில் இருந்ததாகவும், அது மிகவும் பழமையான கோயில் எனவும், அதுவே ஆதி பட்டவராயன் கோயில் எனவும் கூறப்படுகிறது. இவ்விரு கோயில்களுக்கும் நேர்த்திக் கடனாகச் செருப்புகளைச் செலுத்துகின்றனர். இது பகடை இனத்தவரின் தொழிலை நினைவூட்டுகிறது.

## 6.5.3. முத்துப்பட்டன் கதை நிகழ்ந்த இடமும் காலமும்

முத்துப்பட்டன் தென் ஆரிய நாட்டில் பிறந்தவன். கொட்டாரக் கரையில் இராமராஜன் அரண்மனையில் பணிபுரிந்தவன். அவன் தன் சகோதரர்களோடு ஊர் திரும்பும்போது ஆரியங்கோவில், சபரிமலை, பொதிகைமலை வழியாகத் தனவாய்க் கொட்டகைக்கு வந்தான். பாபநாசத்திற்கு அருகிலுள்ள அரசடித்துறையில் நீர் குடித்தான். அவனது மனைவியர் சிங்கம்பட்டி ஜமீன்தாரிடம் உடன்கட்டையேற அனுமதி கேட்டனர். இவை இக்கதைச் சம்பவங்கள் நிகழ்ந்த இடங்களைக் குறிப்பிடுகின்றன. இச்சம்பவங்கள் நிகழ்ந்த பகுதி இன்று திருநெல்வேலி மாவட்டத்தின் ஒரு பகுதியாகவும் கேரள மாநிலத்தின் ஒரு

குறிப்பு

பகுதியாகவும் காணப்படுகின்றன. மேற்கு மலைத்தொடரின் தென்பகுதியில் உள்ள நிலப்பகுதி இரு பிரிவிலும் உள்ள சிற்றூர்கள் அனைத்தும் ஆரிய நாடு என்றழைக்கப்பட்டது.

குற்றாலக் குறவஞ்சியில் பொதிகை மலைக்குறத்தி தன் நாட்டைப் பற்றிக் கூறும்போது, ‘திருக்குற்றால நாதர் தென்ஆரிய நாடு’, ‘கடவுள் ஆரிய நாடெங்கள் நாடே’ என்றெல்லாம் வருணிக்கின்றாள். கர்நாடக ராஜாக்கள் சரித்திரத்திலும் இப்பகுதி ஆரிய நாடென்றே குறிப்பிடப்பட்டுள்ளது. நாயக்க மன்னர் சாசனத்தில் தென்காசி முள்ளிநாட்டின் தென்பால் ஆரிய நாடு என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஆயின் இப்பகுதி 350 ஆண்டுகளாகத் திருவனந்தபுரம் அரசர்கள் ஆட்சியில் இருந்து வந்தது. சுமார் 300 ஆண்டுகளுக்கு முன்னர், மதுரைத் தளவாய் விசுவநாத நாயக்கனின் சேனைகளோடு தமிழகம் வந்த சக்கிலியர்கள் அல்லது பகடைகள், தங்களை நரபலியாகப் படைத்த நாயக்கர்களின் பிடியிலிருந்து தப்பித்து நாயக்கர் ஆட்சி பலமாக வேரூன்றாத இந்தப் பகுதியில் வந்து குடியேறியிருக்க வேண்டும். மேலும் குற்றாலக் குறவஞ்சியில்,

*“செப்பரு மலைமேல் தெய்வக் கன்னியர்தான்*
*ஆரியங் காவா, அருட்சொரி முத்தே”*

என்ற வரிகளிலும்,

*“துட்டரை யடக்குகின்ற சொரிமுத்து ஐயன் வாசல்*
*பட்டன் மேல்வரவு பாடப் பால முக்கணன் காப்பாமே”*

என்ற காப்புச் செய்யுளிலும் சொரிமுத்து பற்றிய குறிப்பு காணப்படுகிறது. ஆகக், குற்றாலக் குறவஞ்சி ஆரிய நாட்டையும் சொரிமுத்து என்ற தெய்வத்தையும் குறிக்கிறது. இந்நூலின் காப்புச் செய்யுளும் சொரி முத்தையயன் வாசல் பட்டன் என்று கூறுகிறது. குறவஞ்சி பாடப்படுவதற்கு முன்பேயே சொரிமுத்தையன் கோயிலும் பட்டவராயன் கதையும் புகழ்பெற்றிருந்தன என்பதை உணர முடிகிறது. சொரிமுத்தையன் கோயில் தோன்றி சுமார் 400 ஆண்டுகள் இருக்கலாம். எனவே 260 - 300 ஆண்டுகளுக்கிடைப்பட்ட கி.பி.1658-1738க்கும்

இடைப்பட்ட காலத்தில் முத்துப்பட்டன் கதை நிகழ்ந்திருக்கலாம் என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

குறிப்பு

## முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

5. முத்துப்பட்டனின் காலம் என்ன?
6. முத்துப்பட்டன் பிறந்த நாடு எது?
7. முத்துப்பட்டனோடு பிறந்தவர்கள் எத்தனை பேர்?
8. முத்துப்பட்டனின் மனைவியர் பெயர் என்ன?

## 6.6. தேசிங்குராஜன் கதை

செஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்த தேசிங்கின் வீர வரலாற்றை மையமாகக் கொண்டதே தேசிங்குராஜன் கதை. இதுவொரு வரலாற்றுக் கதைப்பாடலாகும். செஞ்சியின் வரலாறு கி.பி.12ஆம் நூற்றாண்டில் தொடங்கினாலும் கி.பி.18ஆம் நூற்றாண்டின் தொடக்கக் காலத்தில் ஆட்சிப் பொறுப்பேற்ற தேசிங்குராஜன் நினைவே அனைவருக்கும் எழுகின்றது.

நாயககர் ஆட்சிக் காலத்திற்குப் பின்னர் முகலாயப் படையெடுப்பு நடந்த காலத்தில் முகலாயப் பேரரசை எதிர்த்து, செஞ்சியில் சிற்றரசன் தேசிங்கு போராடினான். அவன் ஆட்சி புரிந்தது பத்தே மாதங்கள்தான். எனினும் நீண்ட நாட்கள் அரசாண்டவனைப் போல் பேரும் புகழும் பெற்றவனாகத் திகழ்கின்றான். இவ்வாறு அவன் புகழ் தமிழகம் எங்கும் பரவக் காரணமாக அமைந்தது தேசிங்குராஜன் கதைப்பாடலாகும். இக்கதைப்பாடலைப் புகழேந்திப் புலவர் இயற்றியுள்ளார்.

## 6.6.1. தேசிங்குராஜன் கதை – கதைச்சுருக்கம்

செஞ்சிக் கோட்டையை ஆளும் தேரணிராஜன், டில்லி பாதுஷாவிடமிருந்த தெய்வலோகப் புரவியை அடக்குவதில் தோல்வி கண்டு, முன்பே ஒப்புக்கொண்ட நிபந்தனையின்படி சிறையில் அடைக்கப்படுகின்றான். செஞ்சியில் பிறந்து வளர்ந்த தேசிங்கு தனது ஐந்தாவது வயதில் நண்பன் மோவுத்துக்காரனுடன் டில்லி சென்று, அரங்கனின் அருளால் புரவியை அடக்கித் தந்தை தேரணி சிங்கைக்

குறிப்பு

சிறைமீட்டு, பாதுஷாவிடம் குதிரையும் பொன்னும் பரிசுகளாகப் பெற்றுத் திரும்புகின்றான்.

தேசிங்கு எட்டு வயது சிறுவனாக இருக்கும்போது அவன் பெற்றோர் இறந்து விடுகின்றனர். தேரணிசிங்கின் தம்பி தரணிசிங் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொண்டு தேசிங்கை வளர்க்கிறான். தேசிங்கு தன் பதினெட்டாவது வயதில், செஞ்சியின் ஆட்சிப் பொறுப்பில் அமர்கின்றான்.

மைய அரசிலிருக்கும் டில்லி பாதுஷா வரி செலுத்தும்படி ஆர்க்காட்டு நவாபுக்கு ஆணை அனுப்புகின்றான். நவாபு தன் ஆளுகைக்கு உட்பட்ட கோட்டைத் தலைவர்களுள் செஞ்சியை ஆளும் தேசிங்கு பன்னிரண்டு ஆண்டுகள் வரிப்பணம் கட்டவில்லை என்பதை அறிந்து, பணத்தை உடனே கட்டும்படி தோற்றமல்லன் என்பவன் மூலம் ஆணை அனுப்புகிறான். தேசிங்கு அதைக் கேள்வியுற்று,

*"டாறு டாறாய்க் கிழித்துப் போடுவேன் சிற்றப்ப ராசாவே*
*ஆறிலுஞ் சாவு நூறிலுஞ் சாவு சிற்றப்ப ராசாவே*
*பிறந்த அன்றைக்கே சாவிருக்குது சிற்றப்ப ராசாவே*
*வந்தவ னாரென்று கேட்டுப் பாரு சிற்றப்ப ராசாவே"*

என்று தன் வளர்ப்புத் தந்தை தரணிசிங்கிடம் கூறுகிறான். தரணிசிங் ஆளையனுப்பித் தோற்றமல்லனை வரவழைக்கிறான். "நவாபுவைப் போர்க் களத்தில் சந்திக்கிறேன்" என்று தோற்றமல்லனிடம் ஓலை கொடுத்து அனுப்புகிறான் தேசிங்கு. ஓலையில், "ஆண் பிள்ளையானால் நவாபு சாயபை இங்கே வரச் சொல்லும் அசல் பெண் பிள்ளையானால் நவாபு சாயபை அங்கே இருக்கச் சொல்லும். மீசை முளைத்த ஆண் பிள்ளையானால் சண்டைக்கு வரச்சொல்லும்" என்று எழுதப்பட்டிருந்தது.

இதைக் கண்டு கோபமுற்ற நவாபு தன் ஆட்சிக்குட்பட்ட பாளையக்காரர்கள் அனைவரையும் திரட்டிக் கொண்டு, செஞ்சிக்கு அருகிலிருக்கும் தேவனூரில் தங்குகிறான். படைகளின் வருகையை, பூசை செய்து கொண்டிருக்கும் தேசிங்கிடம் தரணிசிங் கூற, 'அரைக்கால்

நாழி பொறு, பின்வந்து அவர்களைப் பத்தல் பத்தலாய்க் கிழிக்கிறேன்' என்று கோபமாய்ப் பதிலளிக்கிறான்.

தேசிங்கின் படை வருவதற்கு முன் 'சுபங்கிதுரை' என்பவன் தேவனூரின் உள்ளே நவாபின் அனுமதியுடன் புகுந்து கொள்ளை யடிக்கிறான். பாதிக்கப்பட்ட மக்கள் தேசிங்கிடம் முறையிடுகின்றார்கள்.

வரிப்பணம் செலுத்தி நவாபுடன் சமாதானம் செய்து கொள்ளலாம் எனக் கூறிய தரணிசிங்கின் அறிவுரையைப் புறக்கணித்து, வழுதா ஊரிலிருக்கும் தன் நண்பன் மோவுத்துக்காரனுக்குச் செய்தி அனுப்புகின்றான் தேசிங்கு. திருமணக் கோலத்தில் இருந்த அவன் திருமணச் சபையில் உள்ளவரை வணங்கி, விடை கொடுத்து அனுப்புமாறு கேட்கிறான். அவன் தாயார், 'கங்கணம் கட்டியபின் சண்டைக்குப் போனால் குண்டு பாயுமடா மகனே' என்று கூறி அழுகிறாள்.

*"ஆறிலுஞ் சாவு நூறிலுஞ் சாவு என்னைப் பெற்ற தாயே*
*இரண களத்தில் செத்துப் போனால் நல்ல பதவியுண்டு*
*கத்தி முனையில் சாவே னானால் கனத்த பதவியுண்டு"*

என்று தாயிடம் வீரவுரை ஆற்றிவிட்டுப் புறப்படுகிறான் மோவுத்துக்காரன்.

கோட்டைக்கு உள்ளிருந்து போரிடுமாறு வேண்டும் இராணியின் யோசனையைக் கேளாமல் அவளிடம் விடை பெற்றுக் கொண்டு, சிறுபடை பின் தொடரப் போர்க்களம் செல்கிறான் தேசிங்கு. அவன் வணங்கும் அரங்கநாதரே தடுத்தும் அவன் முன்வைத்த காலைப் பின் வைக்கவில்லை. தேசிங்கு படையுடன் போர்க்களம் நோக்கி வரும் செய்தியை நவாபுக்குக் கூறும் பங்காரு நாயக்கன் ஒரு சூழ்ச்சி செய்து, ஏரிகளை உடைத்துவிட்டுச் சாரங்கபாணி ஆற்றில் வெள்ளம் புரண்டு வரச் செய்கிறான். தேசிங்கு வெள்ளத்தைப் பொருட்படுத்தாமல் ஆற்றைக் கடக்கிறான். முப்பது பேர்கள் மட்டுமே அவனைப் பின்தொடர முடிகிறது. ஏனையோர் திரும்பி விடுகின்றனர்.

போர் தொடங்குகிறது. முதல் போரில் மோவுத்துக்காரன் வீரமரணம் அடைகிறான். அவனையும் அவன் குதிரை நீலவேணியையும் நல்லடக்கம் செய்த தேசிங்கு, சீறும் புலியாகப் போர்க்களம் புகுந்து, சேத்துப்பட்டு தாவூத்துக்காரனை நவாபு என எண்ணிக் கொல்கிறான்.

தாவூத்துக்காரன் இறந்த செய்தியறிந்து பீதியுற்ற நவாபு தோற்றமல்லனைத் தேசிங்கிடம் சமாதானத் தூதாக அனுப்புகின்றான். தேசிங்கு அதனை ஏற்றுக் கொள்ளாமல் நவாபுவைத் தேடிப் புறப்படுகின்றான். அப்போது அரங்கநாதக் கடவுள் தோன்றித் தடுக்கின்றார். முன்வைத்த காலைப் பின்வைக்க மாட்டேன் என்று சொல்லிப் புறப்பட்ட தேசிங்கு ஒவ்வொரு பாளையக் ˙காரனையும் கொல்கிறான். தேசிங்கின் குதிரை பாராசாரியின் கால்கள் நவாபால் வெட்டப்பட தேசிங்கு கீழே இறங்கிப் போரிடுகின்றான். நவாபும் அவன் படைகளும் ஓடி ஒளிய, எதிர்த்துப் போரிட எவருமில்லாத நிலையில் தேசிங்கு தான் மட்டும் தனியனாய் நாடு திரும்ப விரும்பவில்லை. எதிரியில்லாத தேசிங்கு கத்தியை மேலெறிந்து அதனைத் தன் மார்பில் தாங்கி வீர மரணம் அடைகின்றான்.

ஒளிந்திருந்த நவாபும் மற்றவரும் ஓடிவந்து தேசிங்கின் வீரத்தைக் கண்டு ‘உன்னைப் போலச் சூரன் ஒருவருமில்லை’ எனப் பாராட்டிக் கண்ணீர் விடுகின்றனர். தேசிங்கு இறந்த செய்தி இராணியம்மாளுக்குத் தெரிவிக்கப் பட்டது. வீரமரணம் அடைந்த தேசிங்கின் உடலை எரிக்க மூட்டிய தீயிலேயே அவளும் வீழ்ந்து உயிரை விடுகின்றாள்.

*“வைகுந்த பதவி அடைந்தார்களய்யா ராஜாவும் ராணியும்*
*அரங்கர்பாதம் சேர்ந்தானையா ராஜா தேசிங்கு”*

எனத் தேசிங்குராஜன் கதை நிறைவடைகிறது.

## 6.6.2. தேசிங்குராஜன் கதைப்பாடலும் வரலாறும்

தேசிங்குராஜன் கதைப்பாடலும் வரலாறும் பெரும்பாலும் ஒத்திருந்தாலும் சில இடங்களில் மாறுபடுகின்றன. தேசிங்கு தேஜ்சிங், தேரணி ராஜன் சூலூபசிங்கு சொரூப்சிங், டில்லி பாதுஷா அவுரங்கசீப், டில்லி துரை ∴பரூக்ஷியர், தரணிசிங்கு, மோவுத்துக்காரன் மோபத்கான், நவாபு சதகத்துல்லாகான், தாவூத்துக்காரன் தவ்லத்கான் என்ற உண்மைப் பெயர்கள் சுருக்கிக் கையாளப்பட்டுள்ளது. தேசிங்கின் தந்தை பெயர் மட்டும் கதைப்பாடலில் முற்றிலும் மாறுபடுகிறது. சொரூப்சிங் என்பதே வரலாற்றாசிரியர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டது.

## 6.6.3. தேசிங்கின் காலம்

குறிப்பு

செஞ்சியின் ஆணையராக நியமிக்கப்பட்ட பிறகுதான் சொரூப்சிங் செஞ்சி வருகிறார். இதன் காலம் கி.பி.1700 எனக் கொள்ளப்படுகிறது. சொரூப்சிங் கி.பி.1713ல் இறந்துவிடுகிறார். இவருக்குப் பின் இந்துஸ்தானம் பொந்திலிகண்டிலிருந்து வந்த இவர் மகன் தேசிங்கு தன் 22ஆவது வயதில் ஆட்சிப் பொறுப்பை ஏற்கின்றான். எனவே, தேசிங்கு செஞ்சியிலேயே பிறந்து வளர்ந்தான் என்று கூறும் கதைப்பாடல் செய்தியினை விட, தந்தை நோயுற்ற செய்தி கேட்டு, பொந்திலிகண்டில் வாழ்ந்து கொண்டிருந்த தேசிங்கு இங்கு வந்தான் எனக் கூறுவர் வரலாற்றாசிரியர்கள்.

## முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

9. தேசிங்கின் நண்பன் பெயர் என்ன?
10. தேசிங்கு போரிட்ட முகலாய அரசன் யார்?
11. தேசிக்கின் சிற்றப்பா பெயர் என்ன?
12. தேசிங்கின் காலம் எது?

## 6.7. தொகுத்துக் காண்போம்

- அண்ணன்-தங்கை பாசம் பற்றியும் வறுமையின் கொடுமை பற்றியும் நல்லதங்காளின் கதையில் தெரிந்து கொண்டீர்கள்.
- முத்துப்பட்டன் கதையில் மேல்சாதி - கீழ்ச்சாதி மணஉறவு எப்படியெல்லாம் அமைந்திருந்தது என்பது பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- இளம் வயதிலேயே வரலாற்று நாயகனாக விளங்கிய தேசிங்குராஜனின் வரலாறு பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.

## 6.8.முன்னேற்றத்தைச் சோதிக்கும் வினாக்களுக்கான விடைகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | 6.3.1. | 2. | 6.4.2. |
| 3. | 6.4.1. | 4. | 6.4.1. |
| 5. | 6.5. | 6. | 6.5.1. |
| 7. | 6.5.1. | 8. | 6.5.1. |
| 9. | 6.6.1. | 10. | 6.6.1. |

11. 6.6.1. 12. 6.6.3.



## 6.9. பாடம் பயின்றபின் செய்யும் பயிற்சிகள்

குறிப்பு

1. அண்ணன்-தங்கை பாசப் பினைப்பால் ஏற்பட்ட சோகக்கதை உணர்த்தும் உண்மைகளை விவரி.
2. முத்துப்பட்டன் கதை உணர்த்தும் சமூக மாற்றத்தை விளக்குக.
3. தேசிங்குராஜன் கதையில் வரும் வரலாற்றுச் செய்திகளை எடுத்துக்காட்டுடன் விளக்குக.

## 6.10. மேலும் பயில்வதற்கான நூல்கள்


1. சு. சண்முகசுந்தரம், நான்கு கதைப் பாடல்கள், சாகித்திய அகாதெமி, புதுதில்லி, 2012.
2. சற்குணவதி, தமிழக நாட்டுப்புறவியல், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2004.


# கூறு 7. நாட்டுப்புறக் கலைகள்-கும்மி-கோலாட்டம்

## 7.1. முன்னுரை

வழிபாட்டுச் சடங்குகளின் ஒரு பகுதியாகவோ அழகுணர்ச்சியின் வெளிப்பாடாகவோ பொழுது போக்குக்காகவோ மக்கட் குழுக்களால் உருவாக்கப்படும் அல்லது நிகழ்த்தப்படும் செவ்வியல் கலைகள் தவிர்த்த ஏனைய மரபுவழிக் கலைகளை நாட்டுப்புறக் கலைகள் எனலாம். இந்நாட்டுப்புறக் கலைகள் அனைத்தையும் இரண்டு பெரும் பிரிவுகளாகப் பாகுபடுத்துவர். அவை நிகழ்த்துக் கலைகள், நிகழ்த்தாக் கலைகள் ஆகும். கரகாட்டம், காவடியாட்டம், தேவராட்டம், கும்மியாட்டம், கோலாட்டம், மயிலாட்டம், ஒயிலாட்டம், பொய்க்கால் குதிரையாட்டம் போன்றவற்றை நிகழ்த்துக்கலைகள் என்றும், பச்சைமண் சுடுமண் மாவு காகிதக்கூழ் உலோகம் முதலியவற்றால் செய்யப்படும் சிலைகள், பொம்மைகள், கலைப்பொருட்கள், ஒப்பனைப் பொருட்கள் போன்றவற்றை நிகழ்த்தாக் கலைகள் என்றும் குறிப்பர். இங்கு நிகழ்த்துக் கலைகளில் கும்மியாட்டம், கோலாட்டம், கரகாட்டம்,

ஒயிலாட்டம், மயிலாட்டம், பொய்க்கால் குதிரையாட்டம் ஆகிய ஆட்டங்கள் மட்டும் பாடப்பகுதியாக வைக்கப்பட்டுள்ளது.

குறிப்பு

## 7.2. குறிக்கோள்கள்

- நாட்டுப்புறக் கலைகள் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- கும்மியாட்டம் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- கோலாட்டம் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.

## 7.3. நாட்டுப்புறக் கலைகள்

ஆய கலைகள் அறுபத்து நான்கு என்று முன்னோர் கூறுவார்கள். ஆனால் மனிதனது செயல்பாடுகள் அனைத்தும் கலைகளே. அதாவது அவன் வெளிப்படுத்தும் பேச்சு, நடத்தை, செயல் முதலான அனைத்தையும் கலை எனலாம். எனவே மனிதனது வாழ்வே கலைமயமானது என்று கூறலாம்.

### 7.3.1. கலைகள் அறிமுகம்

ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்கள் போன்று இன்பமும் துன்பமும் இணைந்ததுதான் மனித வாழ்க்கை. அவற்றை உணர்ந்து அனுபவிப்பது மனம். மனிதனின் மனத்திலிருந்து பல்வேறு உணர்வுகள் எழுகின்றன. அவை யாவும் பல்வேறு வடிவங்களாக வெளிப்படுகின்றன. இவ்வெளிப்பாடுகள் கலைகளாக மாறுகின்றன. இன்னும் சில செயற்பாடுகள் நுட்பமானதாகவும் மக்களின் திறமையை வெளிக்காட்டுவதாகவும் அமைகின்றன. அவ்வாறு வெளிப்படுத்தப்படுவதைச் சுவைப்பவனும் பாராட்டுகின்றான். அதாவது எல்லா வெளிப்பாடுகளையும் ரசிக்கிறான். புதிது புதிதாகச் செய்ய முனைகிறான். இவ்வாறு மக்கள் தங்களுடைய உணர்வுகளின் அடிப்படையில் செய்யப்படுகின்ற செயல்பாடுகள் அனைத்தும் கலைகளாக அமைகின்றன. இத்தகைய கலைகள் உலக மக்கள் அனைவரிடமும் காணப்படுகின்றன. அவ்வகையில் நாட்டுப்புற மக்களிடமும் பல்வேறு விதமான கலைகள் மக்களின் இருப்பிடத்திற்கு ஏற்றவாறு காணப்படுகின்றன.

குறிப்பு

மண்ணில் வாழும் மக்களிடமும் மலையில் வாழும் மக்களிடமும் கலைகள் பரவலாகக் காணப்பட்டாலும் இயல்பாகவே எதையும் வெளிப்படுத்தும் நாட்டுப்புற மக்களிடமும் கலைகள் வெளிப்படுத்தப் படுகின்றன. அதாவது, இயற்கைச் சூழலில் வாழும் பாமர மக்களான கிராம மக்களிடம் எளிமையாக வளர்ந்து இனிமையாக வெளிப்பட்டு உணர்ச்சிகளின் உறைவிடமாய் அமைந்துள்ள இனிய கலைகளே நாட்டுப்புறக் கலைகள் எனப்படும்.

## 7.3.2. கலைகளின் வகைகள்

நாட்டுப்புற மக்களிடையே காணப்படும் பல்வேறு விதமான நாட்டுப்புறக் கலைகளைக் கண்ட ஆய்வாளர்கள் தாங்கள் சேகரித்த கலைகளை ஒன்று திரட்டி, தொகுத்தவற்றைப் பகுத்து அவற்றின் தன்மைகளை அடிப்படையாகக் கொண்டு வகைப்படுத்தியுள்ளனர். ஏ.என். பெருமாள் சமூகச் சார்புக் கலைகள், வழிபாட்டுக் கலைகள், தெய்மேறிய கலைகள், தொன்ம விளக்கக் கலைகள், நாடக அமைப்புக் கலைகள் என்று ஐந்தாகப் பகுக்கின்றார். நிகழ்த்துக் கலைகள், நிகழ்த்தா கலைகள், பொருட்கலைகள் என்று சு. சக்திவேல் மூன்றாகப் பகுக்கின்றார். பொருட்கலைகள், நிகழ்த்துக் கலைகள் என்று ஆறு. இராமநாதன் இரண்டாகப் பகுக்கின்றார்.

சு. சக்திவேல் மற்றும் ஆறு. இராமநாதன் ஆகியோர் சாதி, ஆடும்முறை அல்லது பண்பு, பாடுபவர், நேரம், பொருள், இசைக்கருவி, வேடம், இசைக்கருவி வேடம், நிகழ்த்தும் இடம் ஆகிய ஒன்பதின் அடிப்படையில் நாட்டுப்புறக் கலைகளின் வகைப்பாடுகளைப் பாகுபாடு செய்திருக்கின்றனர். இதனடிப்படையில், பொருட் கலைகள், நிகழ்த்துக் கலைகள், ஏனையவை என்ற மூன்று பெரும் பிரிவுக்குள் நாட்டுப்புறக் கலைகள் அடங்கும்.

### 7.3.2.1. பொருட் கலைகள்

பொருட் கலைகள் என்பது, பொருட்களை அடிப்படையாகக் கொண்டு செய்யப்படும் கலைகள் பொருட் கலைகள் எனப்படும். எடுத்துக்காட்டாக ஓவியம் தீட்டுதல், பச்சை குத்துதல், கோலம் போடுதல், சுடுமண் சிலைகள், பொம்மைகள், ஓலைத் தோரணங்கள்,

குறிப்பு

பனை ஓலை கலைப்பொருட்கள், துணியில் செய்யப்படும் வேலைப்பாடுகள், கோரைப்பாய் உருவாக்குதல், கோரைப்பாயில் உருவாக்கப்படும் உருவங்கள், பொன் நகை வேலைப்பாடுகள், குறி சொல்லுதல், பச்சை குத்துதல், கொடும்பாவி கொளுத்துதல், ஊஞ்சலாட்டம், மணமகள் ஒப்பனைப் பொருட்கள், மணவறை ஒப்பனை, கோயில்தேர், சப்பரம், தெய்வ ஒப்பனைப் பொருட்கள் முதலானவற்றையும் இதுபோன்றவற்றையும் இவற்றுள் அடக்கலாம்.

### 7.3.2.2. நிகழ்த்துக் கலைகள்

நிகழ்த்துக் கலைகள் என்பது, நிகழ்ச்சி அமைப்பாக மக்களுக்கு நிகழ்த்திக் காட்டப்படும் கலைகள் நிகழ்த்துக் கலைகள் எனப்படும். எடுத்துக்காட்டாக சிண்டு நடனம், புலி வேடம், பகல்வேடம் புனைதல், உறுமிக் கோமாளி ஆட்டம், குறவன் குறத்தி நடனம், சிலம்பாட்டம், சேவல் போர், ஆட்டுக்கிடாச் சண்டை, தேங்காய்ப்போர், வண்டிப் பந்தயம், கும்மியாட்டம், கோலாட்டம், களியலடித்தல், பொடிகழி ஆட்டம், ஆலி ஆட்டம், வேதாள ஆட்டம், சக்கை ஆட்டம், உடுக்கடிப்பாட்டு, கரகாட்டம், காவடியாட்டம், தேவராட்டம், மயிலாட்டம், ஒயிலாட்டம், பொய்க்கால் குதிரையாட்டம், காளியாட்டம், உறியடித்தல், கழைக்கூத்து, பாரதம் படித்தல், கதைப்பாட்டுப் படித்தல், வில்லுப்பாட்டு, பாவைக் கூத்து, தெருக்கூத்து, கணியான் கூத்து, கோலாட்டம் முதலானவற்றைக் கூறலாம்.

பொருட் கலைகள் மற்றும் நிகழ்த்துக் கலைகள் என்ற இவ்விருவகைப் பிரிவுகளும் ஒன்றோடொன்று தொடர்புடையவை என்றாலும் பெரும்பான்மை அடிப்படையாக அமைவது பொருளாக இருந்தால் பொருட்கலை என்றும், நிகழ்த்துதலாக இருந்தால் நிகழ்த்துக்கலை என்றும் அழைக்கப்படுகிறது.

## 7.4. கும்மி

பெண்கள் ஒருங்கிணைந்து வயது வேறுபாடு இல்லாமல் ஒருவர் பாட ஏனையோர் பின்பாட கை குவித்து அடித்துக் கொண்டே வட்டமாகச் சுற்றி வந்து ஆடும் ஆட்டமே ‘கும்மி’ ஆகும். கும்மிப் பாடல் பற்றிப் பாரதியார்,

*“வட்டமிட்டுப் பெண்கள் வளைக்கரங்கள் தாமொலிக்கக்*

*கொட்டி இசைத்திடுமோர் கட்டமுதப் பாட்டு"*

என்கின்றார். இந்த ஆட்டத்தைச் சுட்டுவதற்குக் 'கும்மி', 'கும்மி கொட்டுதல்' என்ற சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. இச்சொல், 'கைக்கொட்டுதல்' என்று பொருள்படும் 'கும்முதல்' என்ற சொல்லோடு தொடர்புடையது. கொம்மி கொட்டுதல் என்ற சொல்லும் கும்மி இலக்கியங்களில் பயன்படுத்தப்படுகிறது. பழமொழி நானூறு, சீவகசிந்தாமணி, நைடதம் முதலான பழந்தமிழ் இலக்கியங்களில் இடம்பெறும் 'கொம்மை கொட்டல்' என்ற சொல்லோடு தொடர்புடையதாக இச்சொல் காணப்படுகிறது.

*"நோற்ற பெருமை யுடையாருங் கூற்றம்*
*புறங் கொமமை கொட்டினார் இல்"*

எனப் பழமொழியிலும், சீவக சிந்தாமணியில்,

*"குஞ்சரம் கூற்றொடு கொம்மை கொட்டுவ"*
*"கூற்றத்தைக் கொம்மை கொட்டிக்*
*குலத்தொடு முடியுமென்பார்"*

என்றெல்லாம் குறிப்பிடுவதைக் காணலாம். மேலும் நைடதத்தில்,

*"கூற்றொடுங் கொம்மை கொட்டி குவிக்கும்"*

என்று இடம்பெற்றுள்ளதைக் காணலாம்.

ஆந்திர பிரதேசத்தில் 'கொப்பி கொட்டுதல்' என்றும், கேரளத்தில் 'கைக்கொட்டிக் களி' என்றும், தமிழகத்தில் 'கொண்டாங் கொட்டுதல், தன்னானே கொட்டுதல், தட்டியாங் கொட்டுதல், கொம்மி கொட்டுதல்' என்றெல்லாம் குறிப்பிடுவர். சமண மதத்தில் இக்கும்மியைச் 'சோபனம்' என்று சுட்டுகின்றனர். தருமதேவி சோபனமாலை, பத்மாவதி சோபனமாலை என்ற நூல் பெயர்களிலும் இச்சொல் குறிக்கப்படுகிறது. கும்மியைக் குறித்து வழங்கப்படும் அனைத்துச் சொற்களிலும் 'கொட்டுதல்' கைகளைத் தட்டுதல் என்ற பொருள் தரக்கூடிய சொல் சிறப்பாக இடம்பெறுவதைக் காணலாம். கும்மியாட்டத்தில் கைகளைக் கொட்டுதல் என்னும் செயல் முதன்மை பெறுவதை இது தெளிவுபடுத்துகிறது.

## 7.4.1. கும்மியின் அமைப்பு

தமிழகத்தின் அனைத்துப் பகுதிகளிலும் காணப்படும் ஒரு விளையாட்டு கும்மி. தமிழகத்தின் வடமாவட்டங்களில் பொழுது போக்கை அடிப்படையாகக் கொண்டே கும்மி நிகழ்த்தப்படுகிறது. பொங்கல் திருவிழாவையொட்டி கரிநாளன்று பெண்கள் கும்மி அடிக்கின்றனர். பொழுதுபோக்கே அடிப்படை நோக்கமாக அமைகின்றது. ஆடுவோர் எண்ணிக்கையில் வரையறை ஏதுமில்லை. குறைந்தது நான்கு பேர் இருக்க வேண்டும். தேவைப்படும்போது கும்மி வட்டத்தினுள் இடையில் சேர்ந்து கொள்வதும் அவ்வாறே இடையில் வெளியேறுவதும் நிகழக்கூடும். இவ்வாறு சேரும் அல்லது விலகும் எண்ணிக்கைக்கு ஏற்ப வட்டத்தின் அளவு விரியவோ சுருங்கவோ செய்யும்.

ஆடுவோருக்கு வயது வரம்பு இல்லை. பத்து வயது முதல் அறுபதுக்கும் மேற்பட்டவர்கள் வரை இக்கும்மியை ஒரே வட்டத்தில் அடிக்கலாம். இம்மியைச் சில நேரங்களில் பெண்களுடன் ஆண்களும் இணைந்தும் தனித்தும் கும்மி அடிக்கின்றனர். இந்தக் கும்மியாட்டத்தில் வலக்கால் முன் வைத்தல், குனிதல், இரு கைகள் கொட்டுதல், இடக்கால் பக்கவாட்டில் நகருதல், வலக்கால் பின்வரல், நிமிர்தல், கைகள் இயல்பு நிலைக்கு வரல் என்னும் ஆட்ட அசைவுக் கூறுகள் பாடல் பாடி ஆடும்போது முறையே தொடர்ந்து அமையும். உள்ளங்கைகளை மட்டும் இணைத்துக் கொட்டுவதும், இடது உள்ளங்கையில் வலது கையின் நான்கு விரல்கள் மட்டும் பொருந்தக் கொட்டுவதும் இரு கைகளாலும் கும்பிடுமாறு குவியக் கொட்டுவதுமான கைக்கொட்டுதல்கள் கும்மி ஆட்டத்தில் காணப்படும்.

## முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

1. நாட்டுப்புறக் கலைகள் எத்தனை வகைப்படும்? அவையாவை?
2. நிகழ்த்துக்கலை என்றால் என்ன?
3. கும்மியின் வேறு பெயர்கள் யாவை?
4. கேரளக் கும்மிக்கு என்ன பெயர்?

### 7.4.2. கும்மியின் வகைகள்

கும்மியாட்டத்தில் பல்வேறு வகைகள் இருக்கின்றன. பெண்கள் கும்மியடித்துக் கொண்டே வட்டமாகச் சுற்றி வருவதை 'சுத்துக் கும்மி' என்றும், வரிசையாக நின்றுகொண்டே பாடல் பாடி கை குவித்து அடித்து வருவதை 'நிண்ணு கும்மி' என்றும் அழைப்பர். இவையன்றி நாலாங் கொண்டான், எட்டாங் கொண்டான் என்ற கும்மிகளும் காணப்படுகின்றன.

#### 7.4.2.1. கோயில் விழாக்களில் கும்மி

தமிழகத்தின் வட மாவட்டங்களில் கும்மி பொழுதுபோக்கை நோக்கமாகக் கொண்டிருக்க, தென்மாவட்டங்களில் அது வழிபாட்டுச் சடங்கோடு நெருங்கிய தொடர்புடையதாகக் காணப்படுகிறது. குறிப்பாக, புதுக்கோட்டை, இராமநாதபுரம், சிவகங்கை, விருதுநகர் முதலான மாவட்டங்களில் கும்மி ஆடும் சூழல் முற்றிலும் மாறுபடுகிறது. இம்மாவட்டங்களில் மழை வேண்டி அம்மனுக்கு நிகழ்த்தப்படும் முளைப்பாரிச் சடங்குகளின்போது பெண்கள் கும்மி கொட்டுகின்றனர். இதனை 'முளைக்கொட்டு' என்கின்றனர். இப்பகுதிகளில் ஆண்கள், பெண்களோடு இணைந்து கும்மியடிப்பது மிக அருகிக் காணப்படுகிறது. சில ஊர்களில் ஊர்களில் ஆண்கள் ஓரிடத்தில் நின்றுபாட, பெண்கள் பின்பாட்டுப் பாடிக்கொண்டு கும்மியடிக்கின்றனர். தமிழகத்தின் வட மாவட்டங்களில் அம்மன் ஊர்வலத்தின் போதும் அம்மன் புகழ்பாடி ஆண்கள் கும்மியடிக்கின்றனர்.

#### 7.4.2.2. பூப்புச் சடங்கில் கும்மி

தமிழகத் தென்மாவட்டங்களில் பெண்ணின் பூப்புச் சடங்கின்போது பெண்கள் கும்மியடிக்கின்றனர். தமிழகத்தில் திண்டிவனத்தில் காணப்படும் சமணர்களிடையே பூப்புச் சடங்கின்போது கும்மியடிக்கும் பழக்கம் காணப்படுகிறது. கும்மியடிப்பதற்காக, பெண்களை வீடுதோறும் சென்று அழைத்து வருகின்றனர். பூப்படைந்த பெண் வீட்டார்தான் அழைக்கின்ற பொறுப்புடையவர். ஒருமுறை இருமுறையன்று மூன்றுமுறை அழைப்பர். இதற்கு 'மூன்றாம் அழைப்பு' என்பர். அழைக்க வருகின்றனர்,

*"சோபனம் பாட வாங்க*

*சோபனம் பாட வாங்க*
*அங்கே உணவும் கொள்ள வாங்க”*

என்று அழைக்கின்றனர்.

குறிப்பு

### 7.4.2.3. இறப்புச் சடங்கில் கும்மி

இறந்த வீட்டின் முன் நிகழ்த்தப்படும் ஒருவகை ஆட்டம் ‘இறப்புக் கும்மி’. இக்கும்மியை வயது முதிர்ந்தவர்கள் இறக்கும்போது மட்டுமே நிகழ்த்தப்படுகிறது. இதில் பங்கேற்போரின் எண்ணிக்கைக்கோ நிகழ்த்தப்படும் காலத்திற்கோ வரையறை இல்லை. இறப்பு நிகழ்ந்த வீட்டில் உறவினர்கள் இறந்தவர்கள் பெயர் சொல்லி வாழைப்பழத்தார் கொண்டு வந்து வைக்க, அதனைச் சுற்றி இறப்புக் கும்மி நிகழ்த்தப் படுகிறது. இதில் பெண்களோடு ஆண்களும் சேர்ந்துக்கொள்வர். இறப்பு வீட்டில் முதலில் ஏழு பெண்கள் கும்மியடிக்கத் தொடங்கி, பின் ஒவ்வொருவராக இணைந்துக் கொள்வர்.

### 7.4.2.4. திருநங்கையர் கும்மி

திருநங்கையர், கூத்தாண்டவர் கோயில் திருவிழாவிற்குச் செல்வதற்கு முன் அவரவர் ஊர்களில் கும்மியடித்துப் பாடல் பாடிப் பணம் அல்லது பொருளைப் பெறுகின்றனர். சில இடங்களில் தனியாகவும் இவர்கள் கும்மியடிப்பதுண்டு. வட்டமாகச் சுற்றிவராமல் ஒரே இடத்தில் நின்றுக் கொண்டு கைகொட்டி கும்மிப்பாடல் பாடுவதும் உண்டு.

## 7.5. கோலாட்டம்

ஆண்களும் பெண்களும் தனித்தனியாகவோ ஒருங்கிணைந்தோ கோல்களைக் கையில் பிடித்துக்கொண்டு ஆடும் ஆட்டம் கோலாட்டம் ஆகும். இக்கோலாட்டத்தைக் களியல், களியல் அடி, களியல் ஆட்டம், கிட்டியடித்தல், கிட்டியாட்டம், கிட்டியடியல், வைந்தானை ஆட்டம், வசந்தன் கூத்து என்றெல்லாம் குறிப்பிடுவர். இக்கோலாட்டம் தமிழகத்தில் பொழுது போக்கினை நோக்கமாகக் கொண்டதாகத் திகழ்கிறது. மேலும், இந்துக்களின் கோயில் திருவிழாக்களிலும், திருமணம், புதுமனை புகுவிழா, வரவேற்பு விழாக்கள், வெற்றி விழாக்கள்,

பள்ளி-கல்லூரி ஆண்டு விழாக்கள், பூப்புச் சடங்கின் போதும், இறப்புச் சடங்கின் போதும், ஆசான்களின் கலைத்திறனைச் சோதிப்பதற்கான போட்டி நிகழ்ச்கிகளின் போதும் இவ்வாட்டம் நிகழ்த்தப்படுகிறது.



### 7.5.1. கோலாட்டத்தின் அமைப்பு

கோலாட்டம் ஆடுவோரின் எண்ணிக்கையில் வரையறை இல்லை. கோலாட்டம் ஆடுபவர்கள் இரட்டைப்படையில் இருக்க வேண்டும். நான்கு ஜோடி, ஆறு ஜோடி, எட்டு ஜோடி, பத்து ஜோடி, பன்னிரண்டு ஜோடி என்று எத்தனை பேர் வேண்டுமானாலும் ஆட்டத்தில் கலந்துகொள்ளலாம். ஆயினும் எண்ணிக்கை மிகுதியாக ஆக ஆட்டம் ஆடுவதில் சிக்கல் ஏற்படும் என்பதால் எட்டு முதல் பன்னிரண்டு பேர் ஆடுவதைச் சிறப்பாகக் கருதினர். பத்து வயது முதல் ஆடும் திறனுள்ள அனைவரும் கோலாட்டம் ஆடுவர். ஆடுவதற்கு வயது உச்சவரம்பு இல்லை. ஆடும் திறனே முதன்மையாகக் கருதப்படுகிறது. கோலாட்டத்தில் ஈடுபடுவோர் பெரிய அளவில் ஒப்பனை ஏதும் செய்து கொள்வதில்லை. வேட்டி சட்டை அணிந்தே கோலாட்டம் ஆடுகின்றனர். பெண்கள் வழக்கமான உடையுடன் கோலாட்டம் ஆடுகின்றனர். ஆனால் தொழில்முறைக் கலைஞர்கள் ஒரே வண்ணத்தில் அரைக்கால் சட்டையும் வெள்ளை முண்டா பனியனும் அணிகின்றனர். சிலர் சமீப காலங்களில் தலையைச் சுற்றி ரிப்பன் கட்டிக் கொள்கின்றனர்.

கோலாட்டத்தில் இசைக் கருவிகள் பயன்படுத்தப்படும். இடத்திற்கு இடம் இவ்விசைக் கருவி மாறுபடும். ஆர்மோனியம், மத்தளம், ஜால்ரா, பேண்டு வாத்தியம், குந்தளம் எனும் தோல் கருவி, தவில் போன்ற கருவிகள் பயன்படுத்தப்படுகின்றன. சில இடங்களில் இசைக்கருவிகள் இல்லாமலும் கோலாட்டம் நிகழ்த்தப்படுகிறது. கோலாட்டம் நிகழும் போது பாடல் பாடுவர். இந்தப் பாடலைத்தான் பாடவேண்டும் என்ற வரையறை இல்லை. எப்பொருளிலும் பாடல் அமையலாம். காலடிதான் முக்கியம்.

### 7.5.2. கோல் அமைப்பு

கோலாட்டத்திற்குத் தேவைப்படும் முக்கியப் பொருள் கோல். இக்கோல் ஆடப்படுவோரைப் பொருத்தும், ஆட்ட இடத்திற்கு ஏற்பவும்

அமைந்திருக்கும். தச்சு வேலைப்பாடு மிக்க வர்ணம் தீட்டி பித்தளை பூண் மாட்டி, மணிகள் கோர்த்து, அலங்கரிக்கப்பட்ட கம்புகளுடன் கூடியது.

குறிப்பு

கோலின் அடிப்புறம் கைப்பிடிக்கும் இடத்தில் மேலும் கீழும் குமிழ் போன்ற அமைப்புடனும் நுனியில் சிறு குமிழ் போன்ற அமைப்புடனும் மரத்தில் அழகுறக் கடையப்பட்டு பாலிஷ் செய்யப்பட்டது.

பூவரது மற்றும் வாகை மரத்தின் வயிரம் பாய்ந்த பகுதியில் இருந்து மூன்று அல்லது மூன்றரை அடி நீளமுடையது எனக் கோலாட்டக்கோல் அமையும். பெண்கள் கோலாட்டத்தில் சிறிய குச்சிகளைப் பயன்படுத்துவகின்றனர்.

### 7.5.3. கோலாடும் முறை

இடத்திற்கு இடம் கோலாட்டம் ஆடக்கூடிய முறை மாறுபடுகிறது. ஆடுகளத்தில் ஆடுவோர் வந்த பின்னர் ஆடுவோர் தனியாகவும் பாடல் பாடும் அண்ணாவி தனியாகவும் இருப்பர். ஆட்டத்தின் நடுவில் ஒரு பொருளை (உரல் அல்லது குத்து விளக்கு) வைத்து அதனை மையமிட்டுக் கோலாடுவர். ஆட்டக் குழுவில் பத்து முதல் பதினைந்து நபர் வரை ஒரே உயரமுடையவர்கள் இடம்பெற்றிருப்பர். முதலில் கடவுள் வணக்கம் பாடுவர். ஆசான் பாடல்களைப் பாடுவார். அவரே தாளத்தையும் அடிப்பார். அவருடன் சேர்ந்து அவர் மகனும் பாடுவார். நால்வர் பின்பாட்டுப் பாடுவர். பின்பாட்டுப் பாடிய இருவர் கைகளையும் தாளத்துடன் தட்டுவர். ஒருவர் பாண்ட் வாத்தியம் இசைப்பர். ஒருவர் பெட்டி இசைப்பர். இருவர் இருவராகத் தனிவட்டமாக முதலில் ஆட, பிறகு நால்வர் நால்வராகத் தனி வட்டமாக நின்று ஆடுவர். பிறகு எண்மரும் ஒரே வட்டமாக நின்று ஆடுவர். துள்ளிக் குதித்து சுற்றி வந்து தங்களுடைய கைகளில் இருந்த கோல்களிலும் மற்றவர் கோல்களிலும் மாறிமாறி அடித்தபடி ஆடுவர்.

#### 7.5.3.1. பின்னல் கோலாட்ட முறை

பின்னல் கோலாட்டம் என்பதை கயிறு பின்னல் ஆட்டம் என்றும் அழைக்கப்படுகிறது. இந்த ஆட்டத்தில் உயரத்தில் கட்டப்பட்ட வண்ணத்துணிப் பட்டைகளின் அல்லது கயிறுகளின் ஒரு நுனி

கோலாட்டம் அடிக்கும் ஆட்டக்காரர்களின் கையில் இருக்கும். ஆட்டக்காரர்கள் ஆடிக்கொண்டே பின்னலைப் போடுவதும் பிறகு ஆடிக்கொண்டே அதனைச் சிக்கல் இல்லாமல் விடுவிப்பதும் இந்த ஆட்டத்தின் சிறப்பு ஆகும். ஆட்டத்தில் சிறு பிழை ஏற்பட்டாலும் பின்னலில் சிக்கல் ஏற்பட்டுவிடும் என்பதால் நன்கு தேர்ச்சி பெற்றவர்களே இவ்வாட்டத்தினை ஆடுவர். இருபத்தொரு பின்னல் கோலாட்டங்கள் இருப்பதாகக் கூறுவர். அவற்றில் ஒன்று மட்டும் இங்குக் காண்போம்.

கிழக்கில் மூவரும், தெற்கில் மூவரும், மேற்கில் மூவரும், வடக்கில் மூவருமாக எதிரெதிரே நிற்க வேண்டும். கிழக்கில் நின்று மூவர் 'தா.தை.தா.தை' என்று காலால் தட்டிக்கொண்டு மேற்கு நோக்கி நகர வேண்டும். அரே சமயத்தில் மேற்கில் நின்ற மூவரும் கிழக்கு நோக்கி அவ்வண்ணமே நகர வேண்டும். ஒருவரையொருவர் சந்திக்கையில் எதிரிலுள்ளவரின் வலதுபுறமாகச் சென்று எதிர்ப்பக்கத்தில் நிற்க வேண்டும். இவ்விதமாகவே வடக்கில் உள்ளவர்களும், தெற்கில் உள்ளவர்களும் நகர்ந்து எதிர்ப்பக்கத்தில் நிற்க வேண்டும். திரும்பத் திரும்ப இப்படியே நகர்ந்தால் வேண்டிய நீளத்திற்கோ கனத்திற்கோ பின்னல் போடப்படும். போடப்பட்ட பின்னலை அவிழ்க்க, பின்னலிடுகையில் கடைசியில் நின்ற வரிசையில் உள்ளவர்களும் அவர்களுக்கு எதிரில் உள்ளவர்களும் மேற்கூறிய விதமாக நகர, பின்னல் அவிழ்ந்துவிடும். பின்னலை அவிழ்க்கையில் எதிரில் உள்ளவர்களின் வலதுபுறமாகச் செல்லாமல் இடதுபுறமாகச் செல்ல வேண்டும். இப்பின்னல் கோலாட்டத்தினைப் பெண்களே பெரும்பாலும் ஆடுகின்றனர்.

## முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

5. கும்மியின் வகைகள் எத்தனை? அவையாவை?
6. மூன்றாம் அமைப்பு என்றால் என்ன?
7. கோலாட்ட அமைப்பு பற்றி விவரி.
8. கோலாட்டத்தில் கோலமைப்பு எப்படி இருக்கும்?

## 7.6. தொகுத்துக் காண்போம்

- நாட்டுப்புறக் கலைகளின் தன்மைகள் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.

குறிப்பு

- கும்மியாட்டம் பற்றியும் அவற்றின் வகைகள் பற்றியும் தெரிந்து கொண்டீர்கள்.
- கும்மியாட்டம் நிகழ்த்தும் முறைகள் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- கோலாட்டம் பற்றியும் அவற்றின் வகைகள் பற்றியும் தெரிந்து கொண்டீர்கள்.
- கோலாட்டம் நிகழ்த்தும் முறைகள் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.

## 7.7.முன்னேற்றத்தைச் சோதிக்கும் வினாக்களுக்கான விடைகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | 7.3.2. | 2. | 7.3.2.2. |
| 3. | 7.4. | 4. | 7.4. |
| 5. | 7.4.2. | 6. | 7.4.2.2. |
| 7. | 7.5.1. | 8. | 7.5.2. |

## 7.8. பாடம் பயின்றபின் செய்யும் பயிற்சிகள்

1. நிகழ்த்துக் கலைகள் பற்றிக் கட்டுரை வரைக.
2. கும்மியின் வகைகளை எடுத்துக்காட்டுடன் விளக்குக.
3. கோலாட்டம் பற்றிக் கட்டுரை வரைக.

## 7.9. மேலும் பயில்வதற்கான நூல்கள்

1. ஆறு. இராமநாதன், நாட்டுப்புறக் கலைகள், மெய்யப்பன் தமிழாய்வகம், சிதம்பரம், 2001.

# கூறு 8. கரகாட்டம்-மயிலாட்டம்-ஒயிலாட்டம்-பொய்க்கால் குதிரை

## 8.1. முன்னுரை

நாட்டுப்புற நிகழ்த்துக் கலைகள் மக்களின் சிந்தனையைத் தூண்டுவதாகவும், பொழுது போக்கிற்காகவும், வாழ்வாதாரத்திற்காகவும் அமைந்திருப்பவை. இக்கலைகள் ஏராளமாக இருப்பினும் இங்குக் கருவி இசை ஆட்டங்களில் கரகாட்டம், மயிலாட்டம், ஒயிலாட்டம், பொய்க்கால்

குதிரையாட்டம் ஆகிய நான்கு நிகழ்த்துக் கலை ஆட்டங்கள் பாடப்பகுதியாக அமைந்துள்ளது.



குறிப்பு

## 8.2. குறிக்கோள்கள்

- கரகாட்டம் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- மயிலாட்டம் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- ஒளிலாட்டம் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- பொய்க்கால் குதிரையாட்டம் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.

## 8.3. கரகாட்டம்

மண்ணாலோ செம்பு பித்தளை முதலான உலோகத்தாலோ சிறு பானை வடிவில் உருவாக்கப்பட்டு, பயன்படுத்தப்படும் சூழல்களுக்கேற்ப ஒப்பனை செய்யப்படும் கரகத்தினைத் தலையில் வைத்துக்கொண்டு கீழே விழுந்துவிடாமல், கருவி இசைச்கேற்ப ஆடப்படும் ஆட்டமே கரகாட்டம். இவ்வாட்டத்திற்குத் தமிழகத் தென்மாவட்டங்களில் 'குப்பாட்டம், குட்டத்து ஆட்டம்' போன்ற பெயர்களும் உண்டு.

### 8.3.1. கரகாட்ட வகைகள்

தமிழகத்தில் இன்று ஆடப்படும் சூழல் மற்றும் நோக்கம் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு பார்க்கும்போது கரகாட்டம் இரண்டு நிலைகளாகப் பிரிக்கப்படுகிறது. ஒன்று, அம்மன்கோயில் வழிபாட்டுச் சடங்கின் ஒரு அங்கமாகத் திகழும் 'சக்திக் கரகம் அல்லது அம்மன் கரகம்'. மற்றொன்று, கோயில் திருவிழா ஊர்வலங்கள், அரசியல் ஊர்வலங்கள், வாழ்வியல் சடங்குகள் தொடர்பான ஊர்வலங்கள், வரவேற்பு நிகழ்ச்சிகள் முதலான நிகழ்ச்சிகளில் பொழுது போக்குக்காக ஆடப்படும் 'ஆட்டக் கரகம்'.

#### 8.3.1.1. சக்திக் கரகம் அல்லது அம்மன் கரகம்

தமிழகம் முழுவதும் அம்மன் கோயில் திருவிழாக்களில் கரகமெடுத்தல் மிக இன்றியமையாத சடங்காகக் காணப்படுகிறது. கரக ஒப்பனை, கரகம் எடுப்பவரின் ஒப்பனை, கரகமெடுக்கும் முறை, இசைக்கருவிகள், கரகம் பற்றிய நம்பிக்கைகள் முதலானவற்றில்

இடத்துக்கு இடம் சிற்சில மாறுபாடுகள் காணப்படும். என்றாலும் கரகம் வழிபாட்டுக்குரிய புனிதப் பொருளாகவும், தெய்வ வடிவமாகவும், கரமெடுப்பவர் வணங்கத்தக்கவராகவும் கருதப்படுவர். மேலும் அம்மன் கோயில் பூசாரி அல்லது கரகமெடுக்கும் பரம்பரை உரிமையுடையவர் மட்டுமே கரகமெடுப்பர் என்பதும், கரகம் எடுப்பதற்கு முன் சில நாட்கள் விரதமிருந்து தூய்மை காப்பர் என்பதும், அம்மன் கரகம் அல்லது சக்திக் கரகத்தினை ஆண்கள் மட்டுமே எடுக்க இயலும் என்பதும், ஒரு கோயில் விழாவில் ஒருவர் மட்டுமே கரகக்காரராக இருப்பார் என்பதும் அறியப்படும்.

சக்திக் கரகம் பொதுவாக அம்மன் கோயில்களில் எடுக்கப்பட்டாலும் கரகம் பற்றிய பல கதைகளும் நம்பிக்கைகளும் திரௌபதியைச் சுற்றியே அமைந்துள்ளன எனலாம். குருசேத்திரப் போருக்குப்பின் பாண்டவர்களும் திரௌபதியும் சொர்க்கத்திற்குச் சென்று கொண்டிருந்தனர். அப்போது திரௌபதி மயங்கி விழுந்தாள். அவளுக்கு நினைவு திரும்பியபோது பாண்டவர்களைக் காணவில்லை. அப்போது திமிராசூரன் என்ற அரக்கன் அவள் அழகில் மயங்கி அவளைத் தூக்கிச் செல்ல முயல, திரௌபதி வீர வடிவம் எடுத்து தலையில் கரகத்துடன் தோன்றி அவனைக் கொன்றாள். அவள் வீர வடிவம் எடுத்தபோது தலையில் கரகம் இருந்ததால் அவள் கோயில்களில் கரகம் எடுக்கப்படுகிறது என்பர்.

## 8.3.1.1.1. முளைப்பாரியும் கரகமும்

முளைப்பாரிச் சடங்கு அம்மன் கோயில்களில் குறிப்பாக மாரியம்மன் கோயில்களில் நடைபெறுகிறது. முளையையும் கரகத்தையும் அம்மனின் வடிவமாகவும் செழிப்பின் சின்னமாகவும் கருதுகின்றனர். கரகச் செம்புநீர் மழைநீரின் குறியீடாகக் கருதப்படுகிறது. அதை வணங்கி ஆற்றில் விடுவதன் வாயிலாக ஆற்றில் நீர் பெருகும் என்ற நம்பிக்கை மக்களிடையே உள்ளது.

வளர்பிறை செவ்வாய்க்கிழமையில் ஊரிலுள்ள ஒரு குறிப்பிட்ட தூய்மையான வீட்டில் மண்ணாலோ உலோகத்தாலோ செய்யப்பட்ட தட்டுகளில், ஆட்டுரம் மாட்டுரம் முதலான உரங்களை நிரப்பி, நவதானியங்களைப் பரப்பி நீரூற்றி முளைப்பாரியை வளர்ப்பர்.

குறிப்பு

ஒரேயொரு வயதான பெண் மட்டுமே அந்த வீட்டினுள் செல்ல அனுமதிக்கப்படுவர். அவர் விரதம் இருந்து தூய்மையாக இருப்பார். அவரே முளை ஓடுகளுக்கு நீரூற்றி வருவார். நிகழ்ச்சி தொடங்கி எட்டாவது நாள் கோயிலிலிருந்து ஆற்றுக்குச் செல்லும் பாதையைச் சுத்தப்படுத்துவர். கடுமையான விரதமிருக்கும் 'கரகக்காரர் அல்லது அம்மன் கொண்டாடி' வீட்டிலிருந்து மேளதாளத்துடன் கோயிலுக்கு அழைத்துச் செல்லப்பட்டு அங்கிருந்து பூசாரி மற்றும் ஊர்மக்கள் சூழ ஆற்றுக்கு அழைத்துச் செல்லப்படுவார். அங்கு செம்பில் நீர் பரப்பி மேலே தேங்காய் வைத்து அதன்மேல் கிளிபொம்மை சொருகி கரம் சோடிக்கப்படும். இது 'கரகம் வளர்த்தல்' எனப்படும்.

கரகக்காரர் நீராடி, மஞ்சள் தோய்த்த புதுவேட்டி கட்டி, மேலே சந்தனம் பூசி, விபூதி பட்டைவிட்டு மலர்மாலை அணிந்து, கைகளில் மலர் சுற்றி ஒப்பனை செய்து கொள்வார். ஒரு கையில் வாள் ஏந்துவதும் உண்டு. கொட்டு மேளங்கள் முழங்க அவருக்குச் சாமி வரவழைத்து பூசாரி அவர் தலையில் கரகத்தைத் தூக்கி வைப்பார். அவர் மேளதாளத்துடன் ஊர்வலமாக அழைத்து வரப்படுவார். அப்போது பெண்கள் கரகக்காரரின் காலினை நீர்விட்டுக் கழுவி வணங்குவர். அவர் அவர்களுக்கு விபூதி தருவார். பின்னர் அம்மன் கோயிலுக்குச் சென்று கரகக்காரர் கரகத்தை இறக்கிவைப்பார். இடையில் எங்கும் கரகம் இறக்கி வைக்கக் கூடாது.

பெண்கள் முளைப்பாரி வளர்க்கும் வீட்டிற்குச் சென்று முளைப்பாரிகளை எடுத்து ஊர்வலமாக வந்து அம்மன் கோயிலில் வைப்பர். கரகத்தையும் முளைப்பாரியையும் வைத்து துணியால் திரையிட்டு மறைப்பர். இது 'அம்மன் கொலு' எனப்படுகிறது. கரகக்காரர் மேளதாளத்துடன் வீட்டிற்கு அழைத்துச் சென்று விடப்படுவார்.

மறுநாள் முன்போலவே கரகக்காரர் மேளதாளத்துடன் கோயிலுக்கு அழைத்து வரப்படுவார். அவருக்குச் சாமி வந்தவுடன் கரகத்தை அவர் தலையில் வைப்பர். பெண்கள் முளைப்பாரித் தட்டுகளை எடுத்துச் செல்வர். ஆற்றுக்குச் சென்று முளைப்பாரிகள் ஆற்றில் கரைத்து விடப்படும். கரகச்செம்பில் உள்ள பொருட்கள் நீரில் விடப்படும். இது 'கரகம் கரைத்தல்' என்று சுட்டப்படுகிறது.

சக்திக் கரகத்தில் ஆட்டம் முக்கியத்துவம் பெறுவதில்லை. மக்கள் சக்திக் கரகக்காரரிடம் ஆட்டத்தை எதிர்பார்ப்பதுமில்லை. சக்திக் கரகம் எடுப்பதை ‘கரகம் எடுத்தல்’ என்றுதான் மக்கள் சுட்டுகின்றனரே தவிர ‘சக்திக் கரகாட்டம்’ என்று சுட்டுவதில்லை. அம்மன் அருள் வந்ததாகக் கருதப்படும் சூழல்களிலேயே கரகக்காரர் ஆடுகிறார்.

முளையையும் அது முளைக்கத் தேவையான நீர்நிரம்பிய கரகத்தையும் வளம் நல்கும் தாயாக மக்கள் வழிபட்டு வந்தனர். அதன் தொடர்ச்சியாகவே முளைப்பாரிச் சடங்கு காணப்படுகிறது.

### 8.3.2.1. ஆட்டக் கரகம்

சக்திக் கரகத்திலிருந்து வேறு பிரித்துக் காட்டுவதே ‘ஆட்டக் கரகம்’. இவ்வாட்டக்கரகத்தைக் கரகாட்டம் என்றே மக்களால் பரவலாகக் குறிப்பிடப்படுகின்றனர். தமிழக நாட்டுப்புற நிகழ்த்துக் கலைகளுள் மிக அதிக எண்ணிக்கையிலான ஆட்டக் குழுக்கள் கரகாட்டத்திற்கே உள்ளன. கரகாட்டக்குழுவின் அங்கமாகவே பொய்க்கால் குதிரையாட்டம், காளையாட்டம், மயிலாட்டம், கரடியாட்டம், குறவன் குறத்தியாட்டம், ராசா ராணியாட்டம், செட்டியார் செட்டிச்சியாட்டம் முதலானவை காணப்படுகின்றன.

சித்திரை மாதந் தொடங்கி ஆவணி மாதம் முடிய திருவிழாக்கள் மிகுதியாக நடைபெறுவதால் இதுவே கரகாட்டம் மிகுதியாக நடைபெறும் காலம் எனலாம். இச்சூழல் தவிர தனிமனிதர்களின் குடும்ப வாழ்வியல் சடங்குகள், அரசியல் பிரச்சார மற்றும் வரவேற்பு ஊர்வலங்கள், விளம்பர ஊர்வலங்கள், அரசு விழாக்கள், கல்வி நிறுவனங்கள் மற்றும் காவல் துறையினர் விழாக்கள் போன்ற பல்வேறு சூழல்களில் கரகாட்டம் நிகழ்த்தப்படுகிறது. இறப்புச் சடங்குச் சூழல்களில் கரகாட்டம் நிகழ்த்தப் பெறுவதில்லை.

கரகாட்டம் இத்தனைபேர்தான் நிகழ்த்தவேண்டும் என்ற வரையறை ஏதுமில்லை. ஒரு ஆண் ஒரு பெண்ணோ ஒரு ஆண் இரு பெண்களோ பல ஆண்கள் பல பெண்களோ ஒரே நேரத்தில் கரகாட்டம் நிகழ்த்துவர். நிகழ்ச்சியை ஏற்பாடு செய்பவரின் நோக்கத்தையும் வசதியையும்

பொருத்து ஒரு நிகழ்ச்சியில் ஆடுவோரின் எண்ணிக்கை அமையும். ஆட்டக்காரர் இத்தனை வயதுவரைதான் ஆடவேண்டும் என்ற வரையறை இல்லை. நிகழ்ச்சிகள் பல மணிநேரம் தொடர்ந்து நடைபெறும். ஆதலால் அவ்வளவு நேரம் தொடர்ந்து ஆடும் சக்தியுடையவர்கள் ஆடுவார்கள்.

### 8.3.1.2.1. ஒப்பனை

கரகாட்டத்தில் செய்யப்படும் ஒப்பனைகளை இரண்டாகப் பிரிக்கலாம். முதலாவது கரகத்திற்குச் செய்யப்படும் ஒப்பனை. இரண்டாவது, கரகக் கலைஞர்கள் செய்துகொள்ளும் ஒப்பனை. கரகத்தை அதன் செய்பொருள், அமைப்பு முதலியவற்றை அடிப்படையாகக் கொண்டு தோண்டிக்கரகம், செம்புக்கரகம், அடுக்குக்கரகம் என்று மூன்றாகப் பிரிக்கலாம். இவற்றுள் தோண்டிக்கரகம் மண்ணால் செய்யப்பட்டது. ஏனைய இரண்டும் செம்பு உலோகத்தால் செய்யப்பட்டவை. இவை மூன்றிற்கும் ஒப்பனையில் வேறுபாடுகள் உள்ளன. முட்டை வடிவாக இருக்கும் தோண்டிக்கரகத்தை ஒப்பனை செய்யும்போது அதனுள்ளே தேவையான அளவு அரிசியை நிரப்பி காகிதப் பூச்சரங்களைத் தோண்டி வாயிலிருந்து தொங்க விடுவர். இது ‘செடி’ எனப்படும். கரகத்தின் உச்சியில் தக்கையால் செய்யப்பட்டு வண்ணம் பூசப்பட்ட கிளி சொருகப்பட்டிருக்கும்.

செம்புக்கரகம் இன்று தமிழகம் முழுவதும் பரவலாகப் பயன்படுத்தப்படுகிறது. எவர்சில்வராலான செம்புகளும் அருகிப் பயன்படுத்தப் படுகின்றன. செம்புக் கரகத்தில் தஞ்சாவூர்க் கரகம், மதுரைக் கரகம், திருநெல்வேலிக் கரகம் என்று வேறுபிரிக்கின்றனர். ஆட்டக்காரர் சுற்றும் போது செம்பின்மீது அமைக்கப்பட்டுள்ள கண்ணாடிக் கூடு சுற்றுவதுபோல் தஞ்சாவூர்க் கரகம் அமைக்கப்பட்டிருக்கும். மதுரைச் செம்புக் கரகம் பழைய முறையில் ஈரமண் நிரப்பப்பெற்ற செம்பிற்குள் ஒரு வேப்பிலைக் கொத்தை நுழைத்து செம்பின் கழுத்துப் பகுதியில் வாழையிலையை மடித்துச் சுற்றிக் கட்டுவார்கள். அதன் உச்சியில் காதோலை கருக மணியுடன் இணைந்த தக்கைக் கிளியைச் செருகிப் பின்னர் செம்பின் கழுத்துப் பகுதியிலிருந்து உச்சி வரைக்கும் கூம்புபோல் தோன்றுமாறு அரளிப்பூவைச் சுற்றிக் கட்டுவார்கள்.

குறிப்பு

அரளிப்பூவின் இடையிடையே தென்னங் குருத்துக்களைச் செருகி செம்பின் கழுத்துப் பகுதியில் காப்புக் கட்டுவார்கள். சிலர் கோயில் பரிவட்டமும் கட்டிக் கொள்வார்கள். அடுக்குக் கரகத்தில் சொம்புகள் ஒன்றன் மீது ஒன்றாக அடுக்கிக் கட்டப்பட்டிருக்கும். அடியில் உள்ள கலசத்தில் அரிசி நிரப்பப்படும். ஏனைய கலசங்களில் கம்பியால் அடிக்கலசத்தோடு இணைக்கப்படும். கரகச் சொம்பின் அடிப்பகுதியில் கரகாட்டக்காரரின் தலை பொருத்துவதற்கேற்பப் பள்ளம் செய்யப்பட்டிருக்கும்.

ஆட்டக்கலைஞர்கள் தங்களைத் தாங்களே ஒப்பனை செய்து கொள்கின்றனர். பசை வடிவிலிருக்கும் முகப்பூச்சுக்கள் ஆண், பெண் இருவருக்கும் பொது. பெண்கள் மை தீட்டி, புருவமெழுதி, புருவத்திற்குமேல் வண்ணப் புள்ளிகளிட்டு, பொட்டு வைத்து, உதட்டுச்சாயம் பூசி முக அலங்காரம் செய்து கொள்கின்றனர். சிகையை அலங்கரித்து இரட்டை சடையோ கொண்டையோ போட்டு அதில் கனகாம்பரம், மல்லிகைப் பூச்சரங்களைச் சுற்றிக் கொள்கின்றனர். கொக்கிறகு போன்ற வெண்ணிற இறகுகளைக் கொண்டையின் பின்புறம் அரைவட்டமாகக் கட்டிக்கொள்கின்றனர். ஆண்கள் நெற்றியில் விபூதிப்பட்டையிட்டு நடுவில் சந்தனப்பொட்டு வைப்பதும், சந்தனத்தைப் புருவங்களுக்கிடையே பூசி அதன்மேல் சிகப்புப் பொட்டு வைப்பதும் என முகத்தை அலங்கரித்துக் கொள்கின்றனர். கரகாட்ட உடை இவ்வாறுதான் உள்ளது என்று வரையறுத்துக் கூற இயலாது. எனினும் ஆண்கள் இடுப்பிலிருந்து கணுக்கால் வரை வெள்ளை அல்லது மஞ்சள் நிறத்தில் முழு பனியன் அணிந்து அதன்மேல் தொடையை இறுக்கிப் பிடிக்குமாறு மெல்லிய வண்ணத் துணியாலான அரைக்கால் சட்டை அணிகின்றனர். பெண்கள் பைஜாமா, ஜாக்கெட், வாஸ்கோட் அணிந்து தங்களை ஒப்பனை செய்துகொள்வர். வேறு சிலர் இறுக்கமான உள் கால்சட்டை அல்லது முழுநீள பனியன் அணிந்து அதன்மீது முழங்கால் வரையிலான அரைப்பாவாடை கட்டிக்கொள்வர். அரைப்பட்டியை இடுப்பில் கட்டி மேலே கவர்ச்சியாக ஜாக்கெட் அணிவர்.

## 8.3.2. கரகாட்டம் ஆடும் முறை

தெய்வ உலாவின் போதோ அரசியல் ஊர்வலத்தின் போதோ கரகாட்டம் பொதுவாக நிகழ்த்தப்படுகிறது. உலா ஆங்காங்கே நிறுத்தப்படும். பார்வையாளர்கள் சுற்றிலும் வட்டமாக நிற்க நடுவில் கரகாட்டம் நிகழும். ஊர்வலம் தொடங்கி முடியும்வரை நிகழ்ச்சி தொடரும்.தற்போது மேடை நிகழ்ச்சியாகவும் கரகாட்டம் நிகழ்த்தப்படுகிறது.

முதலில் இசைக்கலைஞர்கள் விநாயகர் துதியை நாதசுரத்தில் இசைக்கின்றனர். அப்போது ஆட்டக்கலைஞர்கள் பெரும்பாலும் வணங்கிய படி நிற்பர். அதன்பிறகு ஆட்டக் கலைஞர்கள் குருவின் காலைத் தொட்டு வணங்குவர். பின்னர் தவில், நாதசுரம், பம்பை முதலான இசைக் கலைஞர்களிடம் சென்று இசைக்கருவிகளைத் தொட்டு வணங்குவர். அடுத்து பார்வையாளர்களை வணங்கி ஆடத் தொடங்குவர். இது ‘சபை வணக்கம்’ எனப்படுகிறது. இதனைத் தொடர்ந்து ‘ஒண்ணாங்காலம்’ எனப்படும் தெம்மாங்குப் பாடல் அல்லது தெற்கத்தி நையாண்டி என்ற மெட்டு நாதசுரத்தில் இசைக்கப்படும். அதற்கேற்பக் கரகாட்டக்காரர்கள் ஆடுவர். கரகாட்டத்தில் இசைக்கப்படும் பாடல்களும் மெட்டுகளும் பொதுவாக அரிகாம்போதி, சக்கரவாகம், கரகரப்பிரியா, சங்கராபரணம், கல்யாணி, தோடி போன்ற மேளகர்த்தா இராகங்களின் சுவரக் கூறுகளைக் கொண்டு அமைந்திருக்கும். எல்லா மெட்டுக்களும் பொதுவாக விளம்பம், மத்திமம், துரிதம் என்ற மூன்று காலங்களில் இசைக்கப்படுகின்றன.

இன்றைய கரகாட்டத்தில் அடவுகள் குறைந்து ஆட்டத்தினிடையே வாழைக்காய் வெட்டுதல், தேங்காய் உடைத்தல், எலுமிச்சம்பழம் கோர்த்தல் போன்ற பல்வேறு விதமான வித்தைகள் செய்தல் பெருகி வருகின்றன.

## முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

1. கரகாட்ட வகைகள் யாவை?
2. சக்திக் கரகம் என்றால் என்ன?
3. ஆட்டக்கரகம் என்றால் என்ன?
4. சபை வணக்கம் என்றால் என்ன?

## 8.4. மயிலாட்டம்



பொம்மை மயில் கூட்டினுள் தன் உருவத்தை மறைத்துக் கொண்டு நையாண்டி மேள இசைக்கேற்ப ஆண் கலைஞர்களால் ஆடப்படும் ஆட்டம் மயிலாட்டம் எனப்படும். இது மயில் நடனம் எனவும் கூறப்படுகிறது. செவ்வியல் கலையான பரத நாட்டியத்தில் பெண்கள் மயிலாட்டம் ஆடுகின்றனர். இவர்கள் பொம்மை மயில் கூட்டினைச் சுமப்பதில்லை. மாறாக பச்சை, நீல வண்ண உடையணிந்து பின்புறம் மயில் தோகையைக் கட்டிக்கொண்டு ஆடுகின்றனர். பொழுது போக்கிற்காகத் தனியொரு கலைஞரால் நிகழ்த்தப்படும் கலை இது. கரகாட்டத்தின் துணைநிலை ஆட்டமாகவே இது காணப்படுகிறது. ஆட்டக்கலைஞர் மயில் கூட்டினுள் மறைந்து கொள்வதால் அவர் வயது, தோற்றம் பற்றி யாரும் கவனிப்பது இல்லை. ஆடக்கூடிய ஆற்றல் வாய்ந்தவராக இருந்தால் போதுமானது.

### 8.4.1. மயில் கூடு

தலை, உடல், இறக்கைகள் முதலிய மயிலின் வெளி உறுப்புகள் தனித்தனியே செய்யப்பட்டு அவற்றின்மீது மயிலைப்போல் வண்ணம் தீட்டுகின்றனர். தலையின் மேற்புறத்தில் கம்பியாலான மயில் கொண்டைகளும் குவிலென்சு கண்ணாடியாலான கண்ணும் அமைக்கப்படும். தகடுகளால் மயிலின் வாய் திறந்து மூடுவதற்கு ஏற்ப அமைக்கப்படும். இதற்காக வாயிலிருந்து கட்டப்படும் சூத்திரக்கயிறு ஆட்டக் கலைஞரிடம் இருக்கும். மயில் கூட்டின் அடிப்புறத்தில் மயிலிறகுகள் பொருத்தப்படும். இந்த மயிலிறகுகளை ஆட்டக்கலைஞர் நிமிர்ந்து ஆடும்போது குவிந்தும், குனிந்து ஆடும்போது விரிந்தும் இருக்குமாறு அமைக்கப்பட்டிருக்கும். மயில் கூட்டின் வாயும் இறக்கைகளும் மயில் தோகையும் அசைந்து உயிருள்ளவை போலக் காட்டுவதற்கேற்ப அமைக்கப்படும்.

### 8.4.2. மயிலாட்டக்காரர்

மயிலாட்டக் கலைஞர் மயிலாக ஒப்பனை செய்து கொள்ளும்போது மயிலின் கூம்பு போன்ற கழுத்துப் பகுதியைத் தன் தலையில் வைத்துக் கட்டிக் கொள்வார். அக்கழுத்துப் பகுதியில்

கட்டித் தொங்கவிடப்பட்டுள்ள நீலத்துணி கலைஞரின் கழுத்தினை மறைத்துக் கொள்ளும். மயிலின் உடல் கூட்டினைத் தோளில் சுமக்குமாறு கட்டிக் கொள்வர். உடல் கூட்டிலிருந்து கூட்டித் தொங்க விடப்பட்ட பச்சை வண்ணத் துணி ஆட்டக்கலைஞரின் கால்களை மறைத்துக் கொள்ளும். சதங்கைகள் கட்டப்பட்ட காலின் அடிப்புறம் மட்டுமே வெளியில் தெரியும். இரண்டு கைகளிலும் மயிலின் இரண்டு இறக்கைகள் கட்டப்படும். மொத்தத்தில் மயிலாட்டக்காரர் அங்குத் தெரியாமல், மயில் போன்ற தோற்றத்தையே தருவார்.

## 8.4.3. மயிலாட்ட முறை

நையாண்டி மேள இசைக்கேற்ப ஆட்டக் கலைஞர் மயிலின் அசைவுகளை ஆடிக் காட்டுவார். மயில் நடத்தல், ஓடுதல், தலையை அசைத்தல், தோகை விரித்தல், அகவுதல் போன்ற செயல்களைக் கலைஞர் எவ்வளவு நுணுக்கமாகச் செய்கிறாரோ அவ்வளவு சிறப்பாக ஆட்டம் அமையும். வாயைத் திறந்து மூடுதல், பாத்திரத்தில் வைக்கப்படும் நீரினை மயில் வாயால் உறிஞ்சிக் குடித்தல் முதலானவற்றைக் கலைஞர் செய்யும்போது பார்வையாளர்களிடையே மகிழ்ச்சி ஆரவாரம் ஏற்படும். மயில் வாயில் செருகப்பட்ட சிறு குழாய் மூலம் கலைஞர் நீரைக் குடிப்பார். தரையில் போடப்படும் பணத்தாளை மயில் கவ்வி எடுப்பதாகவும் நடிக்கப்படும். ஒருவர் முருகன் வேடமிட்டு வர மயில் அவருடைய வாகனமாக நடிப்பதும் உண்டு.

## 8.4.4. மயிலாட்டத்தின் காலம்

மயிலாட்டம் தோன்றி அரை நூற்றாண்டு காலமாகிறது. மயிலாட்டத்தின் வரலாறு குறித்து கு. முருகேசன் கூறும் கருத்து நோக்கத்தக்கது. திருச்சியைச் சேர்ந்த சுந்தரராவ் என்பவரே மயில் நடனத்தை முதலில் கண்டுபிடித்து ஆடிய கலைஞராகக் கருதப்படுகிறார். இவர் 1949இல் ஆட்டின் பீடி விளம்பரத்திற்காகத் திருச்சியிலிருந்து தஞ்சைக்கு வந்து இந்நடனத்தை ஆடியதாகவும், இவரது மயில் நடனத்தைக் கண்ட தஞ்சையில் இருந்த சிங்காரம் என்னும் கோலாட்டக்கார ஆசிரியர் திருச்சி மயில் நடனக் கலைஞரின் மயில் தோகை சுருங்கி விரிய வசதி இல்லாத நிலையை மாற்றி மயில்

குறிப்பு

தோகை இயந்திரத்தை அமைத்து ஆடுபவர் குனிந்தால் தோகை விரிவதற்கேற்பவும், நிமிர்ந்தால் தோகை சுருங்கிக் கொள்வதற்கேற்பவும் மாற்றங்களைச் செய்து இந்நடனம் புகழடைந்து பரவுவதற்கு வகை செய்ததாகவும் கூறுகின்றார்.

## முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

5. மயிலாட்டம் என்றால் என்ன?
6. மயில்கூடு என்றால் என்ன?
7. மயிலாட்ட முறையைக் கூறுக.
8. மயிலாட்டத்தின் தோற்றக் காலம் எது?

## 8.5. ஒயிலாட்டம்

ஒயில் என்ற சொல்லுக்கு ஒய்யாரம், அழகு, அலங்காரம், உல்லாச நிலை, சாயல், ஒருவகைக் கூத்து என்று அகராதிகள் பொருள் கூறுகின்றன. ஒய்யாரம் என்பதற்குப் பெரும்பாலும் பெண்களின் தோற்றத்தை, அசைவைக் குறிப்பிடும்போது கவர்ச்சியுடன் கூடிய நளினம் என்று பொருள்படும். நடைஉடை முதலியவற்றால் கவர்ச்சி நிறைந்த பெண் ‘ஒய்யாரி’ எனப்படுகிறாள். இவ்வாறு ஒயில், ஒய்யாரம், ஒய்யாரி முதலான சொற்கள் பெரும்பாலும் பெண்களோடு தொடர்புடையதாக இருக்க, ஒயிலாட்டமோ ஆண்களுக்கு மட்டுமே உரிய ஆட்டமாகத் திகழ்கிறது. ஒய்யாரம் என்பதற்குக் கம்பீரம், எடுப்பு என்ற பொருளையும் தற்காலத் தமிழ் அகராதி தருகிறது. ஒயிலாட்டம் ஆண்கள் ஆடும் ஆட்டமாக இருப்பதால் ‘கம்பீரமும் எடுப்பும் மிக்க ஆட்டம்’ என்று ஒயிலாட்டத்திற்குப் பொருள் கூறலாம்.

ஒயிலாட்டம் ஆடுவோர் எண்ணிக்கை இடத்துக்கு இடம் அல்லது ஆடப்படும் சூழல்களுக்கேற்ப மாறுபடுகிறது. இருபது முதல் முப்பது பேர் வரை ஆட்டத்தில் கலந்துகொள்வர். ஒயிலாட்டக்காரர்களுக்கு வயது வரையறை ஏதுமில்லை. வெவ்வேறு வயதினர் ஒரு குழுவில் இடம்பெறுவது உண்டு. ஆடும் திறனும் தெம்பும் உடையவர்களாக இருப்பதான் முக்கியம். வழிபாட்டுச் சடங்குகளுக்கல்லாது அரசு நிகழ்ச்சிகள் போன்றவற்றுக்குச் செல்லும்போது அழகு கருதி ஒத்த வயதினர் ஆடுகின்றனர்.

## 8.5.1. ஒயிலாட்டக்காரர் அலங்காரம்

குறிப்பு

ஆட்டக்காரர்கள் வேட்டியைக் கீழ்ப்பாய்ச்சிக் கட்டி மேலே வெள்ளைச் சட்டை அணிந்து இரண்டு அல்லது மூன்று வண்ணங்களால் அமைந்த துணியால் தலைப்பாகை கட்டி வலக்கையில் வண்ணக் கைக்குட்டையைப் பிடித்திருப்பர். அல்லது வெள்ளை அரைக்கால் சட்டை, வெள்ளை பனியன், வெள்ளை தலைப்பாகை அணிந்து வலக்கையில் வண்ணக் கைக்குட்டை பிடித்திருப்பர். இவ்வாறு சீருடை அணிய வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. சில குழுவினர் விருப்பம்போல் வெவ்வேறு வண்ண ஆடைகளை அணிவர். இரு கைகளிலும் விருப்பம்போல் வண்ணக் கைக்குட்டைகளைப் பிடித்திருப்பர். கோயில் சடங்குகளின்போது ஆடும் ஆட்டக்காரர்கள் சட்டையணியாமல் விபூதி, சந்தனம் பூசி மாலை அணிவதும் உண்டு. இராமாயணம் போன்ற குறிப்பிட்ட கதைப்பாடல்களைப் பாடி ஆடுவோர் அக்கதையின் முக்கிய பாத்திரங்களாக ஆட்டக்காரர்களுள் சிலர் வேடம் புனைதலும் உண்டு. பெண்வேடம் புனைபவர் புடவை கட்டியிருப்பார். அனைத்து ஆட்டக்காரர்களும் கச்சம் அல்லது மணிச்சதங்கை அணிவது கட்டாயமாகும். சிறுசிறு மணிகள் ஒன்றோடொன்று மோதாதவாறு கயிறு கொண்டு கட்டப்பட்டிருக்கும் சதங்கை ‘கச்சம்’ எனப்படுகிறது.

## 8.5.2. ஒயிலாட்ட அமைப்பு

ஒப்பனைகளுடன் ஆட்டக்காரர்கள் ஒரு வரிசையாகவோ இரு வரிசையாகவோ நிற்பர். அண்ணாவி அல்லது வாத்தியார் அல்லது தலைமை ஆட்டக்காரர் அல்லது வஸ்தாவி வரிசைக்கு முன்னால் நின்று ஆட அவருடைய வழிகாட்டுதலுடன் ஏனையோர் ஆடுவர். ஒன்றுக்கு மேற்பட்டோரும் முன்னால் நின்று ஆடுவதுண்டு.

ஒயிலாட்டத்தில் பாடல் முக்கியத்துவம் பெறுகிறது. அண்ணாவி அல்லது தலைமை ஆட்டக்காரர் முன்பாட்டுப் பாட ஏனைய ஆட்டக்காரர்கள் குழுவாகப் பின்பாட்டுப் பாடுவர். ஆட்டமாடத் தொடங்கும் முன்னர்ப் பாடும்போதும் ஆட்டங்களுக்கிடையே கதை

விளக்கத்துக்காகப் பாடும் போதும் பாடுவோரின் குரல்களில் அலுக்கல்களும் குலுக்கல்களும் மிகுந்திருக்கும். ஆட்டத்தோடு இணைந்து பாடும்போது காலின் மிதிகளுக்கு ஏற்றவாறு பாடலின் அடிகள் நறுக்குத் தெறித்தாற்போல விழும். இப்பாடல்கள் மந்த கதியில் தொடங்கி, துரித கதியைத் தொட்டு, அதிதுரித கதியில் முடியும். உரையாடல், பாடல், ஆட்டம் என்று பகுதி பகுதியாக ஒயிலாட்ட நிகழ்ச்சி நடைபெறும். இவை மூன்றிற்கும் ஏதோ ஒரு வரிசை அமைப்பு இருக்க வேண்டும் என்பதில்லை. இவற்றில் முறைமாறியும் அமையலாம்.

## 8.5.3. ஒயிலாட்ட ஆட்ட அசைவுகள்

ஒயிலாட்டத்தின் ஆட்ட அசைவுகள்,

*“வலக்கால் முன்வைத்து வலக்கை நெஞ்சுக்கு*
*நேர் நீட்டிப் பிடித்துள்ள துணியை அசைத்தல்*
*பக்க வாட்டில் வலக்கால் நகர்தல்,*
*இடக்கை இடப்புறத்தே இடுப்புக்கு மேல் அசைதல்*
*வலப்புறச் சுற்று இயல்பு நிலைக்கு வரல்”*

என்று இவ்வாட்டத்தின் ஆட்ட அசைவுகளை கே.ஏ. குணசேகரன் குறிப்பிடுகிறார். மேலும், ஒயிலாட்ட இயக்கங்களின் தன்மைக்கு ஏற்றவாறு உடலை இடுப்புக்கு மேலுள்ள மேற்பகுதி, இடுப்பு மற்றும் இடுப்புக்குக் கீழுள்ள கீழ்ப்பகுதி என்று இரண்டாகப் பிரித்துக்கொண்டு அவை எவ்வாறு இயங்குகின்றன என்பதைத் தனித்தனியாக நுணுக்கமாக ஆராய்ந்துள்ளார் சுதானந்தா. அதாவது, ஒயிலாட்டத்தில் மேலுடம்பும் கைகளும் தலையும் கம்பீரத்துக்காகவும் அழகுக்காகவும் இயங்குகின்றன என்றும், கீழ்ப்பகுதி ஆண்மைப் பண்புள்ளதாகவும் வலிமை உடையதாகவும் இயங்குகின்றன என்றும் கூறுகின்றார். மேலும் ஒயிலாட்டத்தின் மைய இயக்கம் காலின் இயக்கமாக அமைவதால் பெரும்பாலும் அதன் அடிப்படையிலேயே இயக்கத் தொகுதிகள் பெயர் பெறுகின்றன என்றும், காலின் இயக்கங்களால் பெயர் பெற்றாலும் அப்பெயர்கள் அவற்றோடு இணையும் அனைத்து இயக்கங்களையும் உள்ளடக்கியவையே என்றும் அவை ஒயிலாட்டத்தின் பொருண்மையுள்ள சிறிய கூறுகள் என்றும் சுட்டுகின்றார். நிலை, குத்து (முன்குத்து, பின்குத்து), ஏற்ற இறக்கம், அடி அடித்தல், அடி, மிதி, இழுவை,

செண்டிப்பு, எட்டுப்போடுதல், மடக்கு, குதித்தல், புரளல், கிறுக்கி, திரும்புதல், பானா ஆட்டம், குத்தாட்டம், சறுக்கு, பின்னிறக்கம், மூன்றடி போட்டுப் பக்கமாக ஏறிவரல், சுற்று, உட்காருதல், கொட்டு, நிறுத்துதல், கைகளின் பாவனைகள் என அக்கூறுகள் இருபத்து நான்காக அமையும்.

## முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

9. ஒயிலாட்டம் என்றால் என்ன?
10. கச்சம் என்றால் என்ன?
11. ஒயிலாடத்தில் பாடலைப் பாடுபவர் யார்?
12. ஒயிலாட்ட ஆட்ட அசைவுகள் எத்தனை?

## 8.6. பொய்க்கால் குதிரை

சுமார் ஒன்றரை அடி உயர மரக்கட்டையைக் காலில் கட்டி அதன் மீது நின்ற வண்ணம், துணிகள்-காகிதங்களால் உருவாக்கப்பட்ட பொய்க் குதிரையின் நடுவில் நுழைந்து அதனைத் தோளில் தொங்குமாறு கட்டிக் கொண்டு, நையாண்டி மேள இசைக்கேற்ப, ஒரு ஆணும் ஒரு பெண்ணும் இராசா-இராணி வேடத்தில் ஆடும் ஆட்டம் பொய்க்கால் குதிரையாட்டம் ஆகும். ஆட்டக்காரர்களுக்கு வயது வரம்பு இல்லை. தொடர்ந்து ஆடுவதற்கான ஆற்றலே முக்கியமாகும். மரத்தாலான பொய்க்காலில் நின்றுகொண்டு ஆடுவதாலும் பொய்க்குதிரையை உடம்பில் சுமந்துகொண்டு ஆடுவதாலும் இது பொய்க்கால் குதிரையாட்டம் எனப்படுகிறது. புரவி ஆட்டம், புரவி நாட்டியம் என்ற பெயராலும் இக்கலை அழைக்கப்படுகிறது.

நேர்த்திக் கடனுக்காகக் கோயில் திருவிழாக்களில் பொய்க்கால் குதிரையாட்டம் நிகழ்த்தப்படுவதுண்டு. ஆயினும் அத்தகைய கோயில் சடங்கிலிருந்து பொய்க்கால் குதிரையாட்டம் வளர்ச்சி பெற்றதாக அறிய இயலவில்லை. பொழுது போக்கினை அடிப்படையாகக் கொண்டு தோன்றி வளர்ந்த கலையாகவே அறியமுடிகிறது. கோயில் திருவிழாக்களில் முதன்மையாக நிகழ்த்தப்படும் இக்கலைநிகழ்ச்சி திருமணங்கள், பீடி, சோப்பு முதலான விளம்பர நிகழ்ச்சிகள், அரசு விழாக்கள், அரசியல் விழாக்கள் முதலானவற்றில் பொழுதுபோக்கினை நோக்கமாகக் கொண்டு நிகழ்த்தப்படுகிறது. இசுலாமியர்

திருமணங்களிலும் சந்தனக்கூடு விழாக்களிலும் கிறித்தவ தேவாலயங்களிலும் இந்நிகழ்ச்சி ஏற்பாடு செய்யப்படுகிறது.

குறிப்பு

### 8.6.1. குதிரைக்கூடு

களிமண், ஆற்றுமணல் இரண்டையும் கலந்து பிசைந்து ஒருநாள் ஊறவைத்து அம்மண்ணால் குதிரை செய்து இருநாட்கள் உலர்த்த வேண்டும். நாளிதழ்களைச் சிறுசிறு துண்டுகளாக வெட்டி நீரில் நனைத்துக் களிமண் குதிரையில் இடைவெளியின்றி ஒட்டவேண்டும். வஜ்ரம், மயில்துத்தம், மரவள்ளிக்கிழங்கு மாவு மூன்றையும் நீரில் கலந்து நெருப்பில் பதமாகக் காய்ச்சி பசை தயாரித்து ஆற வைக்கவேண்டும். அந்தப் பசை தடவிய நாளிதழ்களைக் குதிரை உருவத்தில் ஒட்டவேண்டும். இவ்வாறு ஒன்றன்மீது ஒன்றாக நான்குமுறை நாளிதழ்களை ஒட்டி வெயிலில் உலர்த்த வேண்டும். மொத்தமான காடாத் துணியைத் துண்டுகளாக நறுக்கி பசை தடவி அதன்மீது ஒட்ட வேண்டும். அதனை வெளியிலில் உலர்த்தவேண்டும். அதன்மீது மீண்டும் நான்கு நாளிதழ்களை ஒன்றன்மீது ஒன்று ஒட்டி உலர்த்தி அதன் மீது காடா துணியை ஒட்டி இரண்டு நாள்கள் உலர்த்த வேண்டும். பிறகு குதிரையின் மண்டைப் பகுதியின் மையத்திலிருந்து பிளேடால் அறுத்து எடுக்கவேண்டும். இப்போது காகிதம் மற்றும் துணியால் ஆன குதிரைக்கூடு இரு பகுதிகளாகக் கிடைக்கும். அந்த இரண்டு பகுதிகளையும் மொத்த ஊசியால் மொத்த நூல் கொண்டு தைக்க வேண்டும். குதிரையில் ஆள் அமர்ந்துசெல்லும் பகுதியில் ஆள் நுழையும் அளவு நீள் சதுரத்தில் துவாரம் அமைக்க வேண்டும்.

பிறகு குதிரை வாயின் மேற்புறமும் கீழ்ப்புறமும் தனித்தனியாக மேற்கூறப்பட்ட முறையில் உருவாக்க வேண்டும். அட்டையில் செய்து பசையில் மரத்தூளைக் கலந்து ஒரு நாளிதழ் ஒட்டி, அதன்மீது துணி ஒட்டி முன்பு உருவாக்கப்பட்ட குதிரையின் தலைப்பகுதிகளில் வைத்துத் தைக்க வேண்டும்.

இப்பணிகள் முடிந்தபின் பசையில் மரத்தூள் கலந்து குதிரையின் பொக்கையான பகுதிகளில் பூசப்படும். அதன்மேல் துணி ஒட்டப்படும்.

குறிப்பு

தையல் போட்ட இடத்தின்மேல் காகிதம் ஒட்டி, அதன்மேல் துணியை ஒட்டி, சாக்பவுடர் வஜ்ரம் கலந்து பூசினால் சிமெண்ட் பூசியதுபோல் இருக்கும். கண்ணுக்குக் கண்ணாடிக் குண்டுகள் வைத்து ஒட்டப்படும். உடல் கட்டில் கண்ணாடிகள் மற்றும் தங்க நிறத்தாள் வைத்து ஒட்டி அழகு படுத்தப்படும். தலைப்பகுதி, உடற்பகுதி இரண்டும் மறை ஆணிகளால் இணைக்கப்படும். குதிரைக்கு வெள்ளை மற்றும் நீல வண்ணம் பூசப்படும். காது தனியாகச் செய்து வைக்கப்படும். கத்தாழை நாரால் வால் செய்யப்படும். குதிரைக் கூட்டின் கீழ்ப்புறம் மினுமினுப்பான செப்பு வண்ணத்துணி கட்டப்படும். ஆட்டக்கலைஞர் காலில் கட்டை கட்டி நின்றால் கால் மற்றும் கட்டைகளை மறைக்கும் உயரத்திற்குத் துணி கட்டப்படும்.

ஒன்றரை அடி உயரத்தில் ஆலம் விழுதால் கால்கட்டை செய்யப்படும். அதன்மீது பாதம் வைக்க வசதியாக மாம்பலகை பொருத்தப்படும். வழுவழுப்பான மேடையில் ஆடும்போது கால் கட்டையின் அடிப்புறம் கார் டயர் பொருத்தப்படும். தரையில் ஆடும்போது டயர் கழற்றப்படும்.

குதிரைக்கூடு சுமார் 30 கிலோ எடை கொண்டதாக இருக்கும். இதனைத் தோளில் சுமப்பதற்கு வசதியாக மொத்தமான துணி நாடா குதிரைக் கூட்டின் மேற்பகுதியில் ஆள் நுழையும் துவாரத்தையொட்டிப் பொருத்தப்படும்.

## 8.6.2. பொய்க்கால் குதிரையாட்டக்காரர் ஒப்பனை

குதிரைக் கூட்டின் நடுப்பகுதியில் தலையை நுழைத்து மேலே வந்து அங்குக் கட்டப்பட்டுள்ள வலப்பக்கத் துணிநாடாவை இடப்பக்கத் தோளிலும் இடப்பக்க நாடாவை வலப்பக்கத் தோளிலும் மாட்டிக்கொள்வர். பிறகு கால் கட்டைகளைக் கால்களில் துணி நாடாவால் இறுக்கமாகக் கட்டிக்கொள்வர். இவ்வாறு குதிரைக் கூட்டைச் சுமந்து கட்டைமீது நிற்பது கடினமானதாகும். ஆட்டக் கலைஞர் ஆடும் நேரம் தவிர ஏனைய நேரங்களில் யாரையாவது அல்லது எதையாவது பிடித்துக்கொண்டுதான் நிற்பர். இந்த ஒப்பனையுடன் ஆட்டக்

கலைஞரைப் பார்த்தால் ஒருவர் குதிரையில் அமர்ந்திருப்பதைப் போன்று இருக்கும். ஆட்டக் கலைஞர்கள் காலில் சலங்கை அணிவர். இராசா-இராணி உடை அணிவர். இராசா கிரீடம் அணிவார். பெண்கள் கொண்டை போட்டுக் கொள்வர். உடலில் கவுன், வாஸ்கோட் அணிவர். கையில் பட்டி கட்டி கழுத்தில் கல் நகைகள் அணிவர்.

## 8.6.3. பொய்க்கால் குதிரையாட்டம் ஆடும் முறை

பொய்க்கால் குதிரையாட்டத்திற்குப் பாடல் எதுவும் பாடப்படுவது இல்லை. முதலில் கொந்தளம் என்னும் தோற்கருவி இசைக்கேற்ப பொய்க்கால் குதிரையாட்டம் நிகழ்த்தப்படும். இந்த இசைக்கருவி மராட்டியர் வாழ்க்கையோடு தொடர்புடையது. தற்போது கொந்தளத்திற்குப் பதில் நையாண்டி மேளமே பொய்க்கால் குதிரையாட்டத்திற்குப் பயன்படுத்தப்படுகிறது. பெரும்பாலும் பொய்க்கால் குதிரையாட்டம் தனியாட்டமாக ஏற்பாடு செய்வதில்லை. கரகம், காவடி, மயிலாட்டம் போன்றவற்றுடன் ஏற்பாடு செய்யப்படுகிறது.

ஆட்டத்தின் தொடக்கத்தில் விநாயகர் துதி நாதசுரத்தில் வாசிக்கப்படும். பிறகு நையாண்டி, தெம்மாங்கு முதலானவை வாசிக்கப்படும். அதற்கேற்ப ஆட்டம் நிகழும். இராசா, இராணி வேடமிட்ட ஆட்டக் கலைஞர்கள் முதலில் தனித்தனியே மூன்று மூன்று முறை வட்டமாகச் சுற்றிவந்து ஆடுவர். பின்னர் குதிரை ஆடுவது, இராசா அதனை அடக்குவது, குதிரை காலை உயர்த்துவது, இராசா இராணி கைக்கோர்த்து ஆடுவது, இராசா இராணி எதிரெதிர் நின்று ஆடுவது, குதிரையின் முகங்களை ஒன்றாக்கி ஆடுவது, நான்கு மூலைகளிலும் ஓடி ஆடுவது, உட்கார்ந்து ஆடுவது என்று ஆட்டம் தொடர்ந்து நிகழ்த்தப்படும். இராசாவின் ஆட்டத்திற்கு ஏற்ப இராணி இணைந்து ஆடுவார்.

## முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

13. பொய்க்கால் குதிரையாட்டம் என்றால் என்ன?

14. குதிரைக்கூடு என்றால் என்ன?
15. பொய்க்கால் குதிரையாட்டம் யார்யாரால் ஆடப்படுகிறது?
16. கொந்தளம் என்றால் என்ன?

## 8.7. தொகுத்துக் காண்போம்

- கரகாட்டம் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- கரகாட்டத்தின் வகைகள் பற்றியும் அவை ஆடக்கூடிய முறைகள் பற்றியும் கரகம் தயாரிக்கும் முறைகள் பற்றியும் தெரிந்து கொண்டீர்கள்.
- மயிலாட்டம் பற்றியும் மயில்கூடு தயாரிக்கும் முறை பற்றியும் மயிலாட்ட முறைகள் பற்றியும் தெரிந்து கொண்டீர்கள்.
- ஒயிலாட்டம் பற்றியும் ஆட்ட அசைவுகள் பற்றியும் ஒயிலாட்ட முறைகள் பற்றியும் தெரிந்து கொண்டீர்கள்.
- பொய்க்கால் குதிரையாட்டம் பற்றியும் குதிரைக்கூடு தயாரிக்கும் முறை பற்றியும் பொய்க்கால் ஆடுபவர்கள் பற்றியும் தெரிந்து கொண்டீர்கள்.
- 

## 8.8. முன்னேற்றத்தைச் சோதிக்கும் வினாக்களுக்கான விடைகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | 8.3.1. | 2. | 8.3.1.1. |
| 3. | 8.3.1.2. | 4. | 8.3.2. |
| 5. | 8.4. | 6. | 8.4.1. |
| 7. | 8.4.3. | 8. | 8.4.4. |
| 9. | 8.5. | 10. | 8.5.1. |
| 11. | 8.5.2. | 12. | 8.5.3. |
| 13. | 8.6. | 14. | 8.6.1. |
| 15. | 8.6.2. | 16. | 8.6.3. |

குறிப்பு

## 8.9. பாடம் பயின்றபின் செய்யும் பயிற்சிகள்

1. கரகாட்ட வகைகள் பற்றிக் கட்டுரை வரைக.
2. கரக வகைகள் பற்றியும் அவற்றைத் தயாரிக்கும் முறைகள் பற்றியும் கட்டுரை வரைக.
3. மயிலாட்டம் பற்றிக் கட்டுரை வரைக.
4. மயில்கூடு பற்றியும் மயிலாட்ட முறைகள் பற்றியும் விவரிக்க.
5. ஒயிலாட்ட அமைப்பு நிலையை எடுத்துக்காட்டுடன் விளக்குக.
6. பொய்க்கால் குதிரையாட்டம் பற்றிக் கட்டுரை வரைக.
7. குதிரைக்கூடு தயாரிக்கும் விதங்களைக் கூறுக.

## 8.10. மேலும் பயில்வதற்கான நூல்கள்

1. ஆறு. இராமநாதன், நாட்டுப்புறக் கலைகள், மெய்யப்பன் தமிழாய்வகம், சிதம்பரம், 2001.

# பிரிவு 4

## நாட்டுப்புறவியல்-சமூகவியல்-மொழியியல

## கூறு 9. பொம்மலாட்டம் - தோற்பாவை

குறிப்பு

### 9.1. முன்னுரை

உயிரற்ற பொம்மை(பாவை)களை உயிருள்ள பாத்திரங்கள் போல இயக்கி மனிதரால் நிகழ்த்தப்படுவது பாவைக்கூத்து. இது தோற்பாவைக் கூத்து, மரப்பாவைக் கூத்து என்று இரு வகைப்படும். பாவைகளை உருவாக்குவதற்குப் பயன்படுத்தப்படும் மூலப்பொருட்களை அடிப்படையாகக் கொண்டே பெயர் வேறுபாடுகள் அமைகின்றன. தோற்பாவைக் கூத்தைப் பொம்மலாட்டம் என்றும், மரப்பாவைக் கூத்தைத் தோற்பாவை என்றும் அழைக்கப்படுகிறது. பொம்மலாட்டம் மற்றும் தோற்பாவை பற்றி இங்குப் பாடமாக அமைந்துள்ளது.

### 9.2 குறிக்கோள்கள்

- பாவைக் கூத்து பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- பொம்மலாட்டம் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- தோற்பாவை பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.

### ➢ பொம்மலாட்டம்

தமிழகத்தின் வடமாவட்டங்களில் மரப்பாவைக் கூத்தினைப் பொம்மலாட்டம் அல்லது கட்டபொம்ம கூத்து அல்லது கட்டபொம்ம நாடகம் என்று சுட்டுகின்றனர். கும்பகோணம், மயிலாடுதுறை, சேலம் மாவட்டப் பகுதிகளில் மரப்பாவை என்று சுட்டப்படுகிறது.

பொம்மலாட்டம் ஒரு பொழுதுபோக்குக் காட்சிக்கலை ஆகும். இதன் மூலம் நல்ல கருத்துக்களை அறிவிக்கலாம். சிறிது காலமாக நல்ல கருத்துக்களைத் தெரிவிக்கும் வகையில் பொம்மலாட்டம் வளர்ச்சியடைந்து உள்ளது. இன்றைய கால கட்டத்தில் இது ஒரு பொழுதுபோக்குக் காட்சியாக இல்லாமல் கல்வியறிவு புகட்டுபவர்களும்,

மாணவர்களும் நல்ல செய்திகளைப் பரப்புவதற்குப் பயன்படுத்துகின்றனர். பொம்மலாட்டம் ஒருவருடைய கற்பனை மற்றும் அவர்களுடைய படைப்புத் திறனை வெளிக்கொணர்கிறது. மற்ற எல்லா கலைகளைவிடவும் பொம்மலாட்டம் குறைந்த நேரம் கதை நிகழ்ச்சியமைப்பு வண்ணம் மற்றும் இயக்கம் கொண்டவை. மேலும் அதிக செலவில்லாத ஒரு கலை வடிவமாகும்.



பழங்காலத்தில் பேரரசர்கள், அரசர்கள் மற்றும் பெரும் வீரர்கள் ஆகியோர் அரசியல் கேடு மற்றும் கோளாறுகளின் சீர்த்திருத்த நோக்கங்கொண்ட நையாண்டித் தாக்குதல் போன்றவற்றைப் பொம்மலாட்டத்தின் மூலம் தெரியப்படுத்தினர்.

தென்னிந்தியாவில்தான் சமயம் சார்புள்ள பொம்மலாட்டம் வளர்ச்சியடைந்து இராமாயணம், மஹாபாரதம் போன்ற கதைகளை நிழல்பொம்மலாட்டத்தின் மூலம் காட்டப்பட்டன. தற்காலத்தில், நவீன வளர்ச்சியின் காரணமாக பெரும்பாலான பாரம்பரிய பொம்மலாட்ட அரங்கங்கள் தன்னிலை இழந்துவிட்டன. ஆயினும், இக்கலை மாணவர்கள், ஆசிரியர்கள் மற்றும் செய்தித் தொடர்பாளர்களிடமும் பொம்மலாட்டம் பிரசித்தி பெற்றுள்ளன.

காற்று, நிலம், நீர் ஆகியவற்றைப் பாதுகாப்பதின் முக்கியத்துவம் பற்றியும், அறிவியல் வளர்ச்சி மற்றும் கலை பற்றியும் சுற்றுச்சூழல் பாதுகாப்பு பற்றிய விழிப்புணர்ச்சி பற்றியும் பொம்மலாட்டத்தின் மூலம் உண்டாக்கலாம்.

இம்முறை ஒருவருடைய படைப்பாற்றல், கதை எழுதுதல், கைப்பாவை செய்தல், வசனம், இசை ஆகியவற்றிற்கு வழி செய்கிறது.

இவ்வகை ஆட்டம் பார்ப்பதற்கு மகிழ்ச்சியளிப்பதைவிட செய்யும் பொழுது சிறந்த அனுபவத்தைப் பெறுகிறது. பொம்மலாட்டத்தின் மூலம் பல கலைகளை ஒருங்கிணைக்கலாம். குறிப்பாக, வரைதல், வண்ணம் பூசுதல், நறுக்குதல், மரவேலை, மரச்செதுக்குவேலை, மேடை அமைத்தல், உருப்படிவம் அமைத்தல், களிமண் சாந்தால் உருவம் செய்தல், நடிப்பு உடை தயார்செய்தல், களிமண் உருவம் செய்தல் மற்றும் மேடைக்கலை ஆகிய கலைகளைக் ஒருங்கிணைக்கலாம்.

## 9.3.1. பொம்மலாட்டத்தின் காலம்

பொம்மலாட்ட வரலாற்று ஆசிரியர் கூற்றுப்படி சுமார் 2000 ஆண்டுகளுக்கு முன்பிலிருந்தே பொம்மலாட்டக்கலை இருந்ததாகவும், அதன் மூலம் பேரரசர்கள் மற்றும் வீரர்களின் கதை சொல்லப்பட்டதாகவும் கூறுகின்றனர். சமய நோக்கிலான பொம்மலாட்டம் தென்னிந்தியாவில்தான் வளர்ச்சி அடைந்தது. இவற்றில் மஹாபாரதம் மற்றும் இராமாயணக் கதைகளை நிழல் பொம்மலாட்டம் மூலம் காட்டப்பட்டன. தற்சமயம் தொன்றுதொட்டு இத்தகைய பொம்மலாட்டம் நடத்தும் குடும்பங்கள் ஆந்திரம், கர்நாடகம், கேரளம், ஒரிசா மற்றும் தமிழ்நாட்டிலும் இருந்து வருகின்றனர்.

## 9.3.2. பொம்மலாட்டத்தின் பாடுபொருள்

பெரும்பாலான பொம்மலாட்டக்காரர்கள் தாங்கள் தொன்று தொட்டு நடத்தி வந்த பழங்கதைகளை விட்டுத் தற்போதைய நிலைக்கேற்ப, வரதட்சணைக் கொடுமை, பால்ய திருமணம், பெண் சிசுவதை, குடும்பக் கட்டுப்பாடு ஆகிய கருத்துக்கள் பொம்மலாட்டத்தில் இடம்பெற்றிருப்பதால் பார்ப்பவர்களின் விருப்பத்திற்கேற்பப் புத்துயிர் பெற்று வருகின்றது எனலாம்.

## 9.3.3. பொம்மலாட்டத்தின் பொம்மை வகைகள்

பொம்மலாட்ட பொம்மையின் உருவத்தை அதைச் செய்யும் கலைஞனின் கற்பனை வளத்திலும், கலைத்திறனிலும் அமைக்கப்படும். சில பொம்மைகள் சிறியதாகவும் சில பொம்மைகள் பெரியதாகவும் சில பொம்மைகள் உயிருள்ளது போலவும் இருக்கும். இந்த பொம்மைகளைப் பகட்டாகவோ அலங்காரம் இல்லாமலோ செய்வர். இப்பொம்மைகள் நிழல் பொம்மை, தோல் பொம்மை, கையுறை பொம்மை என்று மூன்று வகைப்படும்.

## 9.3.4. பொம்மலாட்ட பொம்மை செய்முறை

எடை குறைவான கல்யாண முருங்கை மரத்தைத் தண்ணீரில் ஊறவைத்து, உலர்த்தி கால், கை, தலை, மார்பு முதலிய உறுப்புகளைச் செய்வதற்கு ஏற்றவாறு மரத்தினைத் துண்டாக்கி

ஆசாரியை வைத்து செதுக்குவர். தலைக்காக செதுக்கப்பட்ட மரத்தில் மக்கு வைத்து மூக்கு, கன்னம், உதடு முதலான பகுதிகளை உருவாக்கி உலர்த்தி, ஆண் பெண் பாத்திரங்களுக்கு ஏற்ப டோப்பா வைத்துத் தைப்பர். கைகளுக்கு வண்ணம் அடித்து துணி தைத்து ஒப்பனை செய்யவர். மார்புகளுக்கும் துணிகளைச் சுற்றி ஒப்பனை செய்யவர். பிறகு அனைத்து உறுப்புகளையும் கறுப்பு வண்ண நூலால் இணைப்பர். ஐம்பது ஆண்டுகளுக்கு முன் அனைத்து பொம்மைகளுக்கும் லேசான மஞ்சள் வண்ணம் பூசி சிகினா பாவாடை அணியப்பட்டது. தற்போது பொன் சிவப்பு, ரோஸ் அணியப்படுகிறது.

பாத்திரங்களுக்கு ஏற்ப அணிகலன்கள் அணிவிக்கப்படும். சமூகக் கதைகளுக்கு பேண்ட் சர்ட் அணிவிக்கப்படுகின்றன. சந்திரமதி அழுவதுபோல் அடிக்கடி வருவதால் பொம்மையே அழுவது போல் தயாரிக்கப்படுகிறது. ஒவ்வோர் பாத்திரத்திற்கும் தனித்தனி பொம்மைகள் செய்யப்படும். சில நேரங்களில் ஒரே பொம்மையை உடை மாற்றி வெவ்வேறு பாத்திரங்களாக உலவவிடுவதும் உண்டு. முன்பு அனைத்து பொம்மைகளுக்கும் கால்கள் இருந்தன. தற்போது நிகழ்ச்சிகள் வெளியூர்களில் நடைபெறுவதால், போக்குவரத்து இடர்பாட்டின் காரணமாக பல பொம்மைகளின் கால்களை எடுத்துவிட்டுள்ளனர்.

## 9.3.4.1. நிழல்பொம்மை

பாவை செய்பவர்கள் கம்பி, மரம், காகிதம், துணி, தோல் மற்றும் மரக்கிளைகள் போன்ற இயற்கைப் பொருட்களைப் பயன்படுத்துவர். மூலப்பொருட்களைப் பொருத்து நல்ல பொம்மைகளை உருவாக்குவர். மனித பாத்திரத்தோடு அல்லாமல், பானை, தட்டு மற்றும் தட்டுமுட்டுப் பொருள்கள், வீடு மற்றும் மரம், புஷ்பம், மீன், விலங்கு மற்றும் தெய்வத் தன்மையுள்ள பொருள்கள், கற்பனைச் சக்தியால் சிங்க உடல், கழுகின்தலை, சிறகு கொண்ட விலங்கும், முதலை, பாம்பு, பறவை ஆகியவற்றின் தோற்றம் கொண்ட விலங்கு, வேதாளம் போன்ற பொம்மைகளைச் செய்வர்.

## 9.3.4.2. தோல்பொம்மை

நிழல் பொம்மைகள் தோலினால் செய்யப்பட்டு மென்மையான துளைகள் இட்டு வண்ணம் பூசப்பட்டிருக்கும். பொதுவாக ஆட்டின்தோல் உபயோகப்படுத்தப்படுகிறது. இப்பொம்மைகள் அளவில் பெரியதாகக் காணப்படும். அதாவது, 250 செ.மீ. அளவிலிருந்து ஒரு மீட்டர் அளவு உயரமுடையதாக இருக்கும்.

## 9.3.4.3. கையுறை பொம்மை

மேலே சொல்லப்பெற்ற முறைகளில் செய்யப்பெற்ற சிறிய அளவிலான பொம்மைகளின் கூடுகளில் கைவிரல்களை நுழைத்து, கட்டைவிரல் மற்றும் நடு விரல்களைப் பொம்மையின் இரு கைகளில் பொருந்துமாறு வைப்பது கையுறை பொம்மை ஆகும்.

## 9.3.5. பொம்மலாட்ட மேடை

பன்னிரண்டு அடி அல்லது பதினாறு அடி நீள அகலமுள்ள மேடையில் எட்டு அடி உயரத்தில் கூரை வேயப்படும். மேடையின் முன்புறத்தில் பொம்மைகள் ஆடுவதற்கு ஏற்ப, ஒரு முழம் இடைவெளி விடப்பட்டுக் கருப்புத்திரை ஒன்று விரிக்கப்படும்.

பொம்மை ஆட்டுவோரின் மார்பு உயரத்தில் ஒரு மூங்கில் மேடையின் முன்புறத்தில் நீளவாக்கில் கட்டப்பட்டு அதில் இந்த கருப்புத்திரை தொடங்கவிடப்படும். கருப்புத்திரையில் நீளம், பன்னிரெண்டு அடி நீள அகலமுள்ள மேடையாக இருப்பின் எட்டு அடியாகவும், பதினாறு அடி நீள அகலமுள்ள மேடையாக இருப்பின் பன்னிரண்டு அடியாகவும் இருக்கும். பொம்மையாட்டுவோரின் கால்களைக் கருப்புத்திரை மறைத்துக் கொள்ளும். கருப்புத் திரையின் மேலும் பக்கவாட்டிலும் உள்ள காலியான பகுதிகளை மேடையின் முன்புறக் கூரையில் இருந்து விரிக்கப்படும் நீலத்திரைகள் மறைத்துக் கொள்ளும்.

மேடையின் பின்பகுதியில் நீளவாக்கில் கயிறு கட்டி அதில் அன்றைய நாடக நிகழ்ச்சிக்கு வேண்டிய பொம்மைகள் தொங்கவிடப்படும். மேடையில் ஒலிப்பெருக்கிகளும், வண்ண

மின்விளக்குகளும் பயன்படுத்தப் படுகின்றன. ஒவ்வொரு காட்சியின் இறுதியிலும் மூடித் திறக்கும்படி நகரும் திரை வசதியும் செய்து கொள்ளப்படும்.

குறிப்பு

திறந்தவெளியில் எதிர்க்காற்றின் நேராக மேடை அமையுமானால் முகப்புத்திரை, பின்திரை அனைத்தும் உள்ளே வளைந்த ஒரு நிலையில் நிற்காமல் ஆடிக்கொண்டே இருக்கும். எனவே, திறந்தவெளி மேடை காற்றுப் போக்கை ஒட்டி அமைக்கப்படும்.

## 9.3.6. பொம்மலாட்டப் பொம்மைகளின் இயக்கம்

பொம்மையின் கை, கால், உடல், தலைப்பகுதிகள் ஒன்றாக இணைப்பட்டிருக்கும். இப்பொம்மைகள் மரம், கம்பி, காகிதம், நூல், காகிதம் நிரம்பிய துணி, கந்தை கூளம் அல்லது மரத்தூள் ஆகியவை மூலம் செய்யலாம். இப்பாவையின் உடல், கை, கால் பகுதிகளில் கயிறு கட்டப்பட்டு அக்கயிற்றின் மறுமுனை பொம்மலாட்டக்காரனின் கையில் இருக்கும். பொம்மலாட்டக்காரன் தன் கையிலுள்ள கயிற்றை அங்க அசைவுகளுக்கேற்ப, தளத்தியோ அல்லது இறுக்கியோ திறமையாக இயக்க வேண்டும். இவ்வகை பொம்மையை இயக்கத் தனித்திறமை வேண்டும்.

ஒவ்வொரு பொம்மையின் மூலம் காட்டப்பட வேண்டிய அசைவுகளுக்கு ஏற்ப, சுண்டுக் கயிறுகள் பொம்மையில் பிணைக்கப்படும். சுண்டுக் கயிறுகளின் அமைப்பினை இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். ஒன்று, குச்சிவகை. மற்றொன்று, வளையவகை. குச்சிவகை என்பது, சுண்டுக் கயிறுகள் குச்சியில் கட்டப்பட்டதாகும். அதாவது, பொம்மைகள் தலை, கை, முதுகு, கால் ஆகியவற்றில் பிணைக்கப்பட்டுள்ள கயிறுகளின் மற்றொரு முனை ஏறத்தாழ அரை அடி நீளமுள்ள மூங்கில் குச்சிகளில் கட்டப்படுகின்றன. இக்குச்சிகளை ஆட்டுபவர் தம் கைகளில் பிடித்துக் கொண்டு கயிறுகளை அசைப்பதன் வாயிலாகப் பொம்மை ஆட்டப்படு கின்றது. வளையவகை என்பது சுண்டுக் கயிறுகள் வளையத்தில் கட்டப்பட்டிருப்பதாகும். அதாவது, பொம்மையின் தலை, முதுகில் உள்ள சுண்டுக் கயிறுகள் ஒரு வளையத்தில் கட்டப்படுகிறது. பொம்மையின் கைகளில் கயிறுகளுக்குப் பதிலாகக் கம்பிகள் இணைக்கப்பட்டிருக்கும். பொம்மையாட்டுவோன் தன்

தலையில் நீளமான துணியால் பெரிய உருமால் கட்டி அதில் வளையத்தை மாட்டிக் கொண்டு, தன் இரு கைகளாலும் பொம்மைகளின் கைகளில் உள்ள கம்பிகளைப் பிடித்துக்கொண்டு பொம்மையினை இயக்குவதாகும். பொம்மையின் தலைக்கயிறு அனைத்தும் வளையத்தில் கட்டப்பட்டு இருப்பதால், பொம்மையாட்டுவோன் தன் தலையினை அசைக்கும்போது அதற்கேற்பப் பொம்மையின் தலையும் அசைகிறது.

சூத்திரப்பாவை பொம்மைகளைச் செயற்படுத்துவதற்குப் பல வழிகள் உள்ளன. இப்பொம்மைகளைக் கையில் சொருகி முதல் விரலைத் தலைப் பாகத்திற்குள் விட்டு பொம்மையின் கைகளைக் கட்டைவிரல் மற்றும் சுண்டு விரலாலும் இயக்கலாம் அல்லது பொம்மையைக் கழியில் கட்டி கழி மற்றும் கைகளின் மூலமாகவும் இயக்கலாம். இம்முறையில் பொம்மையின் இயக்கம் ஆட்டக்காரனின் கையில் இருக்கவேண்டும் அல்லது நிழல்பொம்மை ஆட்டமாகவும் காட்டலாம்.

தொன்று தொட்டு தமிழ்நாட்டில் பொம்மையின் நூல்கள், பொம்மலாட்டக்காரனின் தலைப்பாகையில் கட்டப்படுவதால், கைகளால் பொம்மையின் கைகால்களை சுலபமாகவும் திறமையாகவும் இயக்க முடியும். நகைச்சுவை, கேலிக்கூத்து, கற்பனை ஆகியவற்றை பொம்மல் ஆட்டக்காரன் இக்கலையின் மூலம் வெளிப்படுத்தலாம்.

தோல்பொம்மலாட்டம் வெள்ளை துணி விரிப்பின் பின்புறமாக ஒளியின் உதவியுடன் காட்டப்படும். நிழலுருவமே நிழல்பொம்மலாட்டமாகும். பெரும்பாலும் இராமாயணம், மஹாபாரம் போன்ற கதைகளையே நிழல்பொம்மலாட்டத்திற்கும் எடுத்துக் கொள்வர். ஆந்திரத்திலும், தமிழகத்திலும் பிரபலமடைந்துள்ள இந்த நிழல்பொம்மலாட்டம், பெரிய தோலிலான பொம்மைகளைக் கயிறு கொண்டு இயக்கப்படுகின்றன. இசை, மத்தளம், புல்லாங்குழல் போன்ற இசைக் கருவிகளைக் கொண்டும் இப்பொம்மலாட்டத்தை இனிமையாக்குகின்றனர்.

தோற்பாவையில் ஒருவர் ஒரே நேரத்தில் பல பொம்மைகளை இயக்க இயலும். ஆனால் பொம்மலாட்டத்தில் ஒருவர் ஒரு நேரத்தில் ஒரு பொம்மையைத்தான் இயக்க இயலும். எனவே பொம்மலாட்டத்தில் பொம்மைகளை இயக்க நால்வர் தேவைப்படுகின்றனர். மேலும்

குறிப்பு

பொம்மைகளை எடுத்துத் தர ஒருவர், இசைக்கருவிகளை வாசிக்க நால்வர் என ஒன்பது பேர் தேவைப்படுவதாகவும் பின்பாட்டுப் பாடுவதற்கு அந்தந்த ஊர்களில் உள்ள தெருக்கூத்து நடிகர்களைக் குழுவில் பயன்படுத்திக் கொள்வதும் உண்டு. பெரும்பாலும் ஆண்களே பெண் குரலில் பேசுவதுண்டு. அதிக வருமானம் கிடைத்தால் மட்டுமே பெண் பாடகரை அமைத்துக் கொள்வர்.

இதுபோல், பொம்மைகளின் கூடுகளில் கைவிரல்களை நுழைத்து, கட்டைவிரல் மற்றும் நடு விரல்களைப் பொம்மையின் இரு கைகளில் பொருந்துமாறு வைத்து, சுட்டுவிரலைப் பொம்மையின் தலையில் வைத்து கீழே அமர்ந்து கொண்டு திரைக்கு மேலே பொம்மைகள் இருக்குமாறு நிகழ்ச்சி நடத்துவதை கையுறை பொம்மலாட்டம் என்பர். ஒரே நேரத்தில் ஒருவர் இரண்டு கைகளிலும் இரண்டு பொம்மைகளை மாட்டி இந்த நிகழ்ச்சியை நடத்துவர். கட்டை விரலையும் நடு விரலையும் அசைப்பதன் வாயிலாகப் பொம்மையின் கைகளையும் சுட்டுவிரலை அசைப்பதன் வாயிலாகப் பொம்மையின் தலையையும் இயங்க வைக்க இயலும். கைகளைப் பக்கவாட்டில் நகர்த்துவதன் வாயிலாகப் பொம்மைகளை இடம் மாற்றலாம். பொம்மைகளை அசைத்துக் கொண்டே பொம்மையாட்டி வசனங்களைப் பேசி நிகழ்ச்சியை நடத்துவார்.

## முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

1. பொம்மலாட்டத்திற்கு வேறுபெயர் என்ன?
2. பொம்மலாட்டத்தின் பாடுபொருள் யாது?
3. பொம்மலாட்டத்தின் வகைகள் யாவை?
4. தோல்பொம்மை என்றால் என்ன?

## 9.4. தோற்பாவை

தோல்பாவைக் கூத்து, தோல் பொம்மலாட்டம், தோற்பாவை நிழற்கூத்து என்றெல்லாம் தோற்பாவையைக் குறிப்பிடுகின்றனர். தோற்பாவை ஒரு கூத்து வகையைச் சார்ந்தது. தோற்பாவைக் கூத்துக் கலைஞர்கள் மராட்டியைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள். இவர்கள் ஊர் ஊராகச் சென்று தோற்பாவைக் கூத்தினை நிகழ்த்துகின்றனர்.

குறிப்பு

குடும்பத்தில் உள்ள அனைத்து உறுப்பினர்களும் நிகழ்ச்சியில் பல்வேறு பொறுப்புகளை வகிக்கின்றனர். வெவ்வேறு ஊர்களுக்குச் சென்று ஊர்ப் பொது இடத்தில் வட்ட வடிவிலான திறந்தவெளிக் கூடாரம் போட்டு, அதில் பொம்மலாட்ட மேடை அமைத்து, விளம்பரப்படுத்தி, கட்டணம் வசூல் செய்து நிகழ்ச்சிகளை நடத்துவர். இவர்களின் நோக்கம் அன்றாட வாழ்க்கைக்கான பொருள் ஈட்டுவதேயாகும். பொழுதுபோக்கினை மையமாகக் கொண்டே நிகழ்ச்சிகள் நடத்தப்படுகின்றன. வழிபாட்டுச் சடங்கோடு தொடர்புடையதாகக் காணமுடியவில்லை. ஆனால் முன்னர் வழிபாட்டுச் சடங்கோடு தொடர்புடையதாக இருந்து தற்போது மாறி இருக்கிறது என்பர்.

### 9.4.1. தோற்பாவைக் கூத்து நடத்துபவர்கள்

தோற்பாவைக் கூத்து நிகழ்த்துபவர் எண்ணிக்கை குழுவுக்குக் குழு வேறுபடுகிறது. தோற்பாவைக் கூத்துக் கலைஞர்கள் எவ்வாறு தங்கள் பணிகளைப் பிரித்துக்கொள்கின்றனர். அதாவது, கூத்து நிகழ்த்துதல், கூத்தரங்கம் அமைத்தல், படம் வரைதல் முதலான பணிகளைக் குடும்பத் தலைவரும், விளம்பரம் செய்தல், மத்தளம் அடித்தல், கூத்தரங்கம் அமைக்க உதவுதல் முதலான பணிகளை அவருடைய தம்பியும், காசு வாங்கிப் பார்வையாளர்களை உள்ளே அனுமதித்த பின் சுரப்பெட்டி வாசிக்கும் பணியை அவர் மனைவியும், சால்ரா வாசிக்கும் பணிணை அவர் மகளும் அவர் மகனும் செய்வர்.

பாவைகளை இயக்கும் கலைஞர்கள் திரைமறைவில் இருப்பர். பாவைகளை இயக்கிக் கொண்டே பாடி வசனம் பேசும் ஆற்றல் வாய்ந்தவர்கள். எத்தனை வயதுடையவராக இருந்தாலும் நிகழ்ச்சியை நடத்துவர்.

### 9.4.2. தோற்பாவை செய்முறை

தோற்பாவைகளைச் செய்வதற்கு ஆட்டுத்தோல் அல்லது மான்தோல் பயன்படுத்தப்படுகிறது. மாட்டுத்தோல் முரடாக இருக்குமாதலால் அதனைப் பயன்படுத்துவதில்லை. தோலை வாங்கிய உடனே பாவை செய்தால் நாற்றம் அடிக்கும்; எலி கடித்துவிடும். எனவே, தோலை முதலில் பதப்படுத்துவர். தோலை வாங்கி மூன்று

குறிப்பு

நாட்கள் சட்டியில் வைத்து, பின் நான்காவது நாள் தோலிலுள்ள உரோமங்களை நீக்குவர். பின்னர் தண்ணீரில் அலசி, சோப்பு போட்டு நன்கு கசக்கி மீண்டும் அலசிக் காய வைப்பர். இவ்வாறு நான்கு நாள்கள் திரும்பத் திரும்ப செய்யப்படும்போது தோல் பஞ்சுபோல் ஆகிவிடும். பின்னர் முளைகள் அடித்துத் தோலை விரித்து இறுக்கமாகக் கட்டி உலத்துவர். கத்தியால் தோலிலுள்ள சவ்வுகளைச் சுரண்டி எடுப்பர். ஒளிபுகுமளவு மெலிதாக ஆக்கப்பட்ட அத்தோலை உப்புத்தாளால் தேய்த்து சுத்தப்படுத்துவர். இதனால் தமிழ்நாட்டுப் பாவைகள் ஒளிரும் தன்மை கொண்டவையாக உள்ளன. தோலைப் பாடம் செய்யும்போது உப்பினைப் பயன்படுத்த மாட்டார்கள். இவ்வாறு தயார் செய்யப்பட்ட தோலில் வண்ணம் தீட்டி உருவம் வரைவர். உளியால் தட்டி அணிகள் போல் வெட்டுவர். விரைப்புக்காக மூங்கில் பிளாச்சு வைத்துக் கட்டுவர். பாவை ஒரே தோலில் செய்யப்பட்டிருக்கும்.

தோற்பாவைகளுக்கு வண்ணம் தீட்டும்போது எண்ணெய் வண்ணங்கள் திட்டுத் திட்டாகத் தெரியும். ஆதலால் நீர் வண்ணங்கள் பயன்படுத்துவர். நீர் வண்ணங்கள் ஒளி புகக்கூடிய அளவுக்குச் சிறப்பாக உள்ளன. ஆயினும் ஈரம் படாமல் கவனித்துக் கொள்ள வேண்டிய சிக்கல் உண்டு. மண்ணெண்ணெய் விளக்குக் கரியையும் வேப்பம் பிசினையும் கலந்து கருப்பு வண்ணம் தயாரிப்பர். பிற வண்ணங்களைக் கடையிலிருந்து வாங்கிக் கொள்வர். தோலின் விலை ஏற்றத்தினால் முக்கியமான பொம்மைகளைத் தவிர ஏனையவற்றைக் கனத்த தாள்களிலிருந்து உருவாக்கிக் கொள்வர். சில நேரங்களில் ஒரே பாவையை இரண்டு அல்லது மூன்று பாத்திரங்களுக்குப் பயன்படுத்துகின்றனர்.

## 9.4.3. தோற்பாவைக் கூத்தரங்கு

தோற்பாவைக் கூத்து நடைபெறும் இடம் வட்ட வடிவமாக அமைந்திருக்கும். அங்குக் கூத்தாட்டும் அரங்கம் அமைக்கப்படும். மேடையில் நீள உயர அகலங்கள் பார்வையாளர்களை மனதில் கொண்டு அவரவர் வசதிக்கேற்ப அமைக்கப்படும். இது குழுவிற்குக் குழு மாறுபடும். தோற்பாவை நிழல் அசைவுகள் வாயிலாகக் கதை நிகழ்ச்சி சொல்லப்படுகிறது. ஆகவே, நிழல்கள் பார்வையாளர்களின்

குறிப்பு

கண்களைக் கூசச் செய்யாமல் கூத்தை நன்கு சுவைக்கத் தூண்டுவனவாக அமைதல் வேண்டும். அதற்கேற்ப விளக்கை மாட்டி அரங்கம் அமைக்கப்படும். இந்த அரங்கத்தில் கதைக்கு ஏற்றாற்போல் பாத்திர முறைப்படி பாவைகளை வரிசையாக அடுக்கி வைத்துக் கொள்வர். தோற்பாவைக் கூத்துக்களில் பெரும்பான்மை இராமாயணக் கதைகளே நிகழ்த்தப்படுகிறது.

### 9.4.4. தோற்பாவைப் பாடல்கள்

தோற்பாவைக் கூத்துக்கான பாடல்கள் அந்தந்த குழுவைச் சேர்ந்த கலைஞர்கள் உருவாக்கப்படுகின்றன. இடையிடையே தெருக்கூத்துப் பாடல்கள், தெம்மாங்குப் பாடல்கள், திரைப்பாடல்கள் முதலியன இணைக்கப்படுகின்றன. பாவையை ஆட்டுபவர் பாத்திரங்களின் தன்மைக்கு ஏற்ப குரலை மாற்றிப் பேசுவதில் வல்லவராக இருப்பர். இவர் திரைமறைவில் அமர்ந்தவாறே பாவைகளை இயக்க, இசைக் கலைஞர்கள் வெளியில் இருப்பர். பெட்ரோமாக்ஸ் வெளிச்சத்தில் நிகழ்ச்சி நடத்தப்படும். தற்போது மின்விளக்குகளும் பயன்படுத்தப்படுகிறது.

### 9.4.5. தோற்பாவைக் கூத்தமைப்பு

தோற்பாவைக் கூத்து நிகழ்ச்சி பொதுவாக எட்டு நிலைகளில் அமைகிறது. கடவுள் வாழ்த்து, கோமாளியின் தன்னறிமுகப் பாடல், கூத்து அறிமுகம், நகைச்சுவைக் காட்சி, கதை ஆரம்பப் பாடல், கதை நிகழ்ச்சி, நகைச்சுவைக் காட்சி, கதை முடிவு என்று அமையும்.

### 9.4.6. திருவாசகத்தில் தோற்பாவை

தோற்பாவைக் கூத்தின் பழமையைத் திருவாசகம் எடுத்துரைக்கிறது. திருவாசகத்தில்,

*"சீல மின்றி நோன்பின்றிச் செறிவே இன்றி அறிவின்றித்*
*தோலின் பாவைக் கூத்தாட்டாய்ச் சுழன்று விழுந்து கிடப்பேனை"*

என்று மாணிக்கவாசகப் பெருமானால் தோற்பாவைக் கூத்து பற்றிக் கூறப்பட்டுள்ளதால் இக்கூத்தின் பழமை புலனாகும்.

குறிப்பு

## முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

5. தோற்பாவையின் வேறுபெயர்கள் யாவை?
6. தோற்பாவைக் கூத்தில் பாடல்களைப் பாடுபவர் யார்?
7. தோற்பாவைக் கூத்தமைப்பு எவ்வாறு அமையும்?
8. மாணிக்கவாசகர் உணர்த்தும் தோற்பாவை கூத்து பற்றி விவரி?

## 9.5. தொகுத்துக் காண்போம்

- பொம்மலாட்டம் பற்றியும், பொம்மலாட்ட வகைகள் பற்றியும், பொம்மலாட்ட பொம்மைகள் இயக்க முறைகள் பற்றியும், பொம்மலாட்ட பொம்மைகள் செய்முறைகள் பற்றியும் தெரிந்து கொண்டீர்கள்.
- தோற்பாவை பற்றியும், தோற்பாவை அரங்கமைப்பு பற்றியும் தெரிந்து கொண்டீர்கள்.

## 9.6. முன்னேற்றத்தைச் சோதிக்கும் வினாக்களுக்கான விடைகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | 9.3. | 2. | 9.3.2. |
| 3. | 9.3.3. | 4. | 9.3.4.2. |
| 5. | 9.4. | 6. | 9.4.4. |
| 7. | 9.4.5. | 8. | 9.4.6. |

## 9.7. பாடம் பயின்றபின் செய்யும் பயிற்சிகள்

1. பொம்மலாட்டம் என்றால் என்ன? அவற்றின் வகைகளை விளக்குக.
2. பொம்மலாட்ட பொம்மை இயக்கமுறைகள் பற்றிக் கட்டுரை வரைக.
3. பொம்மைகள் செய்முறைகள் பற்றிக் கட்டுரை வரைக.
4. தோற்பாவைக்கூத்து பற்றிக் கட்டுரை வரைக.

## 9.8. மேலும் பயில்வதற்கான நூல்கள்

1. ஆறு. இராமநாதன், நாட்டுப்புறக் கலைகள், மெய்யப்பன் தமிழாய்வகம், சிதம்பரம், 2001.

குறிப்பு

# கூறு 10.
# நாட்டுப்புற நம்பிக்கைகள் - விழாக்கள் - சடங்குகள்

## 10.1. முன்னுரை

சமூகத்தின் பண்பாட்டு மரபினை அறிவிக்க வல்லன அச்சமுதாயத்தின் நம்பிக்கைகள். இது மக்களால் உருவாக்கப்பட்டுச் சமுதாயத்தால் புரக்கப்படுவன. அவை சமூகத் தேவைகள் மற்றும் குறிக்கோள்களின் அடிப்படையில் தோன்றியவை. மனிதனின் தன்னல உணர்வும் சமுதாய உணர்வுமே நம்பிக்கைகளை வளர்த்து வருகின்றன. இந்நம்பிக்கையின் பாற்பட்டதாக நாட்டுப்புற விழாக்களும், நாட்டுப்புறச் சடங்குகளும் அமைகின்றன. நாட்டுப்புற நம்பிக்கைகள் பற்றியும், நாட்டுப்புற விழாக்கள் பற்றியும், நாட்டுப்புறச் சடங்குகள் பற்றியும் விளக்குவதாக இப்பகுதி அமைகிறது.

## 10.2. குறிக்கோள்கள்

- நாட்டுப்புற மக்களிடையே காணப்படும் நம்பிக்கைகள் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- நாட்டுப்புறத்தில் நடத்தப்பெறும் விழாக்கள் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- நாட்டுப்புற மக்கள் கடைபிடிக்கும் சடங்குகள் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.

## 10.3. நாட்டுப்புற நம்பிக்கைகள்

குறிப்பு

நாட்டுப்புற மக்களின் வாழ்க்கை நம்பிக்கையின் பாற்பட்டதாகவே அமைகின்றது. பிறப்பு முதல் இறப்பு வரையிலும், எழுந்தது முதல் தூங்கும் வரையிலும் செய்யும் செயல்களில் பெரும்பாலானவற்றை நம்பிக்கையின் அடிப்படையிலேயே செய்து வருகின்றார்கள். நம்பிக்கை என்பது தொன்று தொட்டு வருவது. எது ஒன்று பற்றியும் தன்னால் புரிந்துகொள்ள இயலாத நிலையில் அதற்கான விளக்கத்தைப் பிறருக்கு எடுத்துரைக்க இயலாத போதும் சிலவற்றை வெளிப்படுத்துகிற மனத்தின் எண்ணங்களே நம்பிக்கை எனலாம். அதாவது ஒன்றைப் பற்றிய சரியான தெளிவில்லாத நிலையில் சொல்லப்படும் காரணகாரிய கற்பிதங்கள் நம்பிக்கைகளாக நிலைக்கின்றன. இவ்வகை நம்பிக்கைகள் நாட்டுப்புற மக்களிடம் அதிகமாகக் காணப்படுகின்றன.

### 10.3.1. நம்பிக்கையின் கூறுகள்

நம்பிக்கையை நம்பிக்கை என்றும், மூட நம்பிக்கை என்றும் இரண்டு வகையாகப் பிரித்துக் கூறுவார்கள். ஒன்றினைக் காரணகாரியம் அறியாமல் மனதுள் ஏற்றுக்கொண்டு வழிவழியாகச் செய்து வரும் செயல்களுக்குக் காரணம் அறியாத நிலையில் எண்ணப்படும் எண்ணங்களே மூட நம்பிக்கை. அதாவது, ஒன்றினைப் பற்றித் தானும் புரிந்து கொள்ளாமல் பிறருக்கும் எடுத்துச் சொல்ல இயலாத தன்மையுடையது மூட நம்பிக்கை எனலாம். ஒன்றினைக் காரணகாரிய அடிப்படையில் ஏற்றுக்கொண்டு செய்து வரும் செயல்களுக்குக் காரணம் அறிந்து சொல்லப்படும் எண்ணங்களே நம்பிக்கை. அதாவது, ஒன்றினைப் பற்றித் தானும் புரிந்து பிறருக்கும் எடுத்துச் சொல்லும் தன்மையுடையது நம்பிக்கை எனலாம்.

இவ்வகையில் நோக்கும்போது நாட்டுப்புற மக்களிடம் காணப்படும் நம்பிக்கைகள் பெரும்பாலும் மூட நம்பிக்கையாகவே அமைகின்றன. ஆனால் இவற்றை இழிவாகக் கூறிவிடவும் இயலாது. நமக்கு மூட நம்பிக்கையாகத் தோன்றுவது அவர்களுக்கு நம்பிக்கையாகத் தோன்றும். அவர்களுக்கு நம்பிக்கையாகத் தோன்றுவது நமக்கு மூட

நம்பிக்கையாகத் தோன்றும். எனவே நாட்டுப்புற மக்களின் வாழ்வோடு தொடர்புடைய நம்பிக்கைகளை 'நாட்டுப்புற நம்பிக்கைகள்' எனலாம்.

## 10.3.2. நம்பிக்கையின் தன்மைகள்

- பய உணர்வின் அடிப்படையில் எழுந்தவை.
- வாழ்வில் நன்மையே விளைய வேண்டும் என்கிற எண்ணத்தின் அடிப்படையில் வந்தவை.
- மரபாகத் தொன்றுதொட்டு வருபவை.
- கருத்துருவாகி நாட்டுப்புற மக்களிடையே காரணகாரிய அடிப்படையில் உருவாகி வளர்ந்தவை.
- படிப்பறிவில்லாத பாமர மக்களின் கருத்துருவமாக விளங்குபவை.
- மனித வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டவை.
- பழக்க வழக்கங்கள், சடங்குகள், விழாக்கள் இவற்றோடு பின்னிப் பிணைந்தவை.
- பிறப்பு முதல் இறப்பு வரை எல்லா நிலைகளிலும் உடன் வருபவை.

இத்தகைய நம்பிக்கைகள் நாட்டுப்புற மக்களிடம் எல்லா நிலைகளிலும் காணப்படுகின்றன.

## 10.3.3. நம்பிக்கையின் வகைகள்

நாட்டுப்புற மக்களிடம் காணப்படும் நம்பிக்கைகளை ஆறு நிலைகளாகப் பாகுபடுத்தலாம். அவை, மனிதர் சார்ந்த நம்பிக்கைகள், பறவை சார்ந்த நம்பிக்கைகள், விலங்கு சார்ந்த நம்பிக்கைகள், சகுனம் சார்ந்த நம்பிக்கைகள், கனவு சார்ந்த நம்பிக்கைகள், ஏனைய நம்பிக்கைகள் என்று கொள்ளலாம்.

## 10.3.3.1. மனிதர் சார்ந்த நம்பிக்கைகள்

நாட்டுப்புற மக்களின் வாழ்வில் அனைத்து காலக் கட்டத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகளும் நம்பிக்கையின் அடிப்படையிலேயே நடைபெறுகின்றன. எனவே பிறப்பு முதல் இறப்பு வரையிலான நம்பிக்கையை மேலும் ஐந்து பிரிவாகப் பிரிக்கலாம்.

## 10.3.3.1.1. குழந்தை பிறப்பு

குழந்தை பிறப்பதும் இறப்பதும் இயல்பான செயல்களான மண்ணில் இருந்து வந்தாலும், அவற்றின் சில செயல்களுக்கும் இவை தாம் காரணமென்று நாட்டுப்புற மக்கள் நம்புகின்றனர்.

குறிப்பு

- குழந்தைகளுக்குக் கண்ணாடி காட்டினால் ஊமையாகும்.
- குழந்தை பிறக்கும்போது கழுத்தில் குடல் சுற்றி, மாலை போட்டுப் பிறந்ததால் தாய்மாமனுக்கு ஆகாது.
- குழந்தை பிறந்த வீட்டில் வாசற்படியில் வேப்பிலையச் சொருகி வைத்தால் பேய், பிசாசு, நோய் வராது.
- குழந்தைக்குக் கண்ணேறு திருஷ்டி விழுந்து விடாமல் இருப்பதற்காக கன்னத்தில் வட்டமான பொட்டிட்டு, உப்பு, மிளகாய் அல்லது மஞ்சள், சுண்ணாம்பு நீர் அல்லது மூன்று வீட்டுக் கூரை அல்லது கற்பூரம் அல்லது உடைந்த ஓட்டை கொட்டாங்கச்சியால் சுற்றிப்போட்டால் கண்ணேறு கழிந்துவிடும்.
- குழந்தையைப் புதியவர்கள், பார்த்துச் சென்றால் வீட்டில் மஞ்சள் நீர் தெளித்தால் தீமை விலகும்.

## 10.3.3.1.2. பெண்கள் பருவமடைதல்

குறிப்பிட்ட வயதில் பெண்கள் பருவமடைவது உலக இயல்பு. இதற்கும் சில கற்பிதங்களைக் கிராம மக்கள் கூறுகின்றனர்.

- பருவமடைந்ததும் ஆண்கள் முகத்தைப் பார்த்தால் பெண்ணுக்கு ஆகாது.
- பேய் பிசாசு அண்டிவிடும் என்பதால் பச்சையிலைப் பந்தலிட்டு உட்கார வைத்தல்.
- பெண்ணின் தாய்மாமனே பந்தலிட வேண்டும்.
- கன்னித்தீட்டு வீட்டிற்கு ஆகாதென்று வெளியில் இருத்தி வைத்தல்.
- மாத விலக்கான பெண் பூ வைக்கக் கூடாது.

## 10.3.3.1.3. திருமணம்

ஆணும் பெண்ணும் இணைந்து இல்லறத்தில் ஈடுபடுவது உலக இயற்கை. இத்தகைய வாழ்விலும் நாட்டுப்புற மக்கள் சில கற்பிதங்களைக் கூறுகின்றனர்.

- இரு திருமணங்கள் ஒரு வீட்டில் நடந்தால் ஒன்று சிறக்கும், மற்றது தாழும்.
- திருமணச் சடங்குகளில் சுமங்கலிகள் மட்டுமே பங்கு கொள்ளவேண்டும்.
- நவதானியங்கள் அடங்கிய முளைப்பாரியை மணமான ஏழாவது நாள் நீரில் விட்டு வந்தால் அவர்களின் வாழ்வு வளமாக அமையும்.
- திருமணத்தின் போது ஏர் போன்ற கருவியைத் தலையில் வைத்தால் வளமான வாழ்வு தொடரும்.
- திருமணத்தின் முதல் நாள் அரசாணிக்கால் என்னும் அரசமரம் அல்லது ஒதிய மரத்தின் கிளையை நட்டு வைத்தால் அம்மரங்களைப் போன்று சந்ததி விருத்தியோடு வாழ்வார்கள்.
- மணமகள் விரும்பிய பொருட்களைத் தராவிடில் குறையுடைய குழந்தை பிறக்கும்.
- அதிகம் அரிசி தின்றால் திருமண நாளன்று மழை வரும்.

## 10.3.3.1.4. வளைகாப்பு

இயற்கையில் இறைவன் கொடுத்த வரமாக அமைவது தாய்மை. இது பெண்ணின் பெருமையைச் சுட்டுவது. மணமான பெண் முதல் பிரசவத்தின்போது படுகின்ற துன்பம் மரணத் துன்பம் என்று கூறுவார்கள். எனவே கருவுற்ற பெண்ணிற்கு சடங்குகள் செய்வதற்குச் சில நம்பிக்கைகளைக் கூறுகின்றனர்.

- மறுபிறவி எடுக்கும் நிலையிலுள்ள கருவுற்ற பெண்ணை தாய்வீடு அழைத்துப் போவதே சுக பிரசவத்திற்கு வழி.
- பெண்ணிற்கு பிடித்தமானதை வாங்கித் தரவில்லை என்றால் குழந்தை சரியாகப் பிறக்காது.
- வளைகாப்பு சடங்கு செய்யவில்லை என்றால் சுகப்பிரசவம் வாய்க்காது.
- பிறந்த குழந்தையை நேரில் மாமன் பார்த்தால் அவனுக்கு ஆகாது என்று கண்ணாடி வைத்துக் காட்டுதல்.
- பெண்கள் இரவில் அழக் கூடாது.
- பெண்களின் தலைமயில் முழங்காலுக்குக் கீழே வளரக் கூடாது.

- பெண்கள் இரவில் மல்லாந்து படுக்கக் கூடாது.

## 10.3.3.1.5. இறப்பு

குறிப்பு

எவ்வளவு சிறப்பான வாழ்க்கை வாழ்ந்த மனிதனாக இருந்தாலும் ஒருநாள் இறந்துபட நேரிடுவது இயற்கை. அவ்வாறு நிகழும் இறப்பிற்குச் சில கற்பிதங்களை நாட்டுப்புற மக்கள் கூறுகின்றனர்.

- தேர் கட்டிக் கொண்டு போகும்போது அது ஆடினால் வீட்டிற்கு ஆகாது.
- சனிக்கிழமை இறந்து விட்டால் தொடர்ந்து சாவு நிகழும்.
- புதன்கிழமை சாவு நல்லது.
- மரண நாளில் மழை பெய்வது நல்லது.
- மரண வீட்டிற்குச் சென்றுவந்த பின்னர் குளிக்கவேண்டும்.
- இறந்தவர் ஆசையை நிறைவேற்ற காசு, வெற்றிலை, பாக்கு இவற்றை இறைத்துச் சென்றால் வீட்டிற்கு நல்லது.
- இறந்தவர்கள் காக்காயாக வந்து வீட்டருகே கத்துவதாக நம்பி சோறு வைத்தல்.
- எதிரில் சவ ஊர்வலம் வந்தால் நல்லது நடக்கும்.

இவை போன்ற பல நம்பிக்கைகள் நாட்டுப்புற மக்களிடம் மனிதர்கள் சார்ந்தவையாக இருந்து வருகின்றன.

## 10.3.3.2. விலங்கு தொடர்பான நம்பிக்கைகள்

- நரி முகத்தில் விழித்தால் அதிர்ஷ்டம்.
- பசுமாட்டை வீட்டெதிரே கட்டி வைத்தால் வீட்டில் செல்வம் பெருகும்.
- பசு மாட்டின் கண்களில் நீர் வடிந்தால் வீட்டிற்கு ஆகாது.
- இளங்கன்று இறந்து போனால் தீமை.
- பசுமாடு கன்று ஈன்றவுடன், வெளியில் வருகின்ற கழிவினை நாய் தின்றால் பசுமாடு பால் கறக்காது.
- அக்கழிவினை ஆலமரத்தில் கட்டி வைத்தால் பசு நிறைய பால் கொடுக்கும்.
- ஆடு இரட்டைக் குட்டி போடுவது வீட்டிற்கு நல்லது.

- நாய் இறந்து விட்டால் அதனைப் புதைக்காமல் விட்டுவிட்டால் ஊருக்கு ஆகாது.
- நாய் அழுதால் இறப்பு நிகழும்.
- பூனையை அடிப்பது பாவம்.

இவை போன்ற பல நம்பிக்கைகள் விலங்குகள் தொடர்பானவையாக நாட்டுப்புற மக்களிடம் காணப்படுகின்றன.

### 10.3.3.3. பறவைகள் சார்ந்த நம்பிக்கைகள்

- காக்கை கரைந்தால் விருந்தினர் வருவர்.
- காக்காய் தலைமேல அடித்தால் தீங்கு வரும்.
- காக்காய் தலையில் எச்சமிட்டல் பணம் வரும்.
- வீட்டில் சிட்டுக்குருவி கூடு கட்டினால் வளம் பெருகும்.
- புறாக்கள் வீட்டில் கூடு கட்டினால் ஆகாது.
- வீட்டில் வௌவால் இருந்தால் நல்லது.
- கோழி, வாத்து போன்றவற்றை வளர்ப்பது இல்லறத்திற்குச் சிறப்பு.
- வீட்டைச் சுற்றி வல்லூறு பறந்தால் இறப்புச் செய்தி வரும்.

இவைபோன்ற பல நம்பிக்கைகள் பறவைகள் தொடர்பானவையாக நாட்டுப்புற மக்களிடம் காணப்படுகின்றன.

### 10.3.3.4. சகுனம் தொடர்பான நம்பிக்கைகள்

- வெளியில் கிளம்பும் போது விதவைகள் எதிரில் வந்தாலும், எண்ணெய்க் குடத்துடன் வாணியர் வந்தாலும், சட்டி பானையோடு குயவர் வந்தாலும் போகிற காரியம் நடக்காது.
- பூனை குறுக்கே வந்தால் வெளியில் செல்லுதல் நல்லதல்ல.
- முயலைப் பார்த்தால் செய்கிற காரியம் வெற்றியாகும்.
- கழுதை கத்தினால் வீட்டிற்குத் திரும்பிவிட வேண்டும்.
- ஞாயிற்றுக்கிழமை பசு ஈனுவது நல்லது.
- வீட்டில் எறும்புப் புற்று இருந்தால் நல்லது.
- ஆமை வீட்டில் புகுந்தால் தீயது.
- பல்லி இடப்புறம் விழுந்தால் நல்லது.
- எருமை உடலையும் தலையையும் ஆட்டினால் தீயது.

இவ்வாறு பலவற்றை நல்ல சகுனங்களாகவும் தீய சகுனங்களாகவும் நாட்டுப்புற மக்கள் நம்புகின்றனர்.

குறிப்பு

### 10.3.3.5. கனவு தொடர்பான நம்பிக்கைகள்

- பகல் கனவு பலிக்காது.
- கனவில் இறப்பு நடந்தால் திருமணம் நடக்கும்; கனவில் திருமணம் நடந்தால் இறப்பு நிகழும்.
- கனவில் மலத்தைத் தொட்டால் பணம் வரும்.
- கனவில் வெள்ளைப் பூக்கள் பார்த்தால் நல்லது.
- கனவில் பரங்கிக்காய் விழுந்து உடைவதும், முட்டை, மாமிசம், உடைவதும் தீயது.
- கனவில் பாம்பு கடித்து விட்டால் நல்லது. பாம்பு துரத்தினால் கெடுதல்.
- கனவில் கடலலை வெள்ளம் வந்தால் செல்வம் சேரும்.
- கனவில் முன்னோர் வந்தால் தெய்வ அருள்கிட்டும்.
- கனவில் தீப்பற்றி எரிந்தால் பெண்கள் பருவமடைவர்.
- கனவில் சுவர் இடிந்து விழுந்தால் யாராவது இறந்து விடுவர்.
- கனவில் பசுமையான பயிர்க்காட்சி வந்தால் வாழ்வு செழிக்கும்.
- விடியலில் கண்ட கனவு பலிக்கும்.

தூங்கும்போது காணும் கனவிற்கும் சில அடிப்படைகள் உண்டு என்று நாட்டுப்புற மக்கள் நம்புகின்றனர்.

### 10.3.3.6. ஏனைய நம்பிக்கைகள்

மேற்கூறிய ஐந்து பிரிவிற்குள்ளும் அடங்காத பல நம்பிக்கைகள் நாட்டுப்புற மக்களிடம் உள்ளன. அவற்றை இங்குக் காணலாம்.

- செவ்வாய் அமங்கல நாள். செவ்வாயில் முடிவெட்டிதல் வறுமை தரும். செவ்வாயும் வெள்ளியும் தையல் கூடாது.
- வாசற்படியில் உட்காரக் கூடாது; ஒற்றைக்காலில் நிற்கக் கூடாது; உடைந்த வளையலை அணிந்தால் மாமாவிற்கு ஆகாது; விழுந்த பல்லினைப் புதைத்து வைத்தால் சீக்கிரம் பல் முளைக்கும்; ஒற்றைத் தும்மல் தீமை.

- நல்ல காரியம் பற்றிப் பேசும் போது மணி அடித்தால் நல்லது.
- ஒரு காரியத்தைப் பற்றிப் பேசும் போது பல்லி கத்தினால் நல்லது. சில இடங்களில் உள்ள பல்லி கத்தினால் தீயது.
- வெறும் ஆட்டுக் கல்லை ஆட்டக் கூடாது. வெறும் அம்மியை அரைக்கக் கூடாது.
- ஏணியைப் படுக்க வைக்கக் கூடாது.
- திருநீரால் கோலம் போடக்கூடாது.
- தூங்கும் போது முத்தம் தரக்கூடாது.
- அதிகம் படம் பிடித்தால் சாவு நெருங்கிவிடும்.
- தலையிலும் வாயிலும் அடித்துக் கொண்டு அழுதால் வீட்டிற்கு ஆகாது.
- பூக்களையும் சோற்றையும் காலில் மிதிக்கக் கூடாது.
- நிலாவைச் சுற்றி தூரமாக வட்டமிருந்தால் நெருக்கமாக மழை வரும்.
- தேய்பிறையில் காரியம் செய்தால் வளராது.
- சாவு வீட்டில் சொல்லிக் கொண்டு கிளம்பக் கூடாது.

இவைபோன்ற பல நம்பிக்கைகள் நாட்டுப்புற மக்களிடம் காணப்படுகின்றன. இவையாவும் முன்னோர் நம்பினர்; நன்மை விளைந்தது. நாங்களும் தொடர்ந்து நம்பி வருகிறோம் என்கிற நிலையிலேயே நாட்டுப்புற நம்பிக்கைகள் இருந்து வருகின்றன.

## முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

1. நம்பிக்கையின் வகைகள் யாவை?
2. திருமணம் தொடர்பான இரண்டு நம்பிக்கைகள் கூறுக?
3. காகம் தொடர்பாக நாட்டுப்புற மக்களிடம் காணப்படும் நம்பிக்கைகளைக் கூறுக?
4. கனவு தொடர்பான மக்களின் இரண்டு நம்பிக்கைகளைக் கூறுக?

## 10.4. நாட்டுப்புற விழாக்கள்

இயல்பு நிலையில் வைத்து மனித மனங்களை நோக்கினால் இன்பத்தை விரும்பும் நிலையை அறியமுடியும். அத்தகைய இன்ப விருப்ப வெளிப்பாடுகள் பல விதங்களில் வெளிப்படும். அவற்றுள் திருவிழாவும் ஒன்று. வருடம் முழுவதும் உழைத்து வாழும் கிராம

மக்கள் விழாக்களின் போது ஓய்வு எடுத்துக் கொள்வதோடு தங்களை மகிழ்ச்சியோடு இருக்கவும் மாற்றிக் கொள்கின்றனர். அதாவது வருடத்தின் சில தினங்களில் உழைப்பை நிறுத்தி உற்றார் உறவினரோடு ஒன்றுகூடி மகிழ்ச்சியோடு இருக்க விரும்புகின்றனர். அதனடிப்படையிலேயே கிராமங்களில் விழாக்கள் கொண்டாட ஆரம்பித்திருக்கலாம். அவ்வகை விழாக்களை குடும்ப விழாக்கள் என்றும், சமுதாய விழாக்கள், மாத விழாக்கள் என்றும் சுட்டுவர்.



## 10.4.1. குடும்ப விழாக்கள்

ஒவ்வொரு குடும்பத்திலும் அவரவர் உறவினரோடு இணைந்து நடத்தும் சிறப்பு நிகழ்ச்சிகளைக் குடும்ப விழாக்கள் எனலாம். அதாவது குடும்பத்தில் நடக்கும் சுப நிகழ்ச்சிகள் யாவும் குடும்ப விழாக்களே. காதணி விழா, பூப்புனித விழா, திருமண விழா, வளைகாப்பு விழா முதலான விழாக்கள் குடும்ப விழாக்களில் அடங்கும். இவை பற்றி 'நாட்டுப்புறச் சடங்குகள்' என்னும் பகுதியில் விரிவாகக் காணலாம்.

## 10.4.2. சமுதாய விழாக்கள்

ஒரு கிராமத்தைச் சேர்ந்த பல சாதி மக்களும் பல குடும்பங்களும் ஒன்று சேர்ந்து கொண்டாடி மகிழும் விழாக்களைச் சமுதாய விழாக்கள் எனலாம். அதாவது ஓர் ஊரில் வாழும் அனைத்து மக்களும் ஒன்று கூடி, விழாவில் பங்கு கொண்டு தங்கள் உறவினர்களையும் வரவழைத்து அவர்களோடு ஊர் மக்களோடு கூடி மகிழும் விழாவே சமுதாய விழாவாகும். இது பெரும்பாலும் ஒரு ஊரைச் சேர்ந்தவர்கள் சேர்ந்து கொண்டாடுவதும், தொடர்புடைய பல ஊர் மக்கள் சேர்ந்து கொண்டாடுவதும் உண்டு. இவ்வாறு கொண்டாடும் விழாக்கள் சமுதாய விழாக்கள் எனப்படும். குறிப்பாக, மதுவெடுப்பு விழா, போலார் அம்மன் விழா, கம்பம் திருவிழா மற்றும் மயானக் கொள்ளை ஆகியவற்றைக் காண்போம்.

### 10.4.2.1. மதுவெடுப்பு விழா

புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள அரளிக்கோட்டை என்னும் கிராமத்தில் 'மதுவெடுப்பு விழா' கொண்டாடப்படுகிறது. இவ்விழாவில் இவ்வூரில் உள்ள அனைத்து சாதி மக்களும் கலந்து கொள்கின்றனர். எட்டு நாள்கள் கொண்டாடப்படும் இவ்விழாவானது பங்குனி மாதம் கடைசி வாரத்தில் அல்லது சித்திரை மாதம் முதல் வாரத்தில் செவ்வாய்க்கிழமை தொடங்கி அடுத்த செவ்வாய்க்கிழமை முடியும். இந்த விழா முடியும் வரை யாரும் ஊரைவிட்டு வெளியூர் செல்லுதல் கூடாது.

விழாவின் முதல் நாள் மது ஓடு என்னும் பாத்திரத்தில் பசு மாட்டுச் சாணமாகிய எருவையிட்டு நீர் தெளித்து நவதானியங்களைத் தூவுவார்கள். இவை போடப்படும் மது ஓடு ஓட்டைகள் உள்ளதாகவும் காற்றோட்டம் உள்ளதாகவும் அமைந்திருக்கும். ஊர்ப் பொது இடத்தில் நவதானியங்கள் இடப்பட்ட மது ஓடு வைக்கப்படும். பிறகு பயபக்தியோடு வீட்டிற்குக் கொண்டு வந்து நடுவீட்டில் வைத்திருப்பார்கள். இதற்குத் தினமும் நீர்தெளித்து பாதுகாத்து வருவர். அம்மை வந்த வீட்டில் இருப்பது போன்று எட்டு நாட்களும் தாளிப்பு சத்தம் வராமல் சமையல் செய்வார்கள். அசைவ உணவும், பயறு வகைகளும் உண்ணமாட்டார்கள். வெளி ஆட்கள் யாரையும் உள்ளே விடமாட்டார்கள். மிகவும் சுத்தமாக மது ஓட்டைப் பாதுகாத்து தினமும் நீர் தெளித்து வருவார்கள். நவதானியங்கள் முளைத்து நன்கு செழித்து வளரும். அதிகமாக வளர்ந்திருந்தால் வண்ணார் மது ஓட்டைச் சுற்றி மறைப்புக் கட்டுவார். இதனை மாரியம்மா என்றே அழைப்பார்கள். ஒவ்வொரு நாளும் பொது இடத்திற்கு அம்மாவைக் கொண்டுபோய் வைத்து தன்னன்னாப் பாட்டுப்பாடி பெண்கள் மகிழ்ந்த பிறகு வீட்டிற்குக் கொண்டு வருவார்கள். எட்டாவது நாள் காலையிலிருந்து எல்லோரும் விரதம் இருப்பார்கள். உறவினர்களை வரவழைப்பார்கள். அன்று அசைவ உணவு வகைகளும், எல்லாவிதமான காய்கறி வகைகளும் சமைத்து விருந்து வைப்பார்கள். அன்று மாலை அம்மாவை அணிகளாலும், குடையினாலும் மலர்மாலை புத்தாடையினாலும் அலங்காரம் செய்வார்கள். பிறகு மது எடுப்பு நடைபெறும்.

குறிப்பு

ஊரிலுள்ளவர்கள் சாதி முறைப்படி அம்பலக்காரரின் தாயாரில் தொடங்கி அனைத்து மக்களும் வரிசையாக நின்று ஊர்ப் பொது இடத்தில் அம்மாவை வைப்பார்கள். அன்று இரவு காவடியாட்டம், கரகாட்டம், பொய்க்கால் குதிரையாட்டம் என்று பலவிதமான கலைகளும் நடைபெறும்.



மறுநாள் காலை அம்மாவின் அலங்காரத்தைக் கலைத்துவிட்டு நீரில் கொண்டு போய் போட்டுவிட்டு வருவார்கள். அன்று இரவு தெருக்கூத்தோ நாடகமோ நடைபெறும். இவ்விழாவின் போது ஊரிலுள்ள அனைத்து மக்களும் மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கியிருப்பர்.

## 10.4.2.2. போலார் அம்மன் திருவிழா

வடார்க்காடு மாவட்டத்திலுள்ள ஊத்தூர் என்னும் கிராமத்தில் இவ்வம்மன் விழா நடைபெறுகிறது. மூன்று நாட்கள் கொண்டாடப்படும் இவ்விழாவிற்கு முதல் நாள் காப்பு கட்டுவார்கள். விழா முடியும் வரை ஊர் மக்கள் வெளியூர்களுக்குச் செல்லக் கூடாது. விழாவின் முதல் நாள் அம்மனுக்காக கல் நடப்பட்டுள்ள இடத்தை வெட்டுவார்கள். அங்கே புதைத்து வைக்கப்பட்டுள்ள எண்ணெய்க் குடத்தை எடுத்து மேலே வைப்பார்கள். பிறகு மேளதாளத்தோடு ஊர் எல்லைக்குச் சென்று அனைத்து மக்களும் பொங்கல் வைத்து கிடாய் வெட்டி சமைத்து உண்டுவிட்டு வருவார்கள். அன்று முதல் மூன்று நாட்களுக்கும் கரகம் எடுக்கப்படும். மூன்றாவது நாள் அம்மனுக்குத் தாய்வீடான குயவர் வீட்டில் அம்மன்சிலை செய்யப்படும். அதனை வண்ணார் வீட்டிற்குக் கொண்டு வந்து வண்ணார் சிறுவனால் தாலி கட்டப்படும். பிறகு அம்மன் அலங்காரத்துடன் ஊர்வலமாக எடுத்து வரப்படும். அன்று இரவு கூத்தும் ஆடல்களும் பாடல்களும் நடைபெறும். மறுநாள் காலை அம்மனை ஊர் எல்லைக்குள் கொண்டு போய் உடைத்து பலவாறு ஏசிக் கொண்டே எறிந்து விட்டு திரும்பிப் பார்க்காமல் வந்து விடுவார்கள். எண்ணெய்க் குடத்தில் எவ்வளவு எண்ணெய் குறைந்துள்ளதோ அந்த அளவு எண்ணெய் நிரம்பி மீண்டும் புதைத்து விடுவார்கள். எண்ணெய் எந்த அளவு குறைந்துள்ளதோ அந்த அளவு ஊர் மக்களுக்குத் தீங்கு நேரிடும் என்று நம்புகின்றனர்.

இவ்விழாவிற்குச் சுற்றுவட்டாரத்திலுள்ள ஊர் மக்களும் உற்றார் உறவினர்களும் வருவார்கள்.

## 10.4.2.3. கம்பம் திருவிழா

கம்பம் திருவிழா என்பது கிராமங்களில் நிகழ்வது. அலரிப் பூப்பறித்து அதை ஐயனாருக்கு வழங்கி, ஒரு செவ்வாய்க்கிழமையன்று விழாவைத் தொடங்குவார்கள். அடுத்த செவ்வாய்க்கிழமை ஒரு வேப்பமரத்தின் மூன்று கொம்பு உள்ள கிளையைக் கோயில் வாயிலில் ஊன்றுவர். இதன் பின் கிராமத்தைவிட்டு ஒருவரும் திருவிழா முடியும் வரை வெளியே செல்ல முடியாது. ஒரு வாரம் முழுவதும் மாலைப் பொழுதில் ஆடவர் அந்தக் கம்பத்தைச் சுற்றி மகிழ்ச்சிக் கூத்தாடுவர்.

அடுத்த செவ்வாய்க்கிழமை கிராம மக்கள் கோயிலுக்குள் பொங்கலிடுவர். அடுத்த நாள் தேரோட்டம் நிகழும். தேர்க்காலில் ஆட்டுக்குட்டி ஒன்றை வைத்து அதன் மீது தேரை ஏற்றி அதைப் பலி கொடுப்பார்கள். தெருமுறை தோறும் இவ்வாறு பலியிடுவார்கள். இந்த ஆட்டுக் குட்டிகளை வண்ணார்களுக்குக் கொடுத்து விடுவர். அன்று இரவு விக்கிரகத் திருமேனி ஊர்வலமாகக் கொண்டு வரப்படும். மறுநாள் திருவிழாவை முடித்துக்கொள்வார்கள்.

## 10.4.2.4. மயானக் கொள்கை

வருடா வருடம் மகாசிவராத்திரிக்கு முன் தினம் மயானக் கொள்ளை நடைபெறும். இதுவும் ஒருவகையில் திருவிழாவாகும். இது அந்தந்த ஊரிலுள்ள தெய்வத்திற்குச் செய்யும் விழாவாகும். தெய்வ உருவத்தைச் சுடுகாட்டிற்குக் கொண்டு செல்வார்கள். அங்குக் கிராம மக்கள் தங்கள் தோட்டத்திலுள்ள புளியங்காய் கத்திரிக்காய் முதலானவற்றையும், தானியங்களையும் கொண்டு வந்து இரைப்பார்கள். அவ்வாறு செய்தால் விளைச்சல் நன்றாக இருக்கும் என்று நம்புகின்றனர். அங்குச் செல்லும் குழந்தையற்றவர்களுக்குக் குழந்தைப்பேறு கிடைக்கும் என்று நம்புகிறார்கள். கீழே இறைந்துகிடக்கும் பொருட்கள் புனிதமானதாகக் கருதப்படுகிறது. அங்குப் பலவிதமான வேடிக்கை ஆட்டங்களும் மாறுவேட ஆட்டங்களும் நடைபெறும். சந்தைகள் கூடும். பல ஊர் மக்களும் உறவினர்களும் சந்தித்துக் கொள்வார்கள்.

குறிப்பு

### 10.4.3. மாத விழாக்கள்

தமிழ்நாட்டில் ஒவ்வொரு தமிழ் மாதங்களிலும் ஒவ்வொரு திருவிழாக்கள் பரவலாகக் கொண்டாடப்படுகிறது. குறிப்பாக, சித்திரைத் திருவிழா, வைகாசி விசாகம், ஆடி பதினெட்டு, கார்த்திகை தீபம், தைப்பூசம், மாசி மகம், மகா சிவராத்திரி, பங்குனி உத்திரம் போன்ற விழாக்களைக் குறிப்பிடலாம்.

### 10.4.3.1. சித்திரைத் திருவிழா

சித்திரை மாதத்தில் வரும் பௌர்ணமி நாளன்று இவ்விழா நடைபெறும். முழு நிலா நாள் இரவு பகல்போல் காட்சி அளிக்கும். பல கோயில்களில் இவ்விழா கொண்டாடப்பட்டாலும், மதுரையில் நடைபெறும் விழாவே சிறப்புடையதாகக் கருதப்படுகிறது. சித்ரா பௌர்ணமி அன்று, மதுரையில் சுற்று வட்டாரங்களில் உள்ள கடவுளர் திருமேனிகள் கவர்ச்சியான முறையில் வைகைக் கரைக்கு எடுத்துச் செல்லப்படும். நூறாயிரக்கணக்கான மக்கள் இவ்விழாவில் கலந்துகொள்வர். மதுரையில் கோயில் கொண்டு அருள் பாலிக்கும் அம்னை மீனாட்சிக்கும் சிவபெருமானுக்கும் நடைபெறும் திருமண விழாவாக இத்திருவிழா அமையும்.

கிராம மக்கள் வண்டிக் கட்டிக் கொண்டு மதுரைக்கு வந்துவிடுவர். 12 நாட்கள் நடக்கும் விழாவில் அழகர் மலையிலிருந்து இறங்கி வருவதாக நடத்தப்படும் காட்சி அழகுடையது. மீனாட்சியின் திருமணத்தைக் காண அழகர் வருகிற வழியில் எதிர்படும் அரக்கர்களை அழப்பதற்காகவும், பக்தர்களைக் காப்பதற்காகவும் இன்னபிற காரணத்திற்காகவும் பத்து அவதாரங்களை எடுக்கிறார். இவ்வாறு தசாவதாரம் அழகர் எடுப்பதாக ஒவ்வொரு நாள் ஒவ்வொரு இடத்தில் அவதார அலங்கார நிகழ்ச்சிகள் நடத்தப்பெறும். இறுதியில் அழகர் வைகை ஆற்றைக் கடந்து திருமணத்தைக்காண வருவதற்காக ஆற்றில் கால் வைக்கும் போது, அழகருக்காகக் காத்திருந்து விட்டு காலம் கடந்ததால் மீனாட்சி சொக்கநாதர் திருமணம் முடிந்து விட்டதை அழகர் கேட்டுவிட்டு கோபித்துக் கொண்டு மீண்டும் அழகர் மலைக்கே சென்று

விடுவார். இச்செய்திகள் நிகழ்ச்சிகளாக நடத்தப்பெறும். இவற்றைக் காண்பதற்காக திரளான மக்கள் குழுமி விடுவர்.



இவ்வாறு நடைபெறும் சித்திரைத் திருவிழா பழந்தெய்வ வழிபாடாகவும், பெருந்தெய்வ வழிபாடாகவும் கலந்து விளங்கும் ஒரு நிகழ்ச்சியாக அமைகிறது. இத்திருவிழாவில் பெரும்பாலும் குழுமி இருப்பவர்கள் மதுரையைச் சுற்றியுள்ள கிராம மக்களாகவே விளங்குகின்றனர். எனவே, இதனை நாட்டுப்புற விழாவாகவும் கொள்ளலாம்.

### 10.4.3.2. வைகாசி விசாகம்

வைகாசி மாதத்தில் வரும் பௌர்ணமி நாளன்று முருகன் கோயில்களில் பூசைகளும் விழாக்களும் கொண்டாடப்படும். மயில் காவடி, பால் காவடி, பன்னீர்க்காவடி, அன்னக் காவடி முதலான காவடிகள் எடுத்துக் கொண்டு மக்கள் பாடிக் கொண்டு வருவார்கள். முருகன் திருமேனி ஊர்வலமாக எடுத்து வருவதும் உண்டு. இவ்விழாவிலும் பல ஊர் மக்களும் கலந்து கொள்வார்கள். வைகாசி மாதத்தின் பௌர்ணமி யன்றுதான் கௌதம புத்தர் பிறந்தார். அவர் ஞானம் பெற்று நிர்வாணம் அடைந்ததும் வைகாசி விசாக நாளிலேயேயாகும். தமிழ்நாட்டின் முருகன் கோயில்களில் வைகாசி விசாகம் எனப்படும் முழுநிலா நாளில் மக்கள் ஒன்றுகூடி விழாவில் கலந்துகொள்வர்.

### 10.4.3.3. ஆடி பதினெட்டு

காவிரிக் கரையோர மக்களால் கொண்டாடப்படும் திருவிழாக்களில் குறிப்பிடத்தக்கது ஆடி பதினெட்டு. ஆடி மாதம் பதினெட்டாம் நாளில் காவிரிக் கரையில் சுற்றியுள்ள கிராமங்களில் வாழும் மக்கள் அனைவரும் ஒன்று கூடுவார்கள். அன்று காவிரியில் வௌளேம் அணைதிறந்து விடப்பட பெருக்கெடுத்து ஓடும்.

மக்கள் அனைவரும் காவிரிக் கரையில் கூடுவார்கள். சிறுவர்கள் சப்பரம் இழுத்துச் செல்வர். காப்பரிசி, மஞ்சள், குங்குமம், பூ, காதோலை, கருகமணி முதலானவற்றைக் கொண்டு வருவார்கள். காவிரிக் கரையில் நடப்பட்டிருக்கும் ஒரு கல் அருகே, கொண்டு வந்த

பொருட்கள் அனைத்தையும் வைப்பார்கள். கல்லருகே மஞ்சளில் பிள்ளையார் பிடித்து வைத்து மஞ்சள் குங்குமம் வைத்து வழிபடுவார்கள். அவர்கள் அனைவரும் ஒன்று கூடி கும்மி அடித்து ஆடிப் பாடுவார்கள். பிறகு மஞ்சள் கயிற்றைப் பெரியவர்கள் சிறியவர்களுக்குக் கட்டிவிடுவார்கள்.

பிறகு காதோலை, கருகமணி, காப்பரிசி, மஞ்சள் கும்ங்குமம், வெற்றிலை பாக்கு, பூ முதலானவற்றைக் காவிரியில் விடுவார்கள். புதுமண மக்கள் கரையில் வலம் வருவார்கள். புதியதாக மணமான பெண்ணின் தாலிக்கயிறு அன்று பிரித்துப் புதுப்பிப்பார்கள். இவ்விழா காவிரி அன்னைக்கு நன்றி செலுத்திப் போற்றும் வகையில் செய்யப்படுகிறது.

### 10.4.3.4. கார்த்திகை தீபம்

கார்த்திகை மாதத்தில் முழுநிலா நாளில் இவ்விழா தமிழகம் எங்கும் கொண்டாடப்படுகிறது. வீடுகள் தோறும் அகல் விளக்கேற்றி அலங்கரிப்பார்கள். கோளத்தட்டில் செய்யப்பட்ட சொக்கட்டானை கிராம மக்கள் எரித்து மகிழ்வார்கள்.

வீட்டு வாசலிலும் தோட்டத்திலும் மாட்டுத் தொழுவத்திலும் விளக்கேற்றி வைப்பார்கள். ஒவ்வொரு ஆண்டும் குயவர் செய்யும் சிறிய மண் அகல் விளக்கை வாங்கித் திரியிட்டு ஏற்றுவார்கள். அவ்விளக்கை அடுத்த ஆண்டு வரை பாதுகாத்து வைத்து புதியதாக வாங்கிய அகலுடன் சேர்த்துக் கொள்வார்கள். நாளும் உழைத்த மக்கள் நல்லுணவு சமைத்து கொண்டாடும் விழாவாக இது அமைகிறது.

### 10.4.3.5. தைப்பூசம்

முருகனுக்கு எடுக்கப்படும் திருவிழாக்களில் தைப்பூசமும் ஒன்று. முருகன் குடிகொண்டுள்ள பழநி, திருத்தணி முதலான தலங்களில் இவ்விழா கொண்டாடப்படுகிறது. இவ்விழாவிலும் காவடிகள் எடுத்துக் கொண்டு ஆடிப்பாடி பக்தியோடு முருகன் கோயில்களுக்குக் கிராமமக்கள் வண்டி கட்டிக் கொண்டு செல்வார்கள். காவடிகளைச் செலுத்திவிட்டு கட்டுச் சோற்றை உண்ட பின்பு திருவிழாச் சந்தையில் தேவையான

பொருட்களை வாங்கிக் கொண்டு வண்டியில் தங்கள் ஊர் திரும்புவார்கள்.

தை மாதத்தைப் போன்றே ஆடி மாதத்து கிருத்திகையன்றும் காவடிகள் செலுத்தப்படும். அன்றும் மேற்கூறியவாறே சென்று வழிபடுவார்கள். இவ்விழாவில் பல ஊர்களிலிருந்து வரும் தங்கள் உறவினர்களைக் கண்டு அளவளாவி மகிழ்ந்து ஊர் திரும்புவார்கள்.

### 10.4.3.6. மாசி மகம்

மாசி மாதத்தில் வருகின்ற நட்சத்திர நாளன்று கிராம மக்கள் தங்கள் ஊரிலுள்ள இறை உருவங்களைக் கடல், ஆறு, குளம் முதலிய நீர் நிலைகளுக்கு எடுத்துச் சென்று நீராட்டிக் கொண்டு வருவார்கள். அன்று மக்கள் நீர் நிலையில் நீராடி வருவதை புனிதமாக நினைக்கின்றனர். இதன் வளர்ச்சியாகவே 12 ஆண்டுகளுக்கு ஒரு முறை கும்பகோணத்தில் கொண்டாடப்படும் மகாமகம் திருவிழா அமைகின்றது.

### 10.4.3.7. மகா சிவராத்திரி

கிராம மக்கள் மாசி மாதத்தில் வரும் அமாவாசை நாளன்று தங்கள் ஊரிலுள்ள கோயில்களில் விழா எடுக்கின்றனர். பல விதமான பயறுகள் கொண்டு சுண்டல் செய்து இறைவனுக்குப் படைத்து உண்டு மகிழ்கிறார்கள். அன்று இரவு கண்விழித்து விரதம் இருப்பதும் உண்டு. இதன் புராண வரலாறுகள் கிராம மக்களிடம் அதிகமாகப் பரவவில்லை என்றாலும் இதனைச் சுண்டல் விழாவாக நினைத்துக் கொண்டாடுகிறார்கள்.

### 10.4.3.8. பங்குனி உத்திரம்

பங்குனி மாதத்தில் வரும் முழுநிலா நாளன்று தமிழ் நாடெங்குமுள்ள கோயில்களில் விழா எடுக்கப்படுகிறது. சிறப்பாக முருகனுக்கு இவ்விழா எடுக்கப்படுகிறது. இவ்விழா நாளன்றும் காவடிகள் எடுத்து ஆடிவருவதும் நெல் காணிக்கை அளிப்பதும் கண் கொள்ளாக் காட்சியாக அமையும். நாட்டுப்புற மக்களுக்கு இதில் ஈடுபாடு அதிகம். அவரவர் வேண்டுதல்படி காவடி எடுப்பார்கள். ஒவ்வொரு ஊர்

மக்களும் வரிசையாக நின்று இந்தக் காவடிகள் பாடலோடும் ஆடலோடும் கொண்டு வருவார்கள். பல மைல் தூரம் நடந்தே வருவதும் உண்டு.

குறிப்பு

## முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

5. குடும்ப விழாக்கள் யாவை?
6. மதுவெடுப்பு விழா பற்றிக் குறிப்பு வரைக?
7. மயானக் கொள்ளை என்றால் என்ன?
8. ஆடி பதினெட்டு - குறிப்பு வரைக.

## 10.5. நாட்டுப்புறச் சடங்குகள்

அறிவியல் முன்னேற்றம், மனிதனின் சீரிய சிந்தனை இவைகளினால் மக்களின் பழக்க வழக்கங்கள் மாறிவிட்டன. இம்மாற்றம் சமுதாயத்தில் பரவி, பின் சடங்குகளாக மாறிவிடுகின்றன. இச்சடங்குகளை மனிதன் நம்பி தன் வாழ்க்கையில் பின்பற்றி வருகின்றான். சடங்குகள் நாட்டுப்புற மக்களால் பரவலாகப் பின்பற்றப்பட்டு பின் நகர்ப்புற மக்களாலும் கடைபிடிக்கப்பட்டு வருகிறது.

சடங்கு என்பது வாழ்வியல் நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டவை. சடங்குகள் நம்பிக்கையின் வளர்ச்சியாகவே விளங்குகின்றன. எக்காரியத்தைச் செய்தாலும் அவற்றை இன்னின்ன நிகழ்ச்சிகளைக் கொண்டு செய்வதும், அவற்றைச் செய்யவில்லையென்றால் தீங்கு நேரும்; வாழ்வு நலமாக இருக்காது என்று கருதுவதினால் சில செயல்களைக் காலம் காலமாகச் செய்து வருகின்றனர். இவ்வாறு செய்து வரும் செயல்களையே சடங்குகள் என்று வழங்கலாம்.

மக்கள் ஏதோ ஒரு நம்பிக்கையின் அடிப்படையில் வழிவழியாக மரபு ரீதியாக வாழ்வின் அனைத்துக் கட்டங்களிலும் செய்யப்படும் தொடர் செயல்களே சடங்குகள் என்று கொள்ளலாம். இச்சடங்குகள் பிறப்பு முதல் இறப்பு வரை எல்லாக் கால கட்டங்களிலும் நடைபெறுகின்றன. எனவே அவற்றின் அடிப்படையில் சடங்குகளைப் பிரிக்கின்றனர்.

## 10.5.1. பிறப்புச் சடங்குகள்

குழந்தை பிறக்கின்ற போதும், குழந்தை பிறந்த பிறகும் அதற்கென சில சடங்குகளை நாட்டுப்புற மக்கள் செய்கின்றனர். பிரசவ வேதனையில் துடிக்கும் ஒரு பெண்ணைத் தனி அறையில் இருக்க வைத்து மருத்துவச்சியை அழைத்து வந்து சீரகத்தால் செய்யப்பட்ட 'கசாயம்' வைத்துக் கொடுக்கின்றனர். குழந்தை பிறந்தவுடன் அழவில்லை என்றால் குழந்தையைக் கிள்ளி அழ வைப்பார்கள். முதலிரண்டு குழந்தைகள் பிறந்து இறந்து போயிருந்தால் மூன்றாவது குழந்தை ஆணாக இருந்தாலும் பெண்ணாக இருந்தாலும் மூக்குக் குத்துவார்கள். மணமாகி வெகுநாள் கழித்து குழந்தை பிறந்திருந்தால் குப்பையில் போட்டு புரட்டி குப்பன் என்றும், குப்பம்மாள் என்றும் பெயர் வைப்பார்கள்.

குழந்தை பிறக்கும்போது தொப்பில் கொடி கழுத்தில் சுற்றியபடி பிறக்கும் குழந்தையை மாலை போட்டு பிறந்தது என்று கூறி, அதனால் தாய்மாமனுக்கு ஆகாது என்று கருதி ஒரு கிண்ணத்தில் எண்ணெய் வைத்து அதில் குழந்தை முகத்தை மாமனால் பார்க்க வைப்பார்கள். மேலும் தாய்மாமனுக்குத் தீங்கு நேராமல் இருப்பதற்காக, மூன்றாம் நாள் திரைகட்டி விட்டு மூன்று முறை தாயின் தாலிக் கயிற்றில் குழந்தையை மும்முறை சுற்றி பிரசவம் பார்க்கும் மருத்துவச்சியிடம் கொடுத்து விடுவார்கள்.

இவற்றோடு நாட்டு மருந்துக் கடைகளில் கிடைக்கும் மருந்துப் பொருள்களைக் கொண்டு வந்து அரைத்து 'செலவுக் குழம்பு' செய்து தாய்க்குக் கொடுப்பார்கள். அதேபோன்று 'காரம்' எனப்படும் மருந்தை குழந்தைக்கு ஊற்றுவார்கள். குழந்தைக்குக் கண்ணேறு வராமல் இருப்பதற்காக மூன்று வீட்டுக் கூரைகளைக் கொண்டு வந்து அவற்றில் தெருவிலுள்ள மண், மிளகாய், உப்பு வைத்து திருஷ்டி சுற்றி அடுப்பில் எறிவார்கள். மிளகாய் நெடி வராமல் இருந்தால் அதிக கண்ணேறு என்று கூறுவார்கள். இதேபோன்று கற்பூரம், மஞ்சள் நீர் இவற்றால் கண்ணேறு கழிப்பதும் உண்டு. உடைந்த கொட்டாங்குச்சியால் கண்ணேறு கழிப்பதும் உண்டு.

முதல் குழந்தையோடு புகுந்த வீடு வரும் தாயைப் பார்க்கவரும் அக்கம் பக்கத்தார்களுக்கு வெற்றிலை பாக்கு, பலகாரம் கொடுப்பார்கள். பெரும்பாலும் பெரியோர்களின் பெயர்களையோ தெய்வத்தின் பெயர்களையோ குழந்தைகளுக்குச் சூட்டுவர்.

## 10.5.2. காதணி விழாச் சடங்குகள்

கிராம மக்கள் குழந்தை பிறந்து ஓரிரு வருடம் ஆனதும் காதணி விழா நடத்துகின்றனர். அச்சமயத்திலும் சில சடங்குகள் செய்கின்றனர். ஒரு சில சாதி மக்கள் காரமுள் எடுத்து காது குத்துவதும் உண்டு. ஒரு சில சாதி மக்கள் சில சடங்குகளோடு விழா எடுப்பதும் உண்டு. கட்டரிசி, பலகாரங்கள், பூமாலை, புதுத்துணி, காது குத்தும் கம்பி, வெற்றிலை, பாக்கு, தேங்காய் முதலானவற்றை வரிசையாகத் தாய் வீட்டார் கொண்டு வருவார்கள். ஏதாவது ஒரு கிணற்றடிக்குச் சென்று அங்குள்ள ஒரு மரத்திற்கு மஞ்சள், குங்குமம் வைத்து ஆட்டுக்கிடாய், கோழி பலியிட்டு குழந்தைக்கு மொட்டையடித்து ஆச்சாரியால் குழந்தைக்குக் காது குத்துவார்கள்.

## 10.5.3. பூப்புனித நீராட்டுச் சடங்குகள்

ஒரு பெண் பூப்படைந்ததும் தனியிடத்தில் இருக்க வைத்து உறவினர்களுக்குச் சொல்லி அனுப்புவார்கள். பிறகு அக்கம் பக்கத்துப் பெண்களுக்கும் உறவினர்களுக்கும் மஞ்சள், குங்குமம், பூ, வெற்றிலை, பாக்கு, பழம் கொடுப்பார்கள். அப்பெண்கள் மஞ்சள் பூசி பூ வைத்துக் கொண்ட பிறகு, சுமங்கலிகள் ஐவர் மஞ்சள், குங்குமம், பூ வைக்கப்பட்ட ஐந்து குடங்களிலுள்ள தண்ணீரை ஒரு உலக்கையின் மேல் பருவமடைந்த பெண்களை உட்கார வைத்து நீரினைத் தலைக்கு ஊற்றுவார்கள். பிறகு புத்தாடை அணிவித்து முறை மாமனால் கட்டப்பட்ட தென்னை ஓலை, நாவல் இலை, அரச இலை இவற்றாலான குடிசையில் இருக்க வைப்பார்கள். தனியாகத் தட்டு, டம்ளர் கொடுத்து தினமும் விருந்து சமைத்துக் கொடுப்பார்கள். உறவினர்கள் விருந்து சமைத்து எடுத்து வருவார்கள்.

தினமும் பெண்ணிற்குப் புத்தாடைகள், அணிமணிகள் அலங்காரம் செய்து உளுந்து, நல்லெண்ணெய், வாழைப்பழம் இவற்றைத் தினமும் வெறும் வயிற்றுக்குக் கொடுப்பார்கள். ஒவ்வொரு நாள் காலை விடியலிலும் குடிசையிலுள்ள ஒரு குச்சியை எடுத்து விடுவார்கள். பிறகு பதினாறாவது நாள் ஒரு சல்லடையில் பொங்கிய சாதம், ஒரு தட்டில் விட்டு, எண்ணெய் ஊற்றிய மாவிளக்கு, ஆலநீர், பூமாலை, கற்பூரம், தேங்காய் வைப்பார்கள். நெல் போட்டு அதன் மேல் மணை வைத்து அதற்கும் மேல் துணி விரித்து பெண்ணை உட்கார வைப்பார்கள். பிறகு மாமன் மனைவியோ, அண்ணியோ மாவிளக்கை எடுத்து மூன்று முறை சுற்றி விட்டு, எண்ணெய் குடித்து விட்டு, பூப்பெய்திய பெண்ணின் முதுகில் மூன்று முறை அடித்து விட்டு வைப்பார்கள். பிறகு பெண்ணிற்கு ஆலநீர் சுற்றுவார்கள். தொடர்ந்து பெண்ணிற்கு புத்தாடை கொடுத்து அலங்கரித்து விருந்து வைப்பார்கள். மாவிளக்கோடு பிட்டினையும் ஏற்றி இறக்கி, நிகழ்ச்சிக்கு வந்தவர்களுக்குக் கொடுப்பார்கள்.

## 10.5.4. திருமணச் சடங்குகள்

கிராம மக்கள் பெண்ணைப் பார்த்து நிச்சயம் பேசி முடித்து பரிசம் போட்ட பிறகும் திருமண நாள் நிச்சயிக்கப்பட்ட பிறகும் சில சடங்குகளைச் செய்கின்றனர். திருமணத்திற்கு முதல் நாள் பெண் அழைப்போ அல்லது மாப்பிள்ளை அழைப்போ நடைபெறும். மறுநாள் காலை வீட்டின் முன்பு ஒதியமரக் கொம்பு அல்லது அரசமரக் கொம்பினை நடுவார்கள். இதனை ‘அரசாணைக்கால்’ என்பர். பிறகு குயவர் வீட்டில் இருந்து ‘கூரைச்சேலைப் பானை’ எனப்படும் கோலம் வரையப்பட்ட புதுப்பானையைக் கொண்டு வந்து அரசாணைக்கால் அருகே வைப்பார்கள். பிறகு பெண்ணிற்கு நலங்கு வைத்து அலங்காரம் செய்த பிறகு, திருமணம் நடைபெறும். தாலிகட்டி முடிந்ததும் பெரியோர் காலில் விழுந்து வணங்கிய பிறகு மணமேடையில் வைக்கப்பட்டிருக்கும் நவதானியங்களைக் கிணற்றடிக்கு எடுத்துச் செல்வார்கள். அங்குப் பாத்தி கட்டி, கற்பூரம் ஏற்றி, தேங்காய் உடைத்து விதை விதைப்பர். அன்று மாலை பெண் வீட்டிலிருந்து சீர்வரிசையோடு மணமக்கள் அனுப்பி வைப்பார்கள். அதற்கு முன் மாப்பிள்ளை கோபித்துக் கொண்டு செல்வது

போலவும் மணப்பெண் வீட்டார் மேளதாளத்தோடு சென்று குடை பிடித்து அழைத்து வருவதாகவும் சடங்கு செய்கின்றனர். திருமணமான மூன்றாவது மாதம் பெண் வீட்டார் மணமக்களை அழைத்து வந்து விருந்து வைத்து அனுப்புவது வழக்கமாக உள்ளது.

## 10.5.5. வளைகாப்புச் சடங்குகள்

பெண்கள் மகப்பேறு அடையும் காலத்தில் தலைப்பிள்ளை பிறக்கும் முன்பு வளைகாப்புச் சடங்கு செய்வர். பெண் கருவுற்று ஒன்பதாவது மாதம் ஒன்பது படி அரிசியும், ஒன்பது வகையான காய்கறியும், வெல்லம் உடைந்த கட்டி, உடையாத கட்டி, கவுந்த கட்டி, அவுராத கட்டி, கொழுக்கட்டை, பணியாரம், முறுக்கு, கட்டரிசி, ஒன்பது வகையான பழங்கள், சடைப்பூ, மஞ்சள், வளையல், பூமாலை இவற்றை ஒரு புது மூங்கில் அல்லது பிரம்புக் கூடை அல்லது ஈச்சங்க கூடையில் வைத்து மஞ்சள் துணியால் கட்டி எடுத்து வருவர்.

மாப்பிள்ளை வீட்டிற்குச் சென்று அவற்றைப் பதினொரு தட்டுகளில் வைத்து, பெண்ணிற்கு நலங்கு வைத்து, புத்தாடை அணியக் கொடுப்பார்கள். பிறகு சுமங்கலிப் பெண்கள் பெண்ணிற்கு வளையல் அணிவிப்பார்கள். அதன்பிறகு பெண்ணை, மஞ்சள் குங்குமம், பூ வைக்கப்பட்ட மூன்று குடமருகே அழைத்துச் செல்வார்கள். அங்கு உலக்கையின்மேல் கவிழ்த்து வைக்கப்பட்டுள்ள தட்டினை உதைக்கச் செய்வார்கள். அதாவது, நீருள்ள குடத்தை இரண்டு கைகளாலும் பிடித்துக் கொள்ளச் செய்து காலால் உதைக்கச் செய்வார்கள். அவ்வாறு செய்யும்போது அக்கூடை நிமிர்ந்து கொள்ளும், பிறகு பெண்ணை குடங்களைப் பிடித்திருக்கும்படி செய்து அவளது முதுகில் ஒரு ரூபாய்க் காசினை வைத்து இளநீர் விட்டு வழித்து எடுப்பார்கள். இவ்வாறு மூன்று பெண்கள் செய்வார்கள். இதனை 'முதுகுநீர் குத்துதல்' என்று கூறுவர். விருந்து முடிந்ததும் மறுநாள் பெண்ணைத் தாய்வீட்டிற்கு அழைத்துச் செல்வார்கள்.

## 10.5.6. இறப்புச் சடங்குகள்

மண்ணில் பிறக்கும் மக்கள் அனைவரும் இறத்தல் உறுதி என்னும் மனித தத்துவத்தைக் கிராம மக்கள் அறிந்திருந்தாலும்

அவர்களை இறுதியாக வழி அனுப்பி வைக்கும் நோக்கத்தில் சில சடங்குகளைச் செய்கின்றனர். ஒருவர் இறந்த உடன் உறவினர்களுக்குச் சொல்லி அனுப்புவார்கள். காலிலுள்ள இரண்டு பெருவிரல்களையும் துணியால் சேர்த்துக் கட்டி, கண்களை மூடி அதன்மேல் இரண்டு காசை வைப்பர். சுமங்கலியாக இருந்தால் மஞ்சள் பூசி குங்குமம் வைப்பர். விதவைகள் எனில் விபூதியும் பூசுகின்றனர்.

வீட்டைச் சுற்றியுள்ளவர்கள் காப்பி கொண்டு வந்து இறந்துபோன உறவினர்களுக்குக் கொடுப்பர். வருபவர்கள் அவர்களைக் கட்டிப் பிடித்து ஒப்பாரி வைப்பர். பிறகு ஒரு புதுப்பானையில், பங்காளி முறைப்பெண் குளித்துவிட்டுச் சோறு பொங்குவாள். இதனை ‘பிண்டச்சோறு’ என்பர்.

இறந்தவரின் தலைப்பகுதிக்கருகே விளக்கும் ஊதுவத்தியும் வைப்பர். அதனருகே தாம்பாளத்தட்டில் அரிசியைக் கொட்டி வைப்பர். ஆண் இறந்தாலும், பெண் இறந்தாலும் தாய்வீட்டார் புதுத்துணி, மாலை, தேங்காய், குங்குமம், நூல், சீப்பு, அவல், கடலை, வெற்றிலை, பாக்கு கொண்டு வருவது வழக்கம். இதற்குத் ‘தாய்வீட்டுக் கொடி’ என்று பெயர்.

பிணம் இரவு தங்க நேர்ந்தால், இரவு முழுவதும் அனைவரும் விழித்து இருப்பர். பறை மேளம் அடிப்பதும், பஜனை வைப்பதும் உண்டு. பிறகு பிணத்தினைக் கழுவி எண்ணெய், சீயக்காய் தேய்த்துக் குளிப்பாட்டி, புதுத்துணியைப் போட்டு, மாலை, பூ இவற்றால் மூடுவர்.

தாய்க்குத் தலைமகனும், தந்தைக்கு கடைசி மகனும் கொள்ளி போடுவர். அதாவது மகன் மீது தண்ணீர் ஊற்றி, புதுத்துணியை இடுப்பில் கட்டி, ஒரு மரக்காலில் நெல் வைத்து, அதில் விளக்கு, வத்தி ஏற்றிவைத்து பிணத்தை மூன்று முறை சுற்றி வருவர். இதன் பிறகு பாடைகட்டி எடுத்துச் செல்வர்.

வண்ணார் நடைபாவாடை போடுவர். தேர்கட்டி அதில் கோழிக் குஞ்சியைக் கட்டி எடுத்துச் செல்வர். இறந்தவர் வீட்டினைச் சுத்தம் செய்து நடுவீட்டில் விளக்கு வைத்து இருப்பர். வாசலில் சாணமும் பக்கத்தில் நீரும் வைப்பர். பிணத்தைப் புதைத்துவிட்டு வருபவர்கள்

சாணத்தில் மும்முறை கைவைத்து, நீரில் நனைப்பர். விளக்கினைத் தொட்டு வணங்கிய பிறகு வீடு செல்வர்.



இறந்தவர் வீட்டுக்கு அக்கம் பக்கத்தார் சோறு கொண்டு வந்து வைத்துச் செல்வர். இரண்டாவது நாள் பால் வைப்பர். பதினாறாவது நாள் கருமாதி செய்வர். உறவினர்கள் புதுவேட்டி, புடவை கொண்டு வந்து கொடுத்துவிட்டுச் செல்வதும் உண்டு. வயதானவர்கள் இறந்தால் அன்றிரவு தெருக்கூத்து வைப்பதும் உண்டு.

## முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

9. காதணி விழாச் சடங்கு பற்றிக் கூறுக.
10. அரசாணைக்கால் என்றால் என்ன?
11. முதுகுநீர் குத்தல் என்றால் என்ன?
12. பிண்டச்சோறு என்றால் என்ன?

## 10.6. தொகுத்துக் காண்போம்

- நாட்டுப்புற மக்களிடைய காணப்படும் நம்பிக்கைகள் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- நாட்டுப்புற மக்களின் அன்றாட வாழ்வில் நிகழக்கூடிய செயற்பாடுகளில் நம்பிக்கைக் கூறுகள் எவ்வாறு சிறப்புப்பெற்றுள்ளது என்பது பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- நாட்டுப்புற மக்கள் கொண்டாடும் விழாக்கள் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- பெருவிழாக்களையும் நாட்டுப்புற மக்கள் நாட்டுப்புற விழாவாகக் கொண்டாடும் தன்மைகள் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- மாதந்தோறும் கொண்டாடும் விழாக்கள் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- மக்களிடம் காணப்படும் நம்பிக்கை சார்ந்த சடங்குகள் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- பிறப்பு முதல் இறப்பு வரையிலான ஆறு நிலைகளில் கடைபிடிக்கப்படும் சடங்குகள் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.

## 10.7.முன்னேற்றத்தைச் சோதிக்கும் வினாக்களுக்கான விடைகள்

குறிப்பு

| | | | |
|---|---|---|---|
| 1. | 10.3.3. | 2. | 10.3.3.1.3. |
| 3. | 10.3.3.3. | 4. | 10.3.3.5. |
| 5. | 10..4.1. | 6. | 10.4.2.1. |
| 7. | 10.4.2.4. | 8. | 10.4.3.3. |
| 9. | 10.5.2. | 10. | 10.5.4. |
| 11. | 10.5.5. | 12. | 10.5.6. |

## 10.8. பாடம் பயின்றபின் செய்யும் பயிற்சிகள்

1. மனிதர் சார்ந்த நம்பிக்கைகள் பற்றிக் கட்டுரை வரைக.
2. விலங்கு மற்றும் பறவை சார்ந்த நம்பிக்கைகள் முறையே ஐந்தைந்து கூறுக.
3. கனவு மற்றும் சகுனம் குறித்த நம்பிக்கைள் பத்தினைக் குறிப்பிடுக.
4. நாட்டுப்புற மக்கள் கொண்டாடும் சமுதாய விழாக்கள் இரண்டினை விளக்குக.
5. நாட்டுப்புற மக்களின் மாத விழாக்கள் இரண்டினை விளக்குக.
6. நாட்டுப்புறச் சடங்குகளின் வகைகள் யாவை? அவற்றில் இரண்டினை விளக்குக.

## 10.9. மேலும் பயில்வதற்கான நூல்கள்

1. க. காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, இரண்டாம் பதிப்பு 2003.

# கூறு 11. விளையாட்டுக்கள்-வட்டாரச்சொற்கள்

குறிப்பு

## 11.1. முன்னுரை

நாட்டுப்புற மக்களின் நாகரிகத்தோடும் பண்பாட்டோடும் விளங்குவது நாட்டுப்புற விளையாட்டுக்கள். விளையாட்டை மனமகிழ்ச்சி ஊட்டும் செயல் என்பர். விளையாட்டு என்பது வெளித்தூண்டல்களின்றி, மகிழ்ச்சியூட்டும் செயல்களில் இயற்கையாக ஈடுபடுவதாகும். வாழ்க்கைக்குப் பயிற்சியளிக்கும் களமாக அமைவது விளையாட்டு. தமிழ் மொழி பேச்சு வழக்கில் இடம் சார்ந்து அல்லது சமூகம் சார்ந்து அல்லது தொழில் சார்ந்து வழங்கும் சொற்கள் வட்டார மொழிச் சொற்கள் ஆகும். நாட்டுப்புற விளையாட்டுகள் பற்றியும், வட்டார வழக்குச் சொற்கள் பற்றியும் இங்குப் பாடப்பகுதியாக அமைந்துள்ளது.

## 11.2. குறிக்கோள்கள்

- நாட்டுப்புறத்தில் விளையாடப்படும் விளையாட்டுக்கள் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- நாட்டுப்புறத்தில் நாட்டுப்புற மக்களால் வழங்கப்படும் வழக்குச் சொற்கள் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.

## 11.3. நாட்டுப்புற விளையாட்டுக்கள்

தமிழக நாட்டுப்புற மக்களின் வாழ்வியல் கூறுகளில் விளையாட்டுக்களும் ஒன்று. ஓய்வு நேரங்களிலும், அறுவடை முடிந்த பருவங்களிலும், இரவு நேரங்களிலும், கிராம மக்கள் பெரும்பாலும் விளையாடுகின்றனர். மற்றவர்களின் தூண்டுதலே இல்லாமல் போட்டியில்லாமல் கூடி மகிழும் நிலையாகவே நாட்டுப்புற விளையாட்டுக்கள் அமைகின்றன. விளையாட்டை மனமகிழ்ச்சியூட்டும் செயல் என்பர். அவ்விளையாட்டு பொழுது போக்கிற்காக மட்டுமன்றி உடல் நலம், மன நலம் பேணுவதாகவும் உள்ளது. பொழுது நோக்கு நிலைக்காகத் தொடங்கப்பட்டு, மனமகிழ்ச்சியூட்டும் நிலைக்கு மாறிய செயல் வடிவங்களே விளையாட்டு என்று கூறலாம். அதாவது, உடல்திறன், செயல்திறன், உள்ளத்திறன் இவற்றின் அடிப்படையில்

அவற்றின் வெளிப்பாடுகளாக அமைந்து, அவ்வெளிப்பாட்டினால் மனமகிழும்படியான செயல்களே விளையாட்டு ஆகிறது. பொதுவாக விளையாட்டைப் பொழுதுபோக்கு விளையாட்டு, மனமகிழ்ச்சி விளையாட்டு, உடல்திறன் மற்றும் உள்ளத்திறன் விளையாட்டு, செயல்பாடு விளையாட்டு, ஒழுங்குமுறை விளையாட்டு, போட்டி விளையாட்டு, பந்தய விளையாட்டு என்று வரிசைப்படுத்திக் கொள்ளலாம். என்றாலும் சிறுவர்-சிறுமியர் விளையாட்டு, பெரியவர் விளையாட்டு, சமூக விளையாட்டு, பொழுதுபோக்கு விளையாட்டு என்ற நான்கு வகைக்குள் நாட்டுப்புற விளையாட்டுக்களை உள்ளடக்குவர்.

### 11.3.1. சிறுவர்-சிறுமியர் விளையாட்டுக்கள்

நாட்டுப்புற விளையாட்டுக்களில் பெரும்பாலான சிறுவர் சிறுமியர் விளையாட்டுக்களாகவே அமைந்துள்ளன. இங்கே ஐந்து வயதிலிருந்து பதினைந்து வயது வரையிலுள்ள சிறுவர் சிறுமியர்கள் கூட்டமாகச் சேர்ந்து விளையாடும் விளையாட்டுக்கள் சிறுவர் சிறுமியர் விளையாட்டு என்று கூறப்படும். அதாவது சிறுவர்கள் மட்டும் தனியாகவோ, சிறுமியர்கள் மட்டும் தனியாகவோ விளையாடுவது வழக்கம். சில நேரங்களில் சிறுவர் சிறுமியர் இணைந்து விளையாடுவதும் உண்டு. எனவே சிறுவர் சிறுமியர்க்குப் பொதுவான விளையாட்டு சிறுவர் சிறுமியர் விளையாட்டு என்று கூறப்படும். கிராமியச் சிறுவர் சிறுமியர் பல விளையாட்டுக்களை விளையாடுகின்றனர். அவற்றுள் சிலவற்றை மட்டும் இங்குக் காணலாம்.

#### 11.3.1.1. கிட்டிப்புள்ளு (கில்லி)

கிட்டிபுள்ளு எனும் விளையாட்டானது கிட்டி தக்கா, கில்லி தாண்டா, குச்சிக் கம்பு, சிங்காங் குச்சி, குச்சி அடித்தல் எனப் பல பெயர்களில் அழைக்கப்படுகிறது. சிறுவர்கள், சிறுமியர்கள் என அனைவரும் இவ்விளையாட்டினை விளையாடுவார்கள். இவ்விளையாட்டினை விளையாடுவதற்குக் கிட்டிபுள், கிட்டிகோள் என இரு கருவிகளைக் கொண்டு விளையாடுவார்கள். கிட்டிபுள் எனப்படும் குச்சியானது சுமார் மூன்றுவிரல் கொண்ட பருமனில் 20 சென்டி மீட்டர் நீளம் கொண்டது. இதன் இரு முனைகளும் கூராக இருக்க வேண்டும். கிட்டிக் கோளானது ஒருவிரல் பருமனும் சுமார் 50

சென்டி மீட்டர் நீளமும் இருக்க வேண்டும். விளையாடுவதற்கு ஏற்ற குச்சியாக வலுவான மரத்திலில் இருந்து வெட்டப்பட்ட குச்சியின் கிளைகளை வைத்தே விளையாடலாம். ஆனால் குச்சியானது அடிக்கும்போது உடையாமல் திடமானதாக இருக்கவேண்டும். இவ்விளையாட்டை இரண்டு விதமாக விளையாடலாம்.

மண் தரையில் ஒரு சிறிய குழியைத் தோண்டி அதன்மேல் புள்ளுகுச்சியை வைக்கவேண்டும். பின்னர் கிட்டிகுச்சியை புள்ளுக் குச்சிக்கு அடியில் இருக்குமாறு வைத்து தூக்கி அடிக்க வேண்டும். அடிக்கப்பட்ட புள்ளுக் குச்சியை குழுவில் உள்ள மற்றவர்கள் துணியாலோ அல்லது கைகளாலோ பிடிக்க வேண்டும். இதுவொரு முறை.

மற்றொன்று, மண் தரையில் ஒரு சிறிய குழியைத் தோண்டி அதன்மேல் புள்ளுக் குச்சியை வைக்க வேண்டும். பின்னர் விளையாடும் நபர் இரண்டு கால்களையும் விரித்து குழியானது கால்களுக்கு இடையில் இருக்குமாறு சரிபார்த்துக் கொள்ள வேண்டும். பின்னர் கீழே குனிந்து கிட்டிக் குச்சியைப் புள்ளுக் குச்சிக்கு அடியில் இருக்குமாறு வைத்து விரித்த கால்களுக்கு இடையில் உள்ள இடைவெளியின் வழியாக தூக்கி வீச வேண்டும். அதனைக் குழுவில் உள்ளவர்கள் துணியாலோ அல்லது கைகளாலோ பிடிக்க வேண்டும். புள்ளுக் குச்சியைப் பிடித்துவிட்டால் விளையாடிய நபர் வெளியேறி அடுத்த நபர் ஆட்டத்தைத் தொடர வேண்டும். இவ்விளையாட்டை இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நபர்கள் விளையாடலாம்.

## 11.3.1.2. நொண்டி விளையாட்டு

நாம் நம் பண்டைய விளையாட்டுக்களை முற்றிலும் மறந்து விட்டோம். அவற்றில் ஒன்றுதான் நொண்டி விளையாட்டு. ஒற்றைக் காலில் தவ்வி நடப்பது நொண்டி. ஓடுபவர்களை நொண்டி அடித்துத் தொடுவது நொண்டி விளையாட்டு. இது குழந்தைகளுக்கு நல்ல உடற்பயிற்சி ஆகும். நொண்டி விளையாட்டு குழந்தைகளின் உடலுக்கு ஒரு புத்துணர்ச்சியை அளித்து, அவர்களின் சோம்பேறித் தனத்தைக் குறைக்கிறது. இது கால்களுக்கு இடையே ரத்த ஓட்டத்தை அதிகப்படுத்துகிறது. இழப்பில் ஈடுகட்டும் ஆற்றலைத் தருவதோடு,

குறிப்பு

தன்னம்பிக்கையையும் அதிகரிக்கிறது. நொண்டி விளையாட்டிற்கு இத்தனை பேர் விளையாட வேண்டும் என்ற வரைமுறை எதுவும் இல்லை. இதில் எத்தனை பேர் வேண்டுமானாலும் கலந்துக்கொள்ளலாம்.

வட்டம் அல்லது சதுரம், இதில் ஏதேனும் ஒன்றை போட்டுக் கொள்ளவேண்டும் விளையாட்டில் கலந்துக் கொண்டவர்கள் குறிப்பிட்ட எல்லைக்குள் ஓடவேண்டும். அவர்களை ஒருவர் நொண்டி அடித்துச் சென்று தொட வேண்டும். நொண்டி அடித்துச் செல்பவரின் கால் வலித்தால் குறிப்பிட்ட எல்லைக்குள் (காலை வைத்து) போடப்பட்டிருக்கும் சிறு வட்டத்தினுல் நின்று கொள்ளலாம். வட்டத்தைத் தவிர மற்ற பகுதியில் காலை ஊன்றக் கூடாது. நொண்டி அடித்துச் செல்பவர் ஒருவரைத் தொட்டால், தொடப்பட்டவர் ஆட்டத்திலிருந்து வெளியேற வேண்டும். குறிப்பிட்ட எல்லைக்குள் காலை ஊன்றினால் அதற்கு முன் தொடப்பட்டவர் உள்ளே மீண்டும் வந்து ஓடும் வாய்ப்பைப் பெறுவார். இவ்வாறு நொண்டி விளையாட்டு தொடரும்.

### 11.3.1.3. பம்பர விளையாட்டு

பம்பர விளையாட்டிற்கு இத்தனை பேர்தான் விளையாட வேண்டும் என்று வரைமுறையில்லை. இதில் எத்தனை பேர் வேண்டுமானாலும் கலந்துக்கொள்ளலாம். முதலில் ஒரு வட்டம் போட்டுக் கொள்ளவேண்டும். அந்த வட்டத்தைச் சுற்றி நின்று பம்பரத்தையும் சாட்டையையும் சுற்றுவதற்குத் தயாராக வைத்துக் கொள்ளவேண்டும். பிறகு ஒன்-டு-த்ரி சொல்லியவுடன் அனைவரும் பம்பரத்தைச் சாட்டையால் சுற்றிக் கொண்டு வட்டத்திற்குள் பம்பரத்தைச் சுழலவிட வேண்டும்.

பின்பு, சாட்டையைப் பயன்படுத்தி பம்பரக் கட்டையை மேல் எடுக்க வேண்டும். அவ்வாறு எடுக்க முடியாதவர்களின் பம்பரங்களை வட்டத்தின் உள்ளே வைக்கவேண்டும். வெளியே உள்ளவர்கள் வட்டத்திலிருக்கும் பம்பரத்தைத் தங்கள் பம்பரத்தைப் பயன்படுத்தி வெளியே எடுக்க வேண்டும். அவ்வாறு பம்பரத்தை வட்டத்தினுள் விடும்போது, பம்பரம் இல்லாதவர் அந்தப் பம்பரத்தைப் பிடித்துவிட்டால் அந்தப் பம்பரமும் வட்டத்தினுள் வந்துவிடும். சுழற்றுபவரின் பம்பரம் சுழலவில்லை எனிலும் அந்தப் பம்பரமும் வட்டத்தினுள் வைக்கப்படும்.

வட்டத்தில் உள்ள அனைத்துப் பம்பரங்களும் வெளியே வந்துவிட்டால் மீண்டும் ஆட்டத்தைத் துவங்கவேண்டும்.



### 11.3.1.4. உப்புக்கோடு

உத்தி பிரித்தல் மூலம் இரண்டு அணிகள் பிரிக்கப்படும். செவ்வக வடிவில் நீளமாக கோடு கிழிக்கப்படும். நடுவில் ஒரு கோடும், இடையில் ஒரு ஆள் நின்று கை நீட்டி தொட முடியாத அளவுக்கு இடைக்கோடுகளும் போட்டுக் கொள்வர். தொடங்கும் அணியின் தலைவர் முதல் கோட்டில் நிற்பார். மற்றவர்கள் அடுத்தடுத்த கோட்டில் நிற்பார்கள். எதிரணியினர் இவர்கள் அனைவரையும் ஏமாற்றி கோட்டைக் கடந்து வெளியில் செல்லவேண்டும். முதல் கோட்டில் இருப்பவருக்கு நடுக்கோட்டில் ஓடி எதிராளியை அவுட் செய்யவும் அதிகாரம் உண்டு. இவரது கவனத்தைத் திருப்ப, மற்றொரு கட்டத்தில் நிற்பவர், நடுக்கோட்டில் கால் வைத்து தண்ணி தண்ணி என்று அழைப்பார். இவர் அவரைத் தொட ஓடவேண்டும். யாராவது ஒருவரைத் தொட்டாலும் ஆட்டம் முடிந்துவிடும். முதலில் கோடுகளைக் கடந்து வெளியேறும் ஒருவர் கைப்பிடி மண்ணை அள்ளிக் கொண்டு, உப்பு என்று சத்தமிட்டபடி ஒவ்வொரு கட்டத்திலும் நிற்கும் தம் அணியினரைத் தொட்டு திரும்பவும் கோட்டைக் கடந்து முகப்புக்கு வரவேண்டும்.

### 11.3.1.5. மெல்ல வந்து கிள்ளிப்போ

இரண்டு அணியினர் எதிரெதிரே அமர்ந்திருப்பார்கள். இரு அணித்தலைவர்களும் தங்கள் அணியினருக்கு ஒவ்வொரு பெயர் வைப்பார்கள். பழத்தின் பெயர், பூவின் பெயர், சினிமாவின் பெயர் என எதுவாக இருந்தாலும் ஒரே மாதிரி இருக்கவேண்டும். பின்னர் எதிர் அணியில் உள்ள ஒருவரின் கண்களை இறுக மூடிக்கொண்டு தம் அணிக்கு வைத்த ஒரு பெயரைச் சொல்லி அழைப்பார் (உதாரணத்துக்கு,… ‘ரோஜாப்பூவே ரோஜாப்பூவே மெல்ல வந்து கிள்ளிப்போ’). ரோஜாப்பூ சத்த மில்லாமல் வந்து கிள்ளிவிட்டு சாதாரணமாக அமர்ந்துவிடும். பின், எல்லோரும் தலையை வெட்டி நாய்க்குப் போடுங்க என்று ஆணையிடுவார். எல்லோரும் கீழே குனிந்துக் கொள்வார்கள். அதன் பிறகு கண்களைத் திறந்து விடுவார். இப்போது கிள்ளு வாங்கியவர் ரோஜாப்பூ யாரென கண்டு பிடிக்கவேண்டும்.

## 11.3.1.6. கள்ளன் வாரான் களவாணி வாரான்

மொத்தப் பிள்ளைகளில் பெரியவர்களாக இருவர் தேர்வு செய்யப்படுவார்கள். இவர்கள்தான் விளையாடப் போகும் வீரர்கள். மற்ற அனைவரும் ஒரே வரிசையில் கீழே சம்மணமிட்டு அமர்ந்து கொள்வார்கள். எல்லோரும் கைகளைப் பின்னால் வைத்திருப்பார்கள். வீரர்களில் ஒருவர் முன்னால் நிற்பார். மற்றவர், கையில் ஒரு கல்லை எடுத்துக் கொண்டு,

*'காயே கடுப்பங்கா*
*கஞ்சி ஊத்தி நெல்லிக்கா*
*உப்பே புளியங்கா*
*ஊற வச்ச நெல்லிக்கா*
*கல்லன் வாரான் காரைக்குடி*
*கல்லை நீயும் கண்டுபிடி'*

என்று பாடியபடி ஒவ்வொருவருடைய கையிலும் கல்லை வைப்பதுபோல பாவ்லா காட்டி யாராவது ஒருவரின் கையில் வைத்து விடுவார். வைத்தபின் எல்லாரும் தலையை வெட்டி நாய்க்குப் போடுங்க என்பார். எல்லோரும் குனிந்து கொள்ள, யாருடைய கையில் கல் இருக்கிறது என்பதை எதிரில் நிற்பவர் கண்டு பிடிக்க வேண்டும். இல்லாவிட்டால் கல்லை வைத்தவருக்கு ஒரு மதிப்பெண்.

## 11.3.1.7. பூப்பறிக்க வருகிறோம்

இரண்டு குழுவினர் எதிரெதிர் திசையில் நிற்பார்கள். ஒருவரோடு ஒருவர் கைகோர்த்தபடி எதிர் அணியினரை நோக்கி குதித்தபடி பாட்டு பாடி வருவார்கள். இரு அணியிலும் சமமான பிள்ளைகள் இருக்க வேண்டும்.

*'பூப்பறிக்க வருகிறோம் வருகிறோம்*
*எந்த மாதம் வருகிறீர் வருகிறீர்*
*டிசம்பர் மாதம் வருகிறோம் வருகிறோம்*
*யாரைத்தேடி வருகிறீர்*
*பூவைத் தேடி வருகிறோம்*
*எந்தப் பூவை தேடுவீர்*

*மல்லிகையை தேடுவோம்'*

இப்படி பாடியதும் 'மல்லிகை' என்று பெயர் வைத்த பெண்ணைப் பிடித்து இழுப்பார்கள். அந்த பெண் அந்தப் பக்கம் சென்றுவிடாமல் இந்த அணி இழுக்க ஆட்டம் ஒரே குஷியாக இருக்கும்.

குறிப்பு

## 11.3.1.8. கழங்கு

பெண்கள் வட்டமாக அமர்ந்து ஆடும் விளையாட்டு. வட்ட வடிவிலான 7 கூழாங்கற்கள். மேலே தூக்கிப் போட்டு கீழே இருப்பவற்றையும் சேர்த்து அள்ள வேண்டும். ஒன்றான், இரண்டான், மூன்றான் என அள்ள வேண்டிய கற்களின் எண்ணிக்கை அதிகரிக்கும். எல்லாவற்றையும் சரியாக விளையாடியவர்கள் இறுதியில் பழம் வைப்பார்கள். ஒவ்வொரு காய் ஆடும் போதும் ஒவ்வொரு பாட்டு உண்டு!

*ஒன்றான்: அலசல் அலசல் பாட்டிமா*
*தொட்டுட்டேன் தொடங்கிட்டேன்*
*தொட்டில் மஞ்சள் அரச்சிட்டேன்*
*அரச்ச மஞ்சளைப் பூசிட்டேன்*
*அம்மி யிடுக்குல படுத்திட்டேன்*
*படுத்த பாயில சுருட்டிட்டேன்*
*ரெண்டான்: ஈரெண்டு எடுக்கவும்*
*இளந்தம் பழுக்கவும்*
*பழுத்து தின்னவும்*
*மூன்றான்: முக்குட்டு சிக்குட்டு*
*மூன்றாம் படிக்கட்டு*
*நான்காம்: நாக்கொத்தி செங்கொத்தி*
*நாகம்பழங் கொத்தி*
*அஞ்சான்: ஐப்பால் அரங்கு*
*பம்பாய் சிலுக்கு*
*ஆறாம்: ஆக்கூர் முறுக்கு*
*அள்ளிப்போட்டு நொறுக்கு*
*ஏழாம்: ஏழதாள எங்கநீ போற*
*எட்டாம் நம்பர் சேல…*

என்று தொடர்ந்துக்கொண்டே செல்லும்.

## 11.3.1.9. கண்கட்டி விளையாட்டு

கூட்டமாகக் கூடி நின்று மூன்று பேராக கையைப் போடுவார்கள். அவர்களின் தனிப்பட்ட தோற்றத்தில் கையைப் போடுபவர் போய்விடுவர். பிறகு மற்றொருவர் வந்து கையைப் போடுவர். இறுதியில் ஒருவர் தனியாக நிற்பார். அவர் கண்ணைத் துணியால் கட்டி விடுவார்கள். எல்லோரும் கிண்டல் செய்து கொண்டு ஓடுவார்கள். கண்கட்டியவர் பிடிக்க வேண்டும். இவ்வாறு விளையாடும் விளையாட்டு கண்கட்டி விளையாட்டு எனப்படும். இதனைக் கண்ணாமூச்சி விளையாட்டு என்றும் அழைப்பார்கள்.

குறிப்பு

## 11.3.1.10. காத்தாடி விடுதல்

பனை ஓலையை எடுத்து சிறு துண்டுகளாக்கிக் காரமுள் அல்லது வேலமுள் கொண்டு வட்டமாக வைத்துக் குத்துவார்கள். பிறகு அந்த முள்ளின் மறுமுனையில் சோளத்தண்டு அல்லது கம்பந்தட்டினைச் சொருகுவார்கள். அதைப் பிடித்துக் கொண்டு காற்று அடிக்கும் பக்கம் ஓட வேண்டும். அவ்வாறு ஓடும்போது அழகாகச் சுற்றும். இவ்வாறு கூட்டமாக ஓடுவதும் உண்டு. இதனைக் காத்தாடி விடுதல் என்பர். இதிலேயே ஒத்தக் காத்தாடி, இரட்டைக் காத்தாடி என்றும் உண்டு.

இப்படிக் கொண்டாட்டமும் நட்புணர்வும் நம்பிக்கையும் தவழும் நூற்றுக்கணக்கான விளையாட்டுகள் நம் கிராமங்களில் உண்டு. பல்லாங்குழி, தாயம், நாடு பிடித்தல், ஆடுபுலி யாட்டம், கொலகொலயா முந்திரிக்கா, டிக்டிக், கண்ணாமூச்சி, நாலுமூலை, ஊதுகாய், கிட்டிப்புள், பளிங்கி, நொண்டியாட்டம், ஐஸ்பால், பச்சகுதிரை, குளம்கரை, சின்னப்பானை-பெரியபானை, பரமபதம், கரகரவண்டி, கவன், ராஜாராணி, செதுக்கு சில்லு, கல்லா மண்ணா, நூத்துக் குச்சி, பூப்பந்து எறிதல் என மூளைக்கும் உடலுக்கும் வேலை கொடுக்கும் விளையாட்டுகள் நிறைந்திருக்கின்றன.

## முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

1. நாட்டுப்புற விளையாட்டின் வகைகள் யாவை?
2. கிட்டிப்புள்ளுவின் வேறு பெயர் என்ன?

3. கண்ணாமூச்சியின் வேறு பெயர் என்ன?

4. காத்தாடி விடுதல் பற்றிக் கூறுக.

## 11.3.2. பெரியவர் விளையாட்டுக்கள்

குறிப்பு

பெரியவர் விளையாட்டு என்று நோக்கினால் கிராமப் புறங்களில் குறைவானவை யாகவே உள்ளன. பதினைந்து வயதிற்கு மேற்பட்டவர்கள் விளையாடும் விளையாட்டுக்களைப் பெரியவர் விளையாட்டு என்று கொள்ளலாம்.

### 11.3.2.1. சிலம்பம்

சிலம்பம். தமிழர்களின் வீர விளையாட்டு. பாரம்பரியப் பெருமை மிக்கது முக்கியமாக மிகச் சிறந்த தற்காப்புக் கலை. சிலம்பம் அறிந்தவர் கையில் ஒற்றைக் கம்பு இருந்தாலே போதும். எத்தனை பேர் தாக்க வந்தாலும் தப்பித்து விடலாம். இது காலம் காலமாக மக்கள் மனதில் ஊறிப் போயிருக்கும் நம்பிக்கை. உண்மையும் கூட. தமிழர் ஆயுதம் ஏந்திப் போராட ஆரம்பித்த காலத்தில் முதலில் கையில் எடுத்தது கம்பு என்கிறது வரலாறு. அதுதான் 'சிலம்பக்கலை'யாக வளர்ந்தது. காலப் போக்கில் தமிழரின் எத்தனையோ தற்காப்புக் கலைகள் காணாமல் போயிருந்தாலும் இன்றைக்கும் உலக அளவில் உயிர்ப்புடன் இருக்கிறது சிலம்பாட்டம்!

ஐயாயிரம் ஆண்டுப் பழம்பெருமை வாய்ந்தது சிலம்பக்கலை. தமிழக அரசு இதை பள்ளி விளையாட்டாக அங்கீகரித்திருக்கிறது. இன்றைக்கு ஆண்களோடு பெண்களும் இக்கலையை ஆர்வத்தோடு கற்றுக் கொள்கிறார்கள்.

'அலங்காரச் சிலம்பம்', 'போட்டிச் சிலம்பம்', 'போர்ச் சிலம்பம்' என்று சிலம்பில் பல வகைகள் உண்டு. 'அலங்காரச் சிலம்பம்' என்பது அரசு விழாக்கள், பண்டிகை நாட்களில் பேரணி மற்றும் கூட்டங்களில் செய்து காட்டப்படுவது. நிறைய வளையங்களை ஒன்று சேர்த்து, அவற்றைக் கொண்டு பல வித்தைகள் பண்ணுவது. சுருள்கத்தி, மான்கொம்பு போன்ற உபகரணங்களும் இதில் அடக்கம். 'போட்டிச் சிலம்பம்' என்பது, கைகளில் கம்பை வைத்துச் சுழற்றிச் சின்னச் சின்ன

சாகசங்களைச் செய்வது. 'போர்ச் சிலம்பம்' என்பது, சினிமாவில் காட்டப்படுவது. ரொம்ப வேகமாக கம்பைச் சுழற்றுவது.



### 11.3.2.2. சடுகுடு

சடுகுடு என்பது ஆண்கள் ஆடும் விளையாட்டாகும். சில சமயங்களில் பெண்களும் ஆடுவது உண்டு. இரண்டு அணியாக இருந்து ஆடுவது. மூன்று கோடுகள் போடப்பட்டு இருக்கும். ஒரு அணியில் உள்ளவர் மூச்சு பிடித்து,

*"ஆமச்சி ஊமச்சி*
*சந்த கொட்டாய்கச்சி"*

*"வாழைக்காய் பொறியலு*
*வாடா மச்சான் சாப்பிடலாம்"*

*"கபடிக் கபடிக் கபடி*
*சடுகுடு சடுகுடு சடுகுடு"*

என்றவாறெல்லாம் பாடிக்கொண்டு அந்த அணியினர் இருக்குமிடம் சென்று யாரையாவது தொட்டுவிட்டு, அவர்களிடம் பிடிபடாமலும் மூச்சுபிடித்துச் சொல்லும் பாட்டினை நிறுத்தாமலும் நடுக் கோட்டினைத் தொடவேண்டும். அவ்வாறு அவரால் தொடப்பட்டவர்கள் வெளியில் சென்று விடவேண்டும். இறுதியில் எந்த அணியில் அதிகமாக வெளியில் சென்று விட்டனரோ அந்த அணி தோற்றதாக அறிவிக்கப்படும்.

### 11.3.3. சமூக விளையாட்டுக்கள்

சிறுவர் சிறுமியர் பெரியவர் என்று பொதுவாகக் கிராம மக்களின் விளையாட்டைக் கூறினாலும் சில விளையாட்டுக்கள் விமரிசையாக கிராம மக்கள் அனைவரும் பங்கு பெறும் சமூக நிகழ்ச்சியாகவும் விளையாடப் படுகின்றது. அவ்வாறு சமூக நிகழ்ச்சியாக அமையும் விளையாட்டைச் சமூக விளையாட்டு என்பர்.

### 11.3.3.1. மாடுபுடிச் சண்டை

காளைகளை அடிப்படையாகக் கொண்டு 'மாடுபுடிச் சண்டை' என்ற விளையாட்டை விளையாடுகின்றனர். தமிழ்நாட்டில் பல கிராமங்களிலும் இவ்விளையாட்டு விளையாடப்படுகிறது. பெரும்பாலும்

பொங்கல் விழாவன்று இது நடைபெறும். ஊர்ப்பொது இடத்தில் ஒவ்வொரு வீட்டிலுமுள்ள காளைகளைக் கொம்புகளில் வண்ணத் துணி சுற்றி வரிசையாக ஓட்டுவார்கள். இவற்றை இளைஞர்கள் விரட்டிச் செல்வார்கள். சில காளைகள் சரியாக ஓடாமல் திரும்பி விடுவதும் உண்டு. இவ்விளையாட்டு காளைகளை ஒன்று திரட்டி விரட்டி அடிக்கும் விளையாட்டாகவே அமைகிறது.

### 11.3.3.2. மஞ்சு விரட்டு

மஞ்சு விரட்டு என்னும் விளையாட்டு தமிழ் நாட்டில் வழிவழியாக இருந்து வருவதாகும். நம் பழந்தமிழர்களான முல்லை நில மக்கள் ஏறு தழுவுதல் என்னும் விளையாட்டை வைத்திருந்தனர்.

*"கொல்ஏற்று கோடு அஞுசுவானை மறுமையும்*
*புல்லாளே, ஆய மகள்?"*

என்று காளையை அடக்கும் வீரனைத் தவிர பிற ஆடவர்களை மறுபிறவியிலும் மணக்க மாட்டார் ஆயர் குலத்து மகள் என்று தமிழ் இலக்கியம் கூறுகின்றது. எனவே அத்தகைய வழக்கம் கிராம மக்களிடமும் உண்டு. இதனைத்தான் 'மஞ்சு விரட்டு' என்கின்றனர். மஞ்சள் கயிற்றிற்காக; திருமணத்திற்காக காளையை விரட்டி அடக்குதல் என்று கூறலாம். அதாவது ஒரு வீட்டில் பெண்ணிற்காக வளர்க்கப்படும் காளையை விரட்டி அடக்கும் ஒருவனுக்குத் தன் மகளை மணம் செய்து கொடுப்பது கிராம மக்களின் வழக்கமாக இருந்து வந்தது. எனவே கிராமத்திலுள்ள அனைத்து சமூகத்தினரும் ஒன்றாகக் கூடி நிற்க குறிப்பிட்ட பெண்ணிற்காக வளர்க்கப்பட்ட காளையை இளைஞர்கள் ஒவ்வொருவராக வந்து அடக்க முயல்வர். இறுதியாக அடக்கி இழுத்து நிறுத்துபவருக்கு அப்பெண் மணமாலை சூட்டி மகிழ்வாள். இவ்வாறு நிகழும் வீர விளையாட்டே மஞ்சு விரட்டு.

### 11.3.3.3. சல்லிக்கட்டு

காளையை அடக்கும் மற்றொரு வீர விளையாட்டு சல்லிக்கட்டு. 'சல்லி' என்பது விழாவின் போது மாட்டின் கழுத்தில் கட்டப்படுகின்ற வளையத்தினைக் குறிக்கும். தற்போது கிராமங்களில் நடக்கும் 'சல்லிக்கட்டு' விளையாட்டின் போது காளை ஒன்றின் கழுத்தில் சலங்கை

கட்டி, ஊர் கூடியுள்ள களத்தில் விடுவார்கள். பல ஊர்களைச் சேர்ந்த இளைஞர்களும் இக்காளையை அடக்க முயல்வர். சிலர் வீர மரணம் அடைவதும் உண்டு. சிலர் காயங்களுடன் பின்வாங்கி விடுவர். இறுதியாக சல்லிக்கட்டு காளையை அடக்கும் இளைஞர் சுற்று வட்டாரத்திலுள்ள ஊர்களுக்கெல்லாம் 'தலைக்கட்டாக' அறிவிக்கப்பட்டு வீரன் என்கிற பட்டம் சூட்டப்படுவான். தற்போது மதுரை மாவட்டத்திலுள்ள 'அலங்காநல்லூரில்' இவ்விளையாட்டு சிறப்பாக நடைபெறுகிறது. இவ்விளையாட்டு முழுவதுமாக வீரத்தை வெளிப்படுத்தும் விளையாட்டாக அமைகின்றது.



### 11.3.3.4. உறியடித்தல்

கிராமத்தில் விளையாடப்படும் மற்றொரு சமுதாய விளையாட்டு உறியடித்தல். ஊர்ப்பொது இடத்தில் பெரிய நீண்ட கொம்பில் கட்டப்பட்ட நீர் நிரம்பிய பானையை மேலும் கீழும் இழுக்கும்படி அமைத்திருப்பார்கள். அதனை அடித்து உடைக்க ஒவ்வொருவராகக் கையில் தடியுடன் வரவர். பானை மேலும் கீழும் இழுக்கப்படும். உடைக்க வருபவர் மீது மஞ்சள் நீர் இரைக்கப்படும். அவர் முயன்று முடியாமல் திரும்பி விடுவதும் உண்டு. இறுதியில் யாராவது ஒருவர் பானையை உடைத்து விடுவார். ஊர் மக்களால் அவர் பாராட்டப்படுவார்.

### 11.3.4. பொழுதுபோக்கு விளையாட்டுக்கள்

கிராம மக்களால் விளையாடப்படும் விளையாட்டுக்கள் பெரும்பாலும் பொழுது போக்கிற்காக விளையாடப்பட்டாலும், வீட்டிற்கு வெளியில் வராமல் வீட்டினுள் இருந்து கொண்டே ஓய்வு நேரத்தைக் கழிப்பதற்காக விளையாடப்படும் விளையாட்டுகளைப் பொழுதுபோக்கு விளையாட்டுக்கள் என்று அழைக்கலாம்.

### 11.3.4.1. ஆடுபுலி ஆட்டம்

ஆடுபுலி ஆட்டம் என்பது ஒரு தமிழர் திண்ணை வியூக விளையாட்டு ஆகும். இது குறிப்பிட்ட கட்டங்கள் கொண்ட வரைவில் விளையாடப்படுகிறது. ஊர்ப்புறங்களில் தரையில் இந்தக் கட்டங்களைச் சுண்ணாம்புக் கட்டி அல்லது சாக்கு பயன்படுத்தி

குறிப்பு

வரைந்துக்கொள்வார்கள். புளியங்கொட்டைகள், கற்கள், மற்றும் சிறப்பாக தயாரிக்கப்பட்ட காய்களை அதில் நகர்த்தி விளையாடப்படுகிறது. ஆடுபுலி ஆட்டத்தை வெட்டும்புலி ஆட்டம் என்றும் கூறுவர். இது ஒரு மதிநுட்ப உத்தி விளையாட்டு.

ஆடுபுலி ஆட்டக்கோடு விளையாடுவதற்கு தேர்ந்தெடுத்த பகுதியில் முக்கோணக் கூம்புக்கோடு ஒன்றை வரைந்து, கூம்பின் உச்சியிலிருந்து அடிக்கோட்டை உள்ளே தொடும் மேலும் இரண்டு கோடுகள். இந்தக் கோடுகளை வெட்டும்படி போட்ட மூன்று கிடைக்கோடுகள். கிடைக் கோடுகளின் முனைகள் இருபுறமும் குத்துக் கோடுகளால் இணைக்கப் பட்டிருக்கும்.

இந்த விளையாட்டில் மொத்தம் பதினெட்டு ஆட்டக் காய்கள் இருக்க வேண்டும். அதில் மூன்று காய்கள் புலிகளாகவும், மீதமுள்ள பதினைந்து காய்களை ஆடுகளாகவும் வைத்துக் கொள்ள வேண்டும். இந்த இரண்டு காய்களையும் வித்தியாசப்படுத்தும் விதத்தில் காய்களானது இருக்க வேண்டியது அவசியம்.

மூன்று புலிகள், பதினைந்து ஆடுகள் கொண்ட இந்த விளையாட்டில் புலிகள் ஆடுகளிடம் சிறைப்படுதல் அல்லது ஆடுகளைப் புலிகள் விழுங்குதல் என்பது விளையாட்டின் நோக்கமாகும். ஆடுகளை ஒவ்வொன்றாக விழுங்கும் புலிகள், புலிகளை முற்றுகையிட்டு அசையவிடாமல் அடைக்கும் ஆடுகள் என்று வகுக்கப்பட்டுள்ளது.

1. முதலில் புலி, அடுத்து ஆடு என்று சட்டகத்தின் இணைப்புகளில் வைக்க வேண்டும். மற்ற விளையாட்டுகளைப்போல் இது கட்டத்துக்குள் வைக்கப்படுவதில்லை. புலிகளை அடைப்பது போல ஆடுகளை அடுக்க வேண்டும். அதை தடுப்பது போல புலிகளை நகர்த்த வேண்டும்.

2. புலிக்கு அருகில் ஆடு இருந்து அதற்கு அடுத்த கட்டம் வெற்றிடமாக இருந்தால் புலி அங்கே தாவுவதன் மூலம் ஆட்டை விழுங்கும். எனவே புலிக்கு அருகில் தொடர்ச்சியாக இரு ஆடுகள் வரிசையில் இருந்தாக வேண்டும்.

3. புலிகள் சிறைப்படும் போது எத்தனை ஆடுகள் விழுங்கப்பட்டுள்ளன என்பதைப் பொறுத்து ஆடுகள் தரப்பில்

விளையாடுபவர் புள்ளிகளைப் பெறுவார். அதுபோல புலிகளைச் சிறைப்படுத்த முடியாத அளவுக்கு ஆடுகளை இழந்தால் புலிகள் தரப்பில் விளையாடுபவர் வெற்றி பெறுவார்.

குறிப்பு

### 11.3.4.2. தாயம்

இரும்பினாலும் கட்டையினாலும் செய்யப்பட்ட தாயத்தினை உருட்டி அதில் ஒன்று விழுந்தால் காய்களை இறக்கி, பிற எண்கள் விழுந்தால் காய்களை நகர்த்தி இரு அணியினர் அல்லது இருவர் எதிராக அமர்ந்து ஆடும் ஆட்டம் ‘தாயம்’ எனப்படும். இதில் ஆறு காய்கள் நகர்த்தப்படும். ஆறு காய்களையும் எதிரணிக்கு வெட்டு கொடுக்காமல் பழத்திற்குக் கொண்டு சேர்த்து விட்டால் அவர் வெற்றி பெற்றவர் ஆவார். இதில் காய் வெட்டுதல் இரு அணியினருக்கும் உண்டு.

### 11.3.4.3. கல் விளையாட்டு

ஒரே அளவிலான கற்களைக் கூட்டமாகப் பொறுக்கி வந்து முழுவதையும் கைகளின்மேல் கொட்டி, பிறகு கீழே இறைத்து ஒவ்வொரு கல்லையும் மேலே தூக்கிப் போட்டு பிடித்து எடுத்து நான்கு நான்கு கல் சேர்த்தது ஒரு கூட்டம் என்று பிரித்து வைத்து ஆடும் ஆட்டமே கல் விளையாட்டாகும். இதில் ஒவ்வொரு கல்லாகவும் எடுப்பர். கையிலுள்ள கல் அனைத்தையும் தூக்கிப் போட்டுப் பிடிப்பதும் உண்டு. இதில் ஏழுகல், ஐந்துகல் வைத்து ஆடும் விளையாட்டுக்களும் உண்டு.

### முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

5. சிலம்பு விளையாட்டின் வகைகள் யாவை?
6. மாடுபிடி சண்டை பற்றிக் குறிப்பு வரைக.
7. சல்லி என்றால் என்ன?
8. கல் விளையாட்டைப் பற்றிக் குறிப்பு வரைக.

### 11.4. நாட்டுப்புற வட்டாரச் சொற்கள்

பெரும்பாலான வட்டார மொழி வழக்குகளின் சொல் அகராதியில் குறிப்பிடத்தக்க மாற்றம் இல்லை என்றாலும், சில வழக்குகள் பெரிதும் மாறுபடுகின்றன. இலங்கையில் பேசப்படும் தமிழின் பல சொற்கள், தமிழகத்தில் அன்றாட வழக்கில் பயன்படுத்தப்படுவதில்லை. ”பாலக்காடு

குறிப்பு

ஐயர்" தமிழில் பல மலையாள சொற்கள் கலந்திருக்கும். சில இடங்களில் மலையாள வாக்கிய அமைப்பும் காணப்படும். தமிழில் வழங்கப்படும் சில சொற்கள் சில வட்டாரங்களுக்குச் சொந்தமானவை. எடுத்துக்காட்டுகள்:

மதுரை : எல அவிங்க எங்கிட்டு போனாய்ங்க?

திருநெல்வேலி : எல அவுக எங்க போனாக?

கன்னியாகுமரி : மக்கா அவாள் எங்கடே?

சென்னை : ஏய் அவனுவ எங்க போனானுவ?

இப்படியாக ஒலியும் சொற்களும் வட்டாரத்திற்கு வட்டாரம் வேறுபடுகின்றன.

ஒரு மொழி பன்னெடுங் காலமாகப் பலரால் பேசப்படும் நிலையில் வட்டாரம், சமூகம் சார்ந்து மொழிக்குள் வேறுபாடுகள் சில அமைவதுண்டு. ஒரு மொழியில் ஏற்படும் இத்தகைய வழக்கு வேறுபாடுகள் கிளைமொழிகள் எனப்படுகின்றன. வட்டாரம், சமூகம், இனம், பால், வயது முதலியவற்றின் அடிப்படையில் ஒரு மொழியில் கிளைமொழிகள் அமைவதை மொழியியல் அறிஞர்கள் விளக்கியுள்ளனர். தமிழ்ச் சூழலில் வட்டாரம், சமூகம் சார்ந்த கிளைமொழிகள் தெளிவாக அமைந்துள்ளன. அதாவது, சென்னையில் பேசப்படும் தமிழுக்கும் நாஞ்சில் நாட்டில் பேசப்படும் தமிழுக்கும் காவிரி டெல்டா பகுதியில் பேசப்படும் தமிழுக்கும் கொங்கு தமிழுக்கும் வேறுபாடுகள் உள்ளன. இத்தகைய வேறுபாடுகளை அடிப்படையாகக் கொண்டு கிளைமொழி ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. தொடக்கத்தில் கிளைமொழி ஆய்வு வட்டார வழக்கு ஆய்வையே குறிப்பதாக விளங்கியது. பின்பு மொழியியலில் ஏற்பட்ட வளர்ச்சியில் வட்டாரக் கிளைமொழி ஆய்வு கிளைமொழியின் ஒரு பகுதியானது. அவ்வாறு வட்டாரக் கிளைமொழி ஆய்வின் மூலம் அவ்வட்டாரத்திற்கே உரிய வழக்குச் சொற்கள் சேகரிக்கப்பட்டு வட்டார வழக்குச் சொல்லகராதிகள் உருவக்கப்பட்டன.

## 11.4.1. வட்டார வழக்குச்சொல் அகராதிகள்

மேலை நாடுகளில் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலும், இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் பல ஆய்வுகள் நிகழ்த்தப்பட்டன. வட்டாரங்களை அடிப்படையாகக் கொண்டு அங்கு

வழங்கும் கிளைமொழிகளை ஆராய்ந்தனர். நம் நாட்டிலும் இவ்வகை ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. பதினெட்டாம் நூற்றாண்டில் வட்டார வழக்குத் தொடர்பான ஆய்வுகள் தொடங்கி இருக்கலாம். ஏனெனில், முதன் முதலில் வட்டார வழக்குத் தமிழகராதியை, பெஸ்கி தொகுத்ததாகத் தெரிகிறது. ஆனால், அது குறித்து ஏதும் அறிய இயலவில்லை. எனினும், இவர் தொகுத்த வட்டார வழக்குத் தமிழ்ச் சொற்களுக்கு இலத்தின் மொழியில் பொருள் கூறும் தமிழ்-இலத்தின் அகராதி ஒன்று 1882இல் பதிப்பிக்கப்பட்டது எனக் கூறப்படுகிறது.

கஸ்ட் (Cust) முயற்சியின் பேரில், இந்தியாவில் ஜி.எ.கிரியர்சன் 1972ஆம் ஆண்டு இந்திய மொழிகளின் ஆய்வு (Linguistic survey of India) என்ற நூலை வெளியிட்டார். அதில் தமிழ்நாட்டுக் கிளைமொழிகள் ஒன்றும் ஆராயப்படவில்லை. 1957இல் தெலுங்கு மொழியில் உள்ள பயிர்த்தொழில் கலைச்சொற்களைத் திரட்ட, சாகித்ய அகாதமி சார்பில் கிருஷ்ணமூர்த்தி முயற்சி மேற்கொண்டார். 1958-இல் ஆய்வுத் தொடங்கப்பட்டு 1962இல் ‘பயிர்த்தொழில் கலைச்சொல் அகராதி’ வெளியானது. இது மொழியியலாளருக்கு மிகுந்த பயனுடைய நூலாக விளங்கியது. கள ஆய்வில் 9000 பயிர்த் தொழிற்சொற்கள் தொகுக்கப்பட்டன” என்பதை அறியமுடிகிறது. மேலும், 1982இல் கி. ராஜநாராயணன் வழக்கிழந்து மறைந்து போகும் நிலையில் இருந்த வழக்குச் சொற்களைத் தொகுத்து, அன்னம் வெளியீடாக ‘வட்டார வழக்குச் சொல்லகராதி’ எனும் பொருண்மையில் நெல்லை வட்டார வழக்குச் சொல்லகராதியை வெளியிட்டார். அதனைத் தொடர்ந்து பல வட்டார வழக்குச் சொல்லகராதிகள் வெளிவந்தன. அதாவது, கொங்கு வட்டாரச் சொல்லகராதி, நெல்லை வட்டார வழக்குச் சொல்லகராதி, கொங்கு நாட்டுத் தமிழ், நாஞ்சில் வட்டார வழக்குச் சொல்லகராதி, செட்டிநாட்டு வட்டார வழக்குச் சொல்லகராதி, நெல்லை வட்டார வழக்குச் சொல், தென்குமரி வட்டார வழக்குகள், வட்டாரச் சொற்களும் விளக்கங்களும், செட்டி நாட்டில் செந்தமிழ் வழக்கு, கொங்குத் தமிழ், வழக்குச் சொல்லகராதி, கோவை மாவட்ட வழக்குச் சொல்லகராதி, புதுச்சேரி கிராமிய தமிழகராதி, நடுநாட்டுச் சொல்லகராதி, கொங்கு வட்டார வழக்குச் சொல்லகராதி, அறந்தாங்கி வட்டார வழக்குச்

சொல்லகராதி போன்ற வட்டார வழக்குச்சொல் அகராதிகளைக் குறிப்பிடலாம்.

குறிப்பு

## 11.4.2. வட்டாரச் சொற்கள்

மேற்காணும் வட்டார அகராதிகளைக் கொண்டு சில சொற்கள் மட்டும் எடுத்துரைக்கப்படுகிறது.

| | | | |
|---|---|---|---|
| 1. | அலம்பி | - | கழுவி |
| 2. | அழச்சி | - | அழைத்து |
| 3. | இப்போ | - | இப்பொழுது |
| 4. | ஈத்துக்கயிறு | - | குழந்தை பிறக்கும்போது தாய் பற்றிக் கொள்ளும் கயிறு |
| 5. | ஈராங்காய் | - | வெங்காயம் |
| 6. | உம்பளம் | - | மானிய நிலம் |
| 7. | எகத்தாளம் | - | கேலிப்பேச்சு |
| 8. | கும்பி | - | வயிறு |
| 9. | கொடுக்கா | - | மூலை வடமேற்குத் திசை |
| 10. | கொழியலுட்டா | - | முறத்தால் தானியங்களில் உள்ள கல் தூசு முதலியவற்றைப் போகப் புடைத்தல் |
| 11. | சண்டி | - | கொடியவள் |
| 12. | சோட்டு | - | வயது |
| 13. | நாதியத்த | - | அனாதை |
| 14. | பரிசிட்டு | - | பரித்துக்கொண்டு |
| 15. | புளுகு | - | பொய் |
| 16. | பொட்டல்நிலம் | - | காய்ந்த நிலம் |
| 17. | போகமுட்டு | - | போகும் வரை |
| 18. | மப்பு | - | மேகம் |
| 19. | வக்கணை குத்துதல் | - | கேலி செய்தல் |
| 20. | வரக்காப்பி | - | காப்பித்தூள், டீத்தூள் மட்டும் கலந்த சூடான பானம் |
| 21. | வளவி | - | வளையல் |
| 22. | தேவலை | - | பரவாயில்லை |

குறிப்பு

23. அண்ணாவி - ஆசிரியர்
24. இஞ்ச - இங்கே
25. கமுகமரம் - பாக்கு மரம்
26. கருப்பட்டி - பனைவெல்லம்
27. கார வீடு - சுண்ணாம்பு சிமெண்டால் கட்டப்பட்ட வீடு
28. சத்ராதி - தீங்கு செய்யக் கூடிய பெண்
29. பொம்புறணி - பெண்களைப் பற்றித் தேவையற்ற கதை பேசுதல்
30. ராஞ்சு - கம்பி கட்டி வீடு கட்டுதல்
31. வங்கனமே - அழகான
32. வெங்கல ரோதை - மாவு அரைக்கும் ஆலை
33. அஞ்சாலி - விலைமகள்
34. அரசாணி - திமிர் பிடித்த வாயாடிப் பெண்
35. உழாத்துகிறான் - ஏமாற்றுகிறான்
36. ஒன்றாடம் - ஒரு நாள் விட்டு ஒரு நாள்
37. கடாசு - வீசி எறிதல்
38. காவாலி - அயோக்கியன்
39. குதாவடை - குழப்பம்
40. கொண்டி - தாடி
41. சவுட்டில் - கன்னத்தில்
42. சுளுவு - எளிதாக
43. திட்டாந்திரம் - சரியான ஆதாரம்
44. தொக்கடியா - மலிந்த விலையில்
45. நாதாங்கி - தாழ்ப்பாள்
46. மலங்க மலங்க - திருதிருவென முழித்தல்
47. ஆக்கினை - தண்டனை
48. கிட்டம் - அருகில்
49. அத்துவானம் - ஆள் நடமாட்டம்
50. எகடாசிகேலி - கிண்டல்
51. ஓமம் - புண்ணியம்

குறிப்பு

| | | | |
|---|---|---|---|
| 52. | ஓரம்பரை | - | உறவினர் |
| 53. | கட்டபுள்ள | - | குட்டையானவள் |
| 54. | களபம் | - | சந்தனக் குழம்பு |
| 55. | குப்பாயம் | - | மேல்சட்டை |
| 56. | கூட்டு வண்டி | - | மேல் கூரையிட்ட மாட்டு வண்டி |
| 57. | கைக்கிலி | - | கைக்கொட்டிச் சிரித்தல் |
| 58. | கொப்பு | - | காதணி |
| 59. | சல்லப்பட்டு | - | சிரமப்பட்டு |
| 60. | நவனஞ்சோறு | - | புதிய சோறு |
| 61. | நீச்சத்தண்ணி | - | பழைய சோற்றுத் தண்ணி |
| 62. | பட்டம் | - | பருவம் |
| 63. | பிஞ்ச வடம் | - | அறுந்த கயிறு |
| 64. | பொங்கு | - | துவாரம் |
| 65. | விளிச்சி | - | அழைத்து |
| 66. | வெடலப்புள்ள | - | பருவப்பெண் |
| 67. | ஆக்கினால் | - | செய்தால் |
| 68. | உள்ளமுட்டு | - | இருக்கும் வரை |
| 69. | ஏறிக்கினு | - | ஏறிக்கொண்டு |
| 70. | காசரளி | - | மலர்வகை |
| 71. | கிள்ளி | - | பறித்து |
| 72. | சேதி | - | கருத்து |
| 73. | சோட்டு | - | வயது |
| 74. | தவக்கா | - | தவளை |
| 75. | போடுறமுன்னு | - | போடுகின்றேன் என்று |
| 76. | மங்கரைய | - | மண்கரைய |
| 77. | மாண்டிருவேன் | - | இறந்துவிடுவேன் |
| 78. | மொந்தை | - | களிமண்ணால் செய்யப்பட்ட பாத்திர வகை |
| 79. | அக்கச்சி | - | அக்கா |
| 80. | ஆக்கணம் | - | பசுக்கூட்டம் |

| | | | |
|---|---|---|---|
| 81. | குய்யம் | - | வெட்கம் |
| 82. | சீமாறு | - | துடைப்பம் |
| 83. | அலுப்பு | - | சோம்பல் |
| 84. | இரவுசு | - | இரைச்சல் |
| 85. | ஊணி | - | அழுத்தி வை |
| 86. | கெலித்தல் | - | வெற்றி பெறுதல் |
| 87. | சேக்கு | - | தலைமுடி |
| 88. | தாவு | - | இடம் |
| 89. | முடை | - | நெருக்கடி |
| 90. | மேகோடு | - | மேற்கு மூலை |
| 91. | லாயக்கு | - | தகுதி |
| 92. | வாகு | - | பொருத்தமாக |
| 93. | அலுங்காமல் | - | அசையாமல் |
| 94. | அட்டத்தில் | - | பக்கவாட்டில், ஓரத்தில் |
| 95. | கங்காணி | - | தலைவர் |
| 96. | கெராவுறான் | - | உரக்கப் பேசினான் |
| 97. | சிந்தாக்கு | - | மூக்கணி |
| 98. | பரியாரி | - | சவரத் தொழிலாளி |
| 99. | கொட்டம் | - | தாழ்வாரம் |
| 100. | சுக்குமாந்தடி | - | மந்திரக்கோல் |

## முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

9. வட்டார வழக்கு என்றால் என்ன?
10. வட்டார வழக்குச்சொல்லகராதி எதைக் குறிக்கும்?
11. தமிழ்-இலத்தீன் அகராதியைத் தொகுத்தவர் யார்?
12. எகத்தாளம் என்பது எதைக் குறிக்கும்?

## 11.5. தொகுத்துக் காண்போம்

- நாட்டுப்புற விளையாட்டுக்களின் வகைகள் பற்றியும் அவ்வகைகளில் விளையாடக் கூடிய விளையாட்டுக்கள் பற்றியும் தெரிந்து கொண்டீர்கள்.
- நாட்டுப்புற விளையாட்டுக்களில் கிட்டிப்புள்ளு, நொண்டி, பம்பரம், உப்புக்கோடு, மெல்ல வந்து கிள்ளிப் போ, கள்ளன் வாரான்

குறிப்பு

களவாணி வாராள், பூப்பறிக்க வருகிறோம், கழங்கு, கண்கட்டி, காத்தாடி விடுதல், சிலம்பம், சடுகுடு, மாடுபுடி சண்டை, மஞ்சு விரட்டு, சல்லிக்கட்டு, உறியடி, ஆடுபுலி ஆட்டம், தாயம், கல்லாட்டம் ஆகிய விளையாட்டுக்கள் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.

- நாட்டுப்புற வழக்குச்சொல் அகராதிகள் மற்றும் நாட்டுப்புற மக்கள் பயன்படுத்தும் வழக்குச் சொற்கள் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.

## 11.6. முன்னேற்றத்தைச் சோதிக்கும் வினாக்களுக்கான விடைகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | 11.3. | 2. | 11.3.1.1. |
| 3. | 11.3.1.9. | 4. | 11.3.1.10. |
| 5. | 11.3.2.1. | 6. | 11.3.3.1. |
| 7. | 11.3.3.3. | 8. | 11.3.4.3. |
| 9. | 11.4. | 10. | 11.4.1. |
| 11. | 11.4.1. | 12. | 11.4.2. |

## 11.7. பாடம் பயின்றபின் செய்யும் பயிற்சிகள்

1. நாட்டுப்புற விளையாட்டின் வகைகள் பற்றிக் கட்டுரை வரைக.
2. சிறுவர்-சிறுமியர் விளையாட்டுக்கள் எவையேனும் நான்கினைப் பற்றிக் குறிப்பு வரைக.
3. பெரியவர் விளையாட்டில் இரண்டைப் பற்றிக் குறிப்பு வரைக.
4. மாடு தொடர்பான நாட்டுப்புற விளையாட்டுக்கள் யாவை? அவற்றைப் பற்றிக் குறிப்பு வரைக.

**4.4.** வட்டார வழக்குச் சொற்கள் ஏதேனும் இருபதைக் குறிப்பிடுக.

## 11.8. மேலும் பயில்வதற்கான நூல்கள்

1. ப. மகேஸ்வரி, புதிய நோக்கில் நாட்டுப்புறவியல், திருக்குறள் பதிப்பகம், சென்னை, 2009.
2. சற்குணவதி, தமிழக நாட்டுப்புறவியல், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2004.

# பிரிவு 4.

# நாட்டுப்புறவியல்-சமூகவியல்-மொழியியல்

குறிப்பு

## கூறு 12. நாட்டுப்புறவியலும் சமூகவியலும்

### 12.1. முன்னுரை

தொன்றுதொட்டு வாழ்ந்துவரும் பழங்கால கிராமப்புற மக்களிடம் இருந்துவரும் பழக்கவழக்கங்கள், பண்பாடுகள் போன்றவற்றிலிருந்து அவர்களின் சமுதாய வாழ்க்கையைப் படம்பிடித்துக் காணலாம். சமுதாயத்தில் உள்ள ஒவ்வொரு சமூகத்திற்கும் ஒரு வரையறை உண்டு. அவ்வரையறைகளை மீறும்போது பலப்பல இடர்ப்பாடுகள் விளைகின்றன. இவ்விடர்ப்பாடுகளை மையமாகக் கொண்டு பல நாட்டுப்புற இலக்கியங்கள் முகிழ்ந்துள்ளனர். அந்நாட்டுப்புற இலக்கியங்களில் உள்ள சமூகத் தாக்கங்கள் பற்றி எடுத்தியம்புவதாக இப்பாடப் பகுதி அமைந்துள்ளது.

### 12.2. குறிக்கோள்கள்

- நாட்டுப்புறவியலில் சமூகவியல் கோட்பாடுகள் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- சமூகவியல் சார்ந்த செய்திகளை நாட்டுப்புற இலக்கியங்கள் வாயிலாக அறிந்து கொள்வீர்கள்.
- சமூகத் தாக்கத்தால் நாட்டுப்புறவியல் துறை வளர்ச்சியடைந்தது பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.

### 12.3. நாட்டுப்புறவியலும் சமூகவியலும்

சமூகவியல் என்பது சமூகத்தைப் பற்றிய அறிவியல் ஆகும். அது தனிமனிதனையும் மனித சமுதாயத்தையும் ஆராய்கிறது. நம்பிக்கைகளும் வழக்காறுகளும் நடைமுறைகளும் சமூக நிறுவனங்களும் இதனால் ஆராயப்படுகின்றன. சமூக நிறுவனங்கள், சமயம், அரசியல், பொருளாதாரம், குடும்பம் இவற்றுடன் கொண்டுள்ள தொடர்புகளையும் ஆராய்கிறது. இவற்றின் இயக்கத்தையும்

குறிப்பு

இயக்காற்றலையும் எடுத்துரைக்கின்றது. நாட்டுப்புறவியலாளரும் சமூகவியலாளரும் சமூக அமைப்பினை ஆராய்வதில் ஈடுபடுகின்றனர். பழமொழிகளும் கதைகளும் சாதி அடிப்படையில் அமைந்த சமூக உறவை விளக்குகின்றன. சமூகத்தில் காணப்படும், சிக்கலான மனப்பான்மை (Complex attitudes), பெரும்பாரம்பரிய மரபு (Great tradition), சிறுபாரம்பரிய மரபு (Little tradition), வேளாண்மையாளர் (Agriculturists) போன்ற கூறுகளை சமூகவியல் முறையில் ஆராய, நாட்டுப்புற இயலே உதவுகின்றது. இத்துடன் சமூக வாழ்க்கை, சமுதாய அமைப்பு, சமுதாயக் கிளர்ச்சி போன்றவற்றையும் நாட்டுப்புறவியல் மூலம் அறிய இயலும்.

நாட்டுப்புற மக்களிடையே காணப்படும் பாடல்கள், கதைகள், பழமொழிகள், விடுகதைகள், நம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள் முதலியவற்றைக் கொண்டு நாட்டுப்புறவியல் மக்களது வாழ்வைப் படம் பிடித்துக் காட்டுகின்றது. இனி இதில் எந்த விதத்தில் சமூகம் பற்றிய கருத்துக்கள் அமைந்துள்ளன என்பது பற்றிக் காணலாம்.

சமூக வாழ்க்கையைப் பற்றி முழுமையாக அறியக் குடும்பம், வழக்கம், ஒழுக்கம், மதம் போன்றவற்றை ஆராய்தல் அவசியம். சமூகவியலாளர் இதனைச் சமூகத்தின் நிறுவன அமைப்பு என்பர். இவற்றை நாட்டுப்புறவியலில் காணமுடியும்.

குடும்பம் சமூகத்தில் மூலக்கூறு. குடும்ப அமைப்புகளைக் கொண்டு கூட்டுக் குடும்பம், தனிக்குடும்பம் என இருவகைப் படுத்தலாம். தாலாட்டுப் பாடல்கள் மூலம் குடும்ப உறவு முறைகளையும், சடங்குகளையும் அறிந்து கொள்ளலாம்.

இன்றைய சமுதாயத்தில் கூட்டுக் குடும்ப அமைப்பு மறைந்து தனிக்குடும்ப அமைப்பை நோக்கிச் செல்வதை நாட்டுப்புறப் பாடல்கள் மூலம் அறிகிறோம். அதேபோன்று பலதார மணம் அருகி ஒரு தார மணத்தை நோக்கிச் செல்லும் பண்பையும் பார்க்கிறோம்.

வாழ்வு தொடர்பான பழக்க வழக்கங்கள், சடங்குகள், சாவு தொடர்பான பழக்க வழக்கங்கள், சடங்குகள் போன்றவற்றையும் காணலாம்.

## 12.3.1. சாதிப்பிரிவும் மக்களும்

தமிழ்ச் சமூகம் சாதி மற்றும் சமயப் பிரிவுகளைக் கொண்டுள்ள ஓர் அமைப்பாகும். இயற்கையின் படைப்புக்கும் சாதிப் பிரிவுகளுக்கும் எந்த விதமான தொடர்பும் இல்லை. இருப்பினும் மனித இனத்தைப் பல்வேறு சாதிகளாகப் பிரித்து ஏற்றத் தாழ்வுகளைச் சமூகம் கற்பித்துள்ளது.

உணர்விலும் உடலமைப்பிலும் ஒரே மாதிரியாக விளங்கும் மனிதன், பண்பாட்டிலும் பழக்க வழக்கங்களிலும் வேறுபட்டுக் காணப்படுவதற்கு முக்கியக் காரணமாக விளங்குவது சாதிப் பிரிவினையே ஆகும். சாதி, இனப் பாகுபாட்டால் சமூகத்தில் விளைந்த சீர்கேடுகளைக் கதைப்பாடல்கள் தம் எல்லைக்கு உட்பட்டு விளக்கிக் காட்ட முயல்கின்றன. சாதிகளுக்குள் உயர்வு தாழ்வு கற்பிக்கப்பட்டு அவற்றின் பயனாகப் பலவிதமான சிக்கல்களும் போராட்டங்களும் ஏற்பட்டுள்ளதை விளக்கிக் கூறுகின்றன.

காத்தவராயன் கதைப்பாடலின் தலைவன் காத்தவராயன் தாழ்ந்த இனத்தவன். அவன் உயர்ந்த சாதியைச் சேர்ந்தவளான ஆரியமாலையைக் கண்டு மயங்கி அவளை மணக்க விரும்புகிறான். ஆரியமாலையும் அவ்வாறே விரும்புகிறாள். ஆரியமாலையை அவளைச் சார்ந்தோர் கட்டுக் காவலில் அடக்கிக் காக்க முற்படுகின்றனர். காத்தவராயனோ அக்காவலை உடைக்க முற்படுகின்றான். மந்திர, தந்திர வேலைகள் நடக்கின்றன. முடிவில் காத்தவராயன் கழுவிலேற்றிக் கொல்லப்படுகின்றான். இயற்கையான காதலுணர்வும் செய்கையான சாதிப் பிரிவுணர்வும் முட்டி மோதி முரண்படும் போது நேர்கின்ற நிகழ்வுகள் இறுதியில் கொலையில் முடிவதை இக்கதைப்பாடலில் காணமுடிகின்றது.

சின்னநாடான் கதையில் நாடார் குலத்தலைவன் ஒருவன் நாவிதப் பெண்ணைத் திருமணம் செய்து கொண்ட நிகழ்ச்சி விளக்கப்பட்டுள்ளது. நாவிதப் பெண்ணுக்கு ஆண் குழந்தை பிறக்கிறது. அந்தக் குழந்தை, நாடார்களை ஆளும் உரிமையுடன் வந்துவிடக் கூடாது என்ற எண்ணத்தில் அந்தக் குடும்பத்தையே கொன்று அழித்து விடுகின்றனர்.

இதனால் அந்த ஊரில் ஏற்பட்ட கடுங்கொந்தளிப்பையும் பரபரப்பையும் கதைப்பாடல் விளக்கிக் காட்டுகின்றது.

குறிப்பு

முத்துப்பட்டன் கதையில் வரும் முத்துப்பட்டன் செருப்புத் தைப்பவனான வாலப் பகடையின் பெண்களைக் கண்டு காதலிக்கிறான். உயர்சாதியைச் சேர்ந்தவனான முத்துப்பட்டனை மணக்க வாலப் பகடையின் பெண்கள் விரும்பவில்லை பகடையும் மறுக்கிறான். பூணூலை அறுத்தெறிந்துவிட்டு, மாடறுத்துத் தோலுரித்துச் செருப்புத் தைப்பவனாக மாறினால், தன் பெண்களை மணந்து கொள்ளலாம் எனப் பகடை கூறுகிறான். முத்துப்பட்டன் அவ்வாறே செய்து வாலப் பகடையின் பெண்களை மணந்து கொள்கின்றான்.

சின்னத்தம்பி கதையில், காவல்காரர்களாக தேவர் சாதியைச் சார்ந்தவர்கள் இருக்கிறார்கள். அவர்களால் பயிர்களை அழிக்கும் வன விலங்குகளைக் கட்டுப்படுத்த முடியவில்லை. அதனால் சக்கிலி சாதியைச் சார்ந்த சின்னத்தம்பி அவனுடைய சாதியைச் சார்ந்த இளைஞர்களைத் திரட்டி விலங்குகளை வேட்டையாடி வெல்கிறான். அவனுடைய வீரம் அறிந்த மக்கள் தலைவனாக ஏற்கிறார்கள். சின்னத்தம்பியின் திறனை அறிந்த ஜமீன்தார், அவனைப் படைத்தலைவனாக ஆக்குகிறார். இதனால் தேவர் சாதி மக்களுக்கு அவமானமாகிறது. அவர்கள் சின்னத்தம்பியை வஞ்சித்துக் கொல்கின்றனர்.

இந்தக் கதை முடிவுகளிலிருந்து பல உண்மைகளை உணரலாம். சாதி விட்டுச் சாதி மணஉறவு கொள்வதை அக்காலத்தில் பெருங்குறையாகக் கருதியுள்ளனர். பெற்றோர் ஏற்றுக்கொண்டாலும் பிறர் அனுமதிப்பதே இல்லை. அத்தகைய வேற்றுச் சாதிக் கலப்பு மணங்களைப் பொதுக் குறையாகக் கருதி அந்தச் சாதியினர் அனைவரும் கூட்டாக இணைந்து எதிர்த்துள்ளனர். சாதிக்காழ்ப்பு, ஒன்றுமறியாக் குழந்தையையும் இரக்கமின்றிக் கொல்லும் அளவிற்கு வலிமையுற்று இருந்தது. கீழ்ச்சாதிக் கலப்பு எந்த நிலையிலும் இருப்பதை அவர்கள் விரும்பவில்லை என்பதையே இது எடுத்துரைக்கின்றது. இந்த எண்ணம் இருப்பவர்கள் தங்களுக்குக் கீழான

சாதியினரை எவ்வளவு தாழ்வாக மதித்திருப்பர் என்று எண்ணிப் பார்க்கலாம்.



## 12.3.2. சாதிப்பிரிவும் மன்னரும்

திருமணம் செய்வதில் மன்னர்களும் குல வேறுபாடு கருதியதை நாட்டுப்புறக் கதைப்பாடல்களில் காணமுடிகின்றது. கன்னியாகுமரியை அடுத்த முட்டப்பதியைக் கோனாண்டி ராசனும் அதன் பக்கத்திலிருக்கும் தட்டாரிப்பதி என்ற வட்டக் கோட்டையைக் கொந்தளப்பூ ராசனும் ஆண்டு வந்தனர். கோனாண்டி ராசனுடைய மகள் தோட்டுக்காரியைத் தன்னுடைய மகன் குமரப்பராசனுக்கு மணம் செய்ய விரும்பிக் கொந்தளப்பூ ராசன் ஓலை கொடுத்து, ஒட்டனை முட்டப்பதிக் கோட்டைக்கு அனுப்புகின்றான். இதை அறிந்த கோனாண்டி ராசன் கோபம் கொண்டு,

*வந்த ஒட்டனை ஏசிப் பறைந்தனன்*
*பறையாத பறைவார்த்தை பேசியே*
*பயலாரடா பெண் கேட்டு வந்தன*

என்று ஒட்டனை ஏசியும்,

*எனக்கு இவன் சரிதானோடா*

என்று கூறியும் பெண் கொடுக்க மறுக்கிறான். படை பலம், வெற்றிச்சிறப்பு, குலநலம் ஆகியவற்றில் கொந்தளப்பூ ராசன் தான் பெண் கொடுக்கத் தகுதி இல்லாதவன் என்று கோபத்துடன் பேசுகிறான். சிற்றரசர் இருவருக்குள்ளே இருந்த ஏற்ற இறக்கத்தைத் தோட்டுக்காரியம்மன் கதைப்பாடல் கூறுகின்றது.

வள்ளியூரை ஆண்ட குலசேகர பாண்டியனுடைய படத்தைப் பார்த்து, கன்னடியான் என்னும் அரசனின் மகள் காதல் கொள்கிறாள். ஆகையினால் கன்னடியன் வள்ளியூர்க் கோட்டைக்கு மணத்தூது அனுப்புகிறான். தூதனைக் கண்ட குலசேகரபாண்டியன் கோபத்தால் துடித்துத் தனக்குப் பெண் தரக் கன்னடியன் தகுதியுள்ளவனா என்று கேட்கிறான். குலத்தாழ்ச்சி எடுத்துக்காட்டப்படுகிறது. கன்னடியன் படை பலத்தால் வலியவன். இருந்தும் குலத்தால் தான் உயர்ந்தவன் எனக்

கருதிய குலசேகரன் பெண்ணெடுக்க மறுத்து விடுவதை, கன்னடியன் படைப்போர் கதைப்பாடலில் காணலாம்.

குறிப்பு

அரசர்கள் மத்தியிலும் குலப்பெருமை காணும் போக்கு இருந்துள்ளதை இதன் மூலம் அறிகிறோம். இவ்வாறு குலப்பெருமை பேசிய நாடுகள் அனைத்தும் ஒன்றுடன் ஒன்று மோதி அழிந்ததைப் பற்றிக் கதைப்பாடல்கள் விரிவாகக் கூறுகின்றன.

## 12.3.3. சாதியும் பண்பும்

தமிழ்நாட்டில் சாதிகள் பலவாகவும் அனைந்துள்ளதைக் காணமுடிகிறது. வாணிபம் செய்வோர் வணிகர் எனவும், ஆடுமாடு மேய்ப்போர் ஆயர் அல்லது இடையர் எனவும், காட்டில் வேட்டையாடுவோர் வேடராகவும் குறிப்பிடப்படுகின்றனர். மேலும் குறிசொல்வோர் குறவர் எனவும், செருப்புத் தைப்பவர் பகடை அல்லது சக்கிலியர் எனவும், பணிவேலைகள் செய்வோர் சாம்பவர் எனவும் நாட்டுப்புறக் கதைப்பாடல்கள் குறிப்பிடுகின்றன. காலப்போக்கில் ஒரே தொழிலைச் செய்பவர்கள் தனித்தனிச் சாதிகளாகப் பிரிந்து கொள்வினை கொடுப்பினைகளைத் தங்களுக்குள் செய்து வேறகி உள்ளனர்.

சாதிகளுக்குத் தனித்தனியே பண்பாட்டு முறைகள், பழக்க வழக்கங்கள், செயல் திறன்கள், கலைத்திறன்கள் முதலிய பண்புகள் வேறுபாடுகளுடன், நிலைத்த தன்மைகளுடன் ஏற்பட்டுள்ளன. ஒரு சாதியினர் இன்ன தன்மையுடன் இன்னின்ன திறமையுடன்தான் இருப்பர் என்று நினைக்கும் அளவுக்கு அவர்களிடம் அவை இணைந்துள்ளன. இதனைக் கதைப்பாடல்கள் குறிப்புக்களாகக் காட்டிச் செல்கின்றன.

வெங்கலராசன் கதையில்,

*“காடு மலையுள்ள செடிகளிலே*
*காட்டுடன் ஆடு மேய்த்து மேய்த்து*
*. . . . . . . . . . . . . . . . . . .*
*பாடுபல பட்டு தண்ணீரூட்டி*
*பரமக் கோனாரும் பார்த்தடைத்து*
*பரமக் கோனாரும் பார்த்தடைத்து”*

என்று கூறுவதில் கோனார் எனப்படும் ஆயர்கள் ஆடுமாடுகளை மேய்த்துக் காவல் காத்தமை அறியப்படுகிறது. மேலும்,

*"வில்லெடுத் துயிர்வதை செய்கின்ற*
*வேடர்க் கஞ்சிப் புறாவந் தொதுங்கிட"*

என்ற குறிப்பின் வழி வேட்டையாடுவது வேடரின் தொழில் என்பதையும் இக்கதை வாயிலாக அறியலாம். இதே கதையில்,

*"பாலன் வயது பதினா றாக*
*வெளஃளிக் கோல் கையிலெடுத்து சரக்கும்*
*விரைவுடன் கொண்டுமே வாணிபம் செய்து"*

என்று சொல்வதில் வணிகர் தங்களுடைய பதினாறு வயதுப் பருவத்திலேயே தராசுங் கையுமாக வாணிபம் செய்யப் புறப்பட்டனர் என்ற செய்தி அறியமுடிகிறது.

குறிப்பு

## 12.3.4. பரத்தையர் உறவு

சாதிகளுக்கென்று தனித்துவமான சில முறைகள் இருப்பதையும் நாட்டுப்புறக் கதைப்பாடல்கள் குறிப்பிட்டுக் காட்டுகின்றன. பரத்தையர் உறவு பலருக்கு அக்கால கட்டத்தில் இருந்தது. அத்தகைய உறவு கொண்டு பரத்தையருடன் போனவரைத் திருப்பி அழைக்கும் பழக்கத்தை வணிகர்கள் ஏற்றுக்கொள்வதில்லை. கோவலனை அழைக்க வேண்டும் என்று விரும்பிய கண்ணகியிடம் வேசியுடன் போனவரை வீட்டுக்கு நாமழைத்தால் வர்த்தகர்கள் நம்மை மதியார்கள் நம்மையொத்த அவ்வாறு அழைப்பது நமது சாதி முறையன்று என்று முதிய பெண்கள் கூறுவதாக, கோவலன் கதை எடுத்துரைக்கின்றது.

வண்ணார் குலவழக்கம் ஒன்றினை மெச்சும் பெருமாள் பாண்டியன் கதை சுட்டிச் செல்கிறது. சமுதாயத்தில் உயர்ந்த பதவியில் இருப்பவன் மெச்சும் பெருமாள். அவனை வளர்த்த வளர்ப்புத் தாய் வண்ணார் சாதியைச் சேர்ந்தவள். வளர்ப்புத் தாயின் மகன் திருமணத்தில் மெச்சும் பெருமாள் கலந்து கொள்கிறான். ஆனால் அந்த மணமகளின் அழகில் தன்னைப் பறிகொடுக்கிறான். அவளை அடையவேண்டும் என்ற ஆசையை வளர்ப்புத் தாயிடம் வெளியிடுகின்றான். வளர்ப்பு மகனின் ஆசையைக் கேட்ட வண்ணாத்தி

இருதலைக் கொள்ளி எறும்பாய்த் தவித்து இறுதியில் மருமகளிடம் தெரிவிக்கின்றான். மருமகள் வண்ணார் குலமுறை வழக்கத்தை எடுத்துக் கூறுகிறாள்.

குறிப்பு

*“நம்முடைய சாதியிலே*
*நாம் தவறி நடந்தோமானால்*
*சாதி விலக்கி வைப்பர்*
*தரக் குறைவாய்ப் பேசிடுவர்*
*நன்மை தீமைக்குச் சேரமாட்டார்*
*நம்மிடத்தில் சம்மந்தம் செய்யமாட்டார்”*

என்று மெச்சும்பெருமாள் பாண்டியன் கதையில் வண்ணாரப் பெண் தன்னுடைய குல வழக்கத்தினை எடுத்துரைப்பதைக் காட்டுகிறாள். வண்ணார் குலத்தில் பெண்கள் ஒழுக்கம் தவறுவதைப் பெருந்தவறாகக் கருதியுள்ளனர் என்பதை இக்கதைப்பாடல் எடுத்துரைக்கிறது. குசலவர் சுவாமி கதையில் ஒழுக்கம் தவறிய வண்ணாத்தியைக் கணவன் கண்டிக்கும் நிகழ்ச்சி வருகிறது.

*“ஏது சொல்வான் அந்த மாட வண்ணான்*
*இராமனும் அங்கே ஒருங்கோ பெண்ணே*
*இராவணன் கொண்டு போன இலட்சுமியை*
*இராமனும் கூட்டி வந்திருக்கிறானே”*

இராமனைப் போன்று தான் ஏற்றுக்கொள்வது இல்லை என்று உறுதியுடன் மறுத்து விடுகிறான். இதிலிருந்து அந்தக் குல இயல்பு அறியலாம்.

**முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்**

1. சமூகவியல் என்றால் என்ன?
2. சின்னநாடான் கதை உணர்த்தும் சமூகச் சிந்தனை யாது?
3. தோட்டுக்காரியம்மன் கதை உணர்த்தும் சமூகச் சிந்தனை யாது?
4. பரத்தை பற்றி வண்ணார் குல வழக்கம் யாது?

### 12.3.5. சொத்துரிமை

பெண்களுக்குச் சொத்துரிமை இல்லாத நிலையைக் காட்டும் கதைதான் நல்லதங்காள்.

அர்ச்சுனாபுரம் மற்றும் அந்த கிராமத்தைச் சுற்றியுள்ள பகுதியை இராமலிங்க சேதுபதி, இந்திராணி தம்பதியினர் ஆட்சி செய்து வந்தனர். இவர்களுக்கு நல்லதம்பி, நல்லதங்காள் என இரண்டு குழந்தைகள். இவர்கள் தாய், தந்தையை இளம் வயதிலேயே இழந்தனர். இருந்த போதிலும், அந்தப் பகுதியை ஆட்சி செய்து வந்த நல்லதம்பி, தன் தங்கை நல்லதங்காளைச் சீராட்டி வளர்த்து மானாமதுரையில் வாழ்ந்த ராஜ வம்சத்தைச் சேர்ந்த காசிராஜா என்பவருக்குத் திருமணம் செய்து கொடுத்தார்.

திருமணம் ஆன இளம் வயதிலேயே நல்லதங்கள் ஏழு குழந்தைகளுக்குத் தாய் ஆனாள். இதில் நான்கு ஆண் குழந்தைகள், மூன்று பெண் குழந்தைகள். இந்நிலையில், மானாமதுரையில் மழை பொய்த்ததால் பஞ்சம் தலைவிரித்தாடியது. தொடர்ந்து பன்னிரண்டு ஆண்டுகள் மழையே இல்லை. உண்ண உணவு இன்றி மக்கள் பலரும் மாண்டனர். நல்லதங்காள் குடும்பமும் அந்நிலைக்கு ஆளானது. அவள், அண்ணன் கொடுத்தனுப்பிய சீதனப் பொருட்களை ஒவ்வொன்றாக விற்றாள். ஒரு கட்டத்தில் வீட்டில் எதுவுமே இல்லை என்ற நிலை வந்தது. சாப்பாட்டிற்கும் வழியில்லாமல் போனது. மனம் உடைந்த நல்லதங்காள் தன் ஏழு குழந்தைகளையும் அழைத்துக்கொண்டு தான் பிறந்த அர்ச்சுனாபுரம் கிராமத்துக்கு வருகிறாள்.

அப்போது அவளது அண்ணன் நல்லதம்பி வேட்டையாடக் காட்டுக்குச் சென்று இருந்தார். அண்ணன் வரும்வரை அரண்மனையில் தங்கி இருக்கலாம் என்று எண்ணிய நல்லதங்காள் அங்குச் சென்றாள். பசியால் வந்த நல்லதங்காளையும், அவள் குழந்தைகளையும் ஆதரிக்காமல் ஓட்டை மண்பானையையும், பச்சை விறகையும், பயன்படுத்த முடியாத கோப்பையையும் கொடுத்து உணவாக்கி உண்ணச் சொல்கிறாள் அண்ணியாகிய மூளியலங்காரி.

பத்தினி தெய்வத்தன்மை படைத்த நல்லதங்காள் பார்த்த உடனே பச்சை விறகு தீப்பற்றி எரிந்தது. உணவு சமைத்து தானும் பிள்ளைகளும் உண்டு அரைப்பசியைத் தடுத்தனர். ஆனால் நல்லதம்பியின் மனைவி மூளியலங்காரியோ, பல நாட்கள் பட்டினி கிடந்த நல்லதங்காளையும் அவளது பிள்ளைகளையும் உண்ண உணவு

கூட கொடுக்காமல் அரண்மனையை விட்டே துரத்தினாள். அண்ணன் வருவான் என்று எதிர்பார்த்தாள். நாட்கள் சில கடந்தன. பசி வாட்டியது. பிள்ளைகள் வாடின. அண்ணன் தன் நிலையைப் பார்த்துத் துடிப்பான், அண்ணியின் இரக்கமற்ற தன்மையைக் கேட்டால் கொதிப்பான், எனவே தானும், குழந்தைகளும் மாய்வதே சிறப்பு என்று நினைத்துப் பாழுங்கிணற்றில் ஏழு குழந்தைகளையும் தள்ளிவிட்டு தானும் விழுந்து மாள்கிறாள். சொத்தில் பங்கு கொள்ளும் உரிமை அந்தக் காலத்தில் இருந்திருந்தால் மூளியலங்காரி இவ்வாறு நடந்திருக்க மாட்டாள் என்பதை இக்கதை எடுத்துரைக்கிறது.

ஒப்பாரிப் பாடல்களின் வாயிலாகக் கணவனை இழந்த பெண்ணின் ஆதரவு அற்ற நிலை பற்றி அறிய முடியும்.

*"தாலிக்கு அரும்பெடுத்த*
*தட்டானும் கண் குருடோ!*
*சேலைக்கு நூலெடுத்த*
*சேணியனும் கண் குருடோ!*
*பஞ்சாங்கம் பாக்க வந்த*
*பார்ப்பானும் கண் குருடோ!*
*எழுதினவன் தான் குருடோ!*
*எழுத்தாணி கூர் இல்லையோ!"*

*"தூரத்து அண்ணன்மாரே*
*என் தோளு நிறைஞ்ச மாலை*
*தூக்கி எறியப் போறேன்*
*தூரப் போய் நின்னுடுங்க!"*

*"ஓடையிலே ஊத்து வரும் என்*
*ஓசத்தி உள்ள தம்பியடா!*
*உனக்கு ஊரசுத்தி நஞ்சை யுண்டு*
*ஊரோரம் நெல்லடிக்கி*
*ஒண்ணா பொறந்த வளே*
*ஒட்டகமே சீருக்கொண்டு என்னுடைய*
*ஊட்டுக்கே வந்தியானா*
*உன்னுடைய உடம்பழகப் பார்ப்பதற்கு*

*ஊருல உள்ள சனம் என்னுடைய*
*ஊட்ட சுத்தி வந்து நிக்கும்!*
*எந்த பாவி கண்ணுபட்டோ*
*ஓடையிலே ஊத்து நிக்கும் என்னுடைய*
*ஊட்டுலயே விளக்கணையும்*
*என் உடன் பிறப்பே கொள்ளை யிட்டேன்”*

குறிப்பு

என்றெல்லாம் கணவனை இழந்தவள் பாடும் ஒப்பாரிப் பாடல்களில் தன்னுடைய உரிமையைச் சொல்லிக் காட்டுகிறாள்.

## 12.3.6. வீர வழிபாடு

கதைப்பாடலின் தலைவர்களான காத்தவராயன், மதுரைவீரன் போன்றோரைத் தெய்வமாக வழிபடுதல் என்பது அத்தலைவர்களின் வீரத்தைப் போற்றும் மரபாகும். இந்த மரபினைச் சங்க காலத்தில் நடுகல் வழிபாட்டோடு தொடர்புப்படுத்திப் பார்க்கலாம்.

## 12.3.7. தெய்வ நம்பிக்கை

மனிதன் இறந்த பின் அவனுடைய ஆவி ஆற்றலுடன் அலையும் தன்மையுடையது என மக்கள் நம்பியுள்ளனர். இந்த முறையில் அரிய செயல் ஆற்றியவர்கள், வீரமரணம் அடைந்தவர்கள், தவறாகக் கொலை செய்யப்பட்டவர்கள் போன்ற பலரைத் தெய்வங்களாக்கிக் கொடை விழாக்கள் நடத்திப் பலியும் பூசையும் கொடுத்து மக்கள் கொண்டாடியுள்ளனர். அச்சவுணர்வு, இரக்கம், நன்றியுணர்வு காரணமாகச் சிலரை வணங்கத் தலைப்பட்டுள்ளதாகவும் கருதலாம். முத்துப்பட்டன், குலசேகரன், சேர்வைக்காரன், சிதம்பரநாடார், மதுரை வீரன், காத்தவராயன், பொன்னிறத்தாள், தோட்டுக்காரி முதலிய நாட்டுப்புறத் தெய்வங்கள் இவ்வாறு வணக்கப்பட்டவர்கள்.

கடவுளால் உலகுக்குப் படைத்து அனுப்பப்பட்டதாகச் சில தெய்வங்களை வணங்குகின்றனர். சுடலைமாடன் முதலிய தெய்வங்களை இந்த நிலையில் கருதலாம். இத்தகைய தெய்வங்கள் இறைவனிடம் வரம் வாங்கி அரிய ஆற்றலுடன் உலகுக்கு வருவதாக நம்பினர். இவர்கள் அருள் செய்வதுடன் தங்களைப் பணியாதவர்களை அழிக்கவும் செய்வர் என்ற நம்பிக்கை மக்களிடம் வேரூன்றி இருந்தது.

ஆகையினால் இந்தத் தெய்வங்களை அச்சத்துடன் வணங்கி வந்தனர். சுடலைமாடன் கதையில் வரும் பகுதி இந்த உணர்வை விளக்கும்.



சுடலைமாடன் பயிரழிவு செய்கிறான். அதனைக் கண்டவர் அவனிடம் வேண்டிப் பணிகின்றனர்.

*"எங்களுடைய இடமதிலே அட்டாதுட்டம்*
*செய்ய வேண்டாம்*
*ஆதாளிகள் போடவேண்டாம் உங்களுக்கு*
*நாங்களுமே ஊட்டுப்போட்டுத்*
*தருவோம் என்றார்"*

இயக்கி அம்மன் கதையில் வரும் இயக்கி, மானுடப் பிறவியில் தன்னைப் பழி செய்தவனைப் பாழாக்கிக் கொல்கிறாள். அவனுக்குத் துணை நின்றவர்களையும் அழித்து இறுதியில் தன் தமையனுடன் சிவனிடம் வந்து வரம் வாங்குகிறாள். அழிவு செய்யும் ஆற்றலுடன் வரம் வாங்கி, தெய்வமாக வந்தவர்கள் என்று மக்கள் இவர்களை நம்புகின்றனர். அதனால் அச்சம் காரணமாக இவர்களை வணங்கி இவர்களுக்குப் படையல் செய்கின்றனர். வருடத்திற்கு ஒரு முறையோ அல்லது வசதியுள்ளபோதோ இத்தெய்வங்களை வணங்கிச் சாந்தப்படுத்த முனைகின்றனர். இதுவே அம்மன் கொடை, சுடலைமாடன் கொடை என்று வழங்கப்படுகிறது.

## முன்னேற்றத்தைச் சோதிக்கும் வினாக்கள்

5. சொத்துரிமை இல்லாதவள் நிலை யாது?
6. சொத்துரிமை குறிக்கும் ஒப்பாரி பாட்டு ஒன்று தருக.
7. வீரவழிபாடு எதனோடு தொடர்புடையது?
8. தெய்வ நம்பிக்கையால் எழுந்த சமூக மாற்றம் குறித்து விவரி?

## 12.4. தொகுத்துக் காண்போம்

- நாட்டுப்புறவியலுக்கும் சமூகவியலுக்கும் உள்ள தொடர்பு பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.

- நாட்டுப்புறச் சமூகக் கூறுகள் பற்றியும் பெரும்பாலான சமூகக் கூறுகள் கதைப்பாடல்களில் மிளர்வது பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.

குறிப்பு

## 12.5. முன்னேற்றத்தைச் சோதிக்கும் வினாக்களுக்கான விடைகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | 12.3. | 2. | 12.3.1. |
| 3. | 12.3.2. | 4. | 12.3.4. |
| 5. | 12.3.5. | 6. | 12.3.5. |
| 7. | 12.3.6. | 8. | 12.3.7. |

## 12.6. பாடம் பயின்றபின் செய்யும் பயிற்சிகள்

1. நாட்டுப்புறவியல் துறையில் சமூகத்தின் தாக்கம் எவ்வாறு இடம்பெற்றுள்ளது என்பது பற்றிக் கட்டுரை வரைக.
2. கதைப்பாடல்களில் சமூகக் கூறுகள் இடம்பெற்றவற்றைக் கூறுக.
3. ஒப்பாரி பாடல்கள் உணர்ததும் சமுதாயச் சிந்தனை யாது?

## 12.7. மேலும் பயில்வதற்கான நூல்கள்


1. மோ.கோ. கோவைமணி, தமிழில் கதைப்பாடல் சுவடிகள், பாமொழி பதிப்பகம், தஞ்சாவூர், 2016.


# கூறு 13. நாட்டுப்புறவியலும் மொழியியலும் - நாட்டுப்புற இலக்கியக் கூறுகள்

## 13.1. முன்னுரை

நாட்டுப்புறவியல் என்பது சமூக அறிவியல் சார்ந்த துறையாகும். இத்துறை ஆய்வு இன்று பல்துறை இணைப்பு ஆய்வாக வளர்ந்திருக்கிறது. ஒரு நாட்டு மக்களின் நாகரிகத்தை, பண்பாட்டை, பழக்க வழக்கங்களை, வரலாற்றை, நாட்டு நடப்பை உள்ளது உள்ளதுபடி என்ற முறையில் ஆராய்வதுதான் நாட்டுப்புறவியல். இத்துறை உளவியல், மானுடவியல், மொழியியல், சமூகவியல், வரலாற்றியல் போன்ற பலதுறைக் கூறுகளைத் தன்னுள் கொண்டுள்ளது.

இங்குச் சமூகவியல் பற்றியும், அடுத்த பகுதியில் மொழியியல் பற்றியும் பாடப்பகுதியாக அமைந்துள்ளது.

குறிப்பு

## 13.2. குறிக்கோள்கள்

- நாட்டுப்புறவியல் துறையான பல்வேறு துறையோடு ஒப்பிடக்கூடிய நிலையில் உள்ளது என்பது பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- மொழியியல் பார்வையில் நாட்டுப்புறவியல் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- நாட்டுப்புற இலக்கியக் கூறுகள் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.

## 13.3. நாட்டுப்புறவியலும் மொழியியலும்

நாட்டுப்புறக் கோட்பாடுகள் உருவானதில் மொழியியலின் பங்கு குறிப்பிடத்தக்கது. அந்த மொழியைப் பற்றிய ஆய்வே மொழியியல் ஆகும். இது விளக்க மொழியியல், வரலாற்று மொழியியல், சமூக மொழியியல் எனப் பல்வேறு வகைப்படும். மொழியியலுக்கும் நாட்டுப்புறவியலுக்கும் உள்ள தொடர்பு மிகச் சிறியதுதான். நாட்டுப்புற இயலானது ஒப்புமை முறையை (Comparative method) மொழியியலிடம் இருந்து இரவலாகப் பெற்றுள்ளது. எனவே மொழியியல் கருத்தாக்கங்கள் (theories) நாட்டுப்புறவியலுக்கு இன்றியமையாதவை. மனிதனின் பிறப்போடு பிறப்பாய் வாழ்வோடு வாழ்வாய்ப் பின்னிப் பிணைந்து நிற்பது மொழி. நமது கருத்தைப் பிறருக்கு அறிவிக்கும் கருவியாக இருப்பது மொழி. மனித வாழ்விலும் நாகரிகத்திலும் மொழியின் பங்கு மிகச் சிறப்பானதாகும். அம்மொழியைப் பற்றிய ஆய்வை மொழியியல் (Linguistics) என்கிறோம். ஒரு மொழியின் இயல்பை உள்ளவாறு ஆராய்ந்து கூறுவது விளக்க மொழியியல் (Descriptive Linguistics). பல்வேறு காலங்களில் அமைந்த மாற்றத்தை ஆராய்வது வரலாற்று மொழியியல் (Historic Linguistics). மொழியில் ஏற்படும் மாற்றங்களை ஒலியனியல் (Phonology) மாற்றம், உருபனியல் (Morphology) மாற்றம், சொற்றொடரமைப்பு மாற்றம் (Syntax), சொல் பொருள் (Semantics) மாற்றம் என மொழியியல் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

பொதுவாக மொழியியல் என்பது, மொழிகளில் ஏற்படும் மாற்றங்கள் பற்றிய ஆய்வாகும். இவ்வாய்வு நான்கு முக்கிய அம்சங்களைக் கொண்டுள்ளது. அவை,

1. குறிப்பிட்ட மொழிகளில் கவனிக்கப்பட்ட மாற்றங்களை விளக்குதல்
2. பேச்சுச் சமுதாயங்களின் வரலாற்றை விளக்குதல்
3. மொழிகளின் முன்-வரலாற்றை மீளுருவாக்கலும், மொழிக் குடும்பங்களாக ஒழுங்குபடுத்துதலும்
4. மொழிகள் மாற்றமடைவதற்கான காரணங்கள், அதற்கான வழிமுறைகள் தொடர்பான கோட்பாடுகளை உருவாக்கல்

என்பனவாகும். தற்கால மொழியியல் பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் மிகப் பழங்காலத்திலிருந்தே பண்டைய நூல்களையும் ஆவணங்களையும் ஆயும் துறையான மொழி நூலில் (Philology) இருந்து உருவம் பெறத் தொடங்கியது. முதலில் மொழியியல், உள் மீளுருவாக்கம், ஒப்பீட்டு முறை ஆகியவற்றைப் பயன்படுத்தி, மொழிக் குடும்பங்களை உருவாக்குவதிலும், முன்-வரலாற்று மொழிகளை மீளுருவாக்கம் செய்வதிலும் கவனம் செலுத்தியது. ஆய்வுகள் பெரும்பாலும் பரவலாக அறியப்பட்ட இந்தோ-ஐரோப்பிய மொழிகள் பற்றியே அமைந்திருந்தன. பின்னர், குறிப்பிடத்தக்க அளவில், ஒப்பீட்டு மொழியியல் ஆய்வுகள் உலகின் பல்வேறு மொழிகள் தொடர்பிலும் நடத்தப்பட்டுள்ளன. தற்காலத்தில் ஒப்பீட்டு மொழியியல், பரந்த மொழியியலின் ஒரு பகுதியாகவே உள்ளது.

## 13.3.1. மொழியியலும் அறிதிற அறிவியலும்

அறிதிற மொழியியல் என்பது, மொழியை, கூர்ப்பியல் முறையில் வளர்ச்சியடைந்து சிறப்பெய்திய உடற்கூற்று அடிப்படையில் நோக்குவதுடன், மனித மூளை பற்றிய நடப்பிலுள்ள புரிதல்களுடன் சிறப்பாகப் பொருந்தி வருகின்ற அல்லது மேலும் மேம்படுத்தக் கூடிய விளக்கங்களைக் கண்டறியவும் முயல்கின்றது. மொழி உருவாக்கம், கற்றல், பயன்பாடு என்பன மனித அறிதிறனை அடிப்படையாகக் கொண்டே விளக்கப்படுகின்றன என்பதே அறிதிற மொழியியலுக்கு அடிப்படையாக உள்ள வழிகாட்டற் கொள்கையாகும். அறிதிறன்

என்பதே, மொழிக்கு மட்டுமன்றி, மனித அறிவுத்திறன் சார்ந்த எல்லாவற்றிலும் பயன்படுத்தப் படுவதற்கு அடிப்படையான மூளை சார்ந்த செயல்முறையாகும்.

**குறிப்பு**

இந்நிலையினை நாட்டுப்புற இலக்கிய வகைக்குள்ளும் புகுத்திப் பார்க்கலாம். நாட்டுப்புறப் பாடல்களில் அடிகளைத் திரும்பப் பாடும் வழக்கம் உண்டு. இதனால் அவர்களுக்குச் சலிப்பு ஏற்படுவதில்லை. மாறாக, சொன்னதையே சொல்வதன் மூலம் அக்கருத்து வலுப்பெறுகிறது. கேட்கவும் இனிமை பயக்கின்றது. காட்டாக தந்தை, தாய் இறந்தபோது மகள் பாடும் ஒப்பாரிப் பாடல் பின்வருமாறு அமைந்திருக்கும்.

*குட்ட புளிய மரம்*
*குயிலடையும் நந்தவனம்*
*பட்டமரம் பட்டுப்போனா*
*என்ன பெத்த அம்மா*
*குயில் போயி எங்கடையும்*
*மட்ட புளிய மரம்*
*மயிலடையும் நந்தவனம்*
*மட்ட மரம் பட்டுப்போனா*
*என்ன பெத்த அம்மா*
*மயில் போயி எங்கடையும்*

என்னும் இப்பாடலில் ‘என்ன பெத்த அம்மா’ என்ற சொல் மீண்டும் மீண்டும் வந்துள்ளதைக் காணலாம்.

## 13.3.2. ஒப்பீட்டு மொழியியல்

ஒப்பீட்டு மொழியியல் என்பது, மொழியியலின் ஒரு கிளைத் துறையாகும். இது, மொழிகளின் வரலாற்றுத் தொடர்புகளை அறிந்து கொள்வதற்காக அவற்றை ஒப்பிட்டு ஆராய்வதை நோக்கமாகக் கொண்டது. மொழிகள் பெருமளவில் கடன் வாங்குவதன் மூலம் அல்லது மரபுவழி மூலம் தொடர்புகளைக் கொண்டிருக்கலாம்.

மரபுவழித் தொடர்பு அம்மொழிகளுக்கு ஒரு பொது மூலம் அல்லது ஒரு முந்துமொழி இருப்பதை எடுத்துக்காட்டுகிறது. ஒப்பீட்டு மொழியியல் மொழிக் குடும்பங்களை உருவாக்குவதையும், முதல் -

மொழிகளை மீட்டுருவாக்கம் செய்து ஆவணப்படுத்தப்பட்ட மொழிகளில் ஏற்பட்டுள்ள மாற்றங்களை அறிந்து கொள்வதையும் நோக்கமாகக் கொண்டது.

குறிப்பு

நாட்டுப்புற மக்கள் பல மொழிபேசும் திறன் வாய்ந்தவர்கள் இருக்கின்றனர். இவர்கள் பெரும்பாலும் தமிழக எல்லைப் பகுதிகளில் வாழ்பவர்களாக இருக்கின்றனர். தமிழகத்தின் சென்னை, வேலூர் மாவட்டங்களில் வாழும் மக்களிடம் தெலுங்குச் சொற்களும், தமிழகத்தின் கன்னியாகுமரி, கோயம்புத்தூர் மாவட்டங்களில் வாழும் மக்களிடம் மலையாளச் சொற்களும், தமிழகத்தில் ஓசூர் பகுதிகளில் வாழும் மக்களிடம் கன்னடச் சொற்களும் பெரும்பான்மை கலந்திருக்கின்றன. இவ்வாறான மொழிக்கலப்பும் பண்பாட்டுக் கலப்பும் தமிழகத்தில் வழக்கத்தில் உள்ள நாட்டுப்புறக் கதைகளிலும், கதைப்பாடல்களிலும், நாட்டுப்புறப் பாடல்களிலும் பரவலாக இடம்பெற்றமையைக் காணலாம்.

*ஜருகண்டி ஜருகண்டி*
*ஜானகிராமன் வர்ராண்டி*
*கஷ்டத்தில இருப்பவர்களை*
*சரக்கு பெண்டியிலே ஏத்திக் கொண்டு*
*காட்டுக்குப் போறாண்டி*
*ஜருகண்டி ஜருகண்டி. . .*

என்று தொடங்கும் பாடலால் இம்மொழிக் கலப்பினைக் காணலாம். இங்கு ஜருகண்டி என்பது தெலுங்குச் சொல், இச்சொல் கொண்ட பாடல் தமிழக-ஆந்திர எல்லைப் பகுதியில் பாடப்படுகிறது. இதுபோல் பண்பாட்டுக் கலப்பும் பல நாட்டுப்புறக் கதைப்பாடல்களிலும் கதைகளிலும் அமைந்திருக்கக் காணலாம்.

### 13.3.3. ஒலியனியல்

ஒலியனியல் (Phonology) என்பது, மொழிகளில் ஒலிகள் எவ்வாறு முறைப்படி ஒழுங்கமைக்கப்பட்டு உள்ளன என்பது குறித்து ஆய்வு செய்யும் ஒரு துறை. இது மொழியியலின் ஒரு துணைத்துறையாக உள்ளது. பொதுவாக இத்துறை ஒலியன் தொகுதிகள் குறித்தே கவனம் செலுத்தினாலும், மொழியியல்

குறிப்பு

பொருளைக் கொடுக்கும் வகையில் ஒழுங்கமைக்கப்பட்ட எல்லா மொழிக் கூறுகளின் பகுப்பாய்வுகளையும் இது உள்ளடக்கக் கூடும். சைகை மொழிகளில் உள்ள இணையான ஒழுங்கமைப்பு முறைகள் குறித்த ஆய்வுகளையும் ஒலியனியல் உள்ளடக்கும்.

ஒலியனியல், ஒலியியலில் (Phonetics) இருந்து வேறுபட்டது. ஒலியியல், பேச்சொலிகளின் உற்பத்தி, கடத்தல், கேட்டுணர்தல் என்பவை குறித்துக் கவனம் செலுத்தும் அதே வேளை, ஒலியனியல், ஒரு குறித்த மொழியிலோ அல்லது பல மொழிகளிலோ பொருளுணர்த்துவதற்காக ஒலிகள் செயற்படும் முறை குறித்து விளக்குகிறது. ஒரு மொழியில் உள்ள பேச்சொலிகளை அடிப்படையாகக் கொண்டு, சில கொள்கைகளின் அடிப்படையில், ஒலிகளை ஒலியன்களாக இனங்கண்டு, அவற்றின் வருகையிடங்கள், சேர்க்கைகள், அதன் மூலம் அமையும் அசைகள் போன்ற தகவல்களையும், அவற்றுக்கான விளக்கங்களையும் கொடுப்பதே ஒலியனியலின் பணியாகும். ஒலியியல் விளக்க மொழியியலையும், ஒலியனியல் கோட்பாட்டு மொழியியலையும் சார்ந்தவை என்பது பல மொழியியலாளர்களின் கருத்து. இருபதாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில், ஒலியன் குறித்த தற்காலக் கருத்துரு வளர்ச்சியடைவதற்கு முன் இவ்வாறு பிரித்துப் பார்க்கும் முறை இருக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. தற்கால ஒலியனியலின் துணைத்துறைகள் சிலவற்றின் ஆய்வுப் பரப்புகள், உளமொழியியல், பேச்சுணர்தல் போன்ற ஒலியலின் விளக்கமுறை சார்ந்த எல்லைகளுக்குள்ளும் விரிவடைந்து காணப்படுகின்றன.

தமிழகமெங்கும் பரவிக் கிடக்கும் நாட்டுப்புற மக்களால் இலக்கிய வழக்குச் சொற்களை உரிய முறைப்படி உச்சரிப்பதில்லை. அந்தக் சொற்களுக்குள்ள ஒலியில் ஒலிக்காமல் மாற்றொலியில் பேசுகின்றனர். இவ்வாறு அமைந்தவற்றை நாட்டுப்புற வட்டாரச் சொற்கள் என்ற பகுப்புக்குள் அடக்கலாம். ஒரு வட்டத்தில் பேசப்படும் ஒரு சொல் மக்களின் வழக்கத்தில் வேற்று ஒலியனாக ஒலிக்கப்படுவதைக் காட்டும். குறிப்பாக, இகரம் எகர ஒலியாகவும், உகரம் ஒகர ஒலியாகவும் மாறி ஒலிப்பதைக் காணலாம். இலை என்பதை எலை என்றும், இழவு

என்பதை எழவு என்றும், உரல் என்பதை ஒரல் என்றும், குரல் என்பதை கொரல் என்றும் சுட்டுவதைக் குறிப்பிடலாம்.

குறிப்பு

## 13.3.4. ஒலியியல் (மொழியியல்)

மொழியியலில் ஒலியியல் (Phonetics) என்பது, மனிதர்கள் பேசும்போது உருவாகும் ஒலிகளைப் பற்றிய ஆய்வு ஆகும். இது மொழியியலின் ஒரு துணைப்புரிவு ஆகும். இத்துறை, பேச்சு ஒலிகளின் இயற்பியல் இயல்புகள் பற்றிக் கவனம் செலுத்துகின்றது. இத்துறையின் ஆய்வுகள், ஒலிகளின் உடலியங்கியல் சார்ந்த உற்பத்தி, அவற்றின் ஒலியியல் தன்மைகள், அவற்றைக் கேட்டுணர்தல், அவற்றின் நரம்புசார் உடலியங்கியல் சார்பானவற்றை உள்ளடக்குகின்றன.

ஒலியியல் ஆய்வின் கருப்பொருட்களான ஒலிகள் (Phones), மனிதர்களினால் உச்சரிக்கப்படும் உண்மையான பேச்சொலிகளாகும். எழுத்து மொழிகளும் எழுத்துக்களும் பேச்சின் ஒலிகளோடு நெருங்கிய தொடர்புடையன எனினும், உண்மையில் ஒலியியலாளர்கள் பேச்சொலிகளையே கவனத்தில் எடுக்கிறார்களேயன்றி அவைகளைக் குறிக்கும் குறியீடுகளை அல்ல. எனினும் முன் கூறிய நெருங்கிய தொடர்பு காரணமாக பல அகராதிகள் குறியீடுகள் பற்றிய ஆய்வை ஒலியியலாய்வின் ஒரு பகுதியாகக் காட்டுகின்றன. இந்நிலையிலே நாட்டுப்புற மக்களால் பேசப்பட்டு வரும் வழக்குச்சொற்களைத் தொகுக்கும் பணிகள் நடைபெற்று தமிழக நாட்டுப்புற வட்டார வழக்குச்சொல் அகராதிகள் வெளிவந்திருக்கின்றன.

### முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

1. மொழியியல் ஆய்வு மேற்கோள்ளப்பட்ட துறைகள் யாவை?
2. அறிதிற அறிவியல் என்றால் என்ன?
3. ஒப்பீட்டு மொழியியல் என்றால் என்ன?
4. மொழியியலில் ஒலியியலின் பங்கு என்ன?

## 13.3.5. சமூக மொழியியல்

சமூக மொழியியல் என்பது, பண்பாட்டு நெறிமுறை, எதிர்பார்ப்புகள், சூழல் என்பவை அடங்கிய சமூகத்தின் எல்லா அம்சங்களும், மொழி பயன்படுத்தப்படும் முறையில் ஏற்படுத்தும்

குறிப்பு

தாக்கங்கள் பற்றி ஆய்வு செய்யும் துறையாகும். இனம், சமயம், தகுதி, பால், கல்விநிலை போன்ற சமூகக் காரணிகளால் வேறுபடுத்தப்படுகின்ற குழுக்களிடையே எவ்வாறு மொழி வேறுபடுகின்றது, எவ்வாறு இத்தகைய வேறுபாடுகளின் தோற்றமும், கடைப்பிடிப்பும், தனிமனிதர்களை இவ்வாறான சமூக வகுப்புகள் அல்லது சமூகப் பொருளாதார வகுப்புகளுள் வகைப்படுத்துவதற்குப் பயன்படுகின்றன போன்றவை சமூக மொழியியலின் கீழ் ஆய்வு செய்யப்படுகின்றன. மொழியின் பயன்பாடு இடத்துக்கிடம் வேறுபடுவதுபோல், சமூகப் பிரிவினர் மத்தியிலும் மொழிப் பயன்பாடு வேறுபட்டுக் காணப்படுகின்றது.

## 13.3.6. பயன்பாட்டு மொழியியல்

பயன்பாட்டு மொழியியல் அல்லது பயனாக்க மொழியியல் என்பது, மொழியியலின் ஒரு பிரிவாகும். இது மொழியியற் கோட்பாடுகளை உலகின் நடைமுறைப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணப் பயன்படுத்துவதைக் குறிக்கோளாகக் கொண்டது. இது மொழிக் கல்வி, இரண்டாம் மொழிக்கற்றல் போன்ற துறைகளிலேயே அதிகம் பயன்பட்டு வந்தது. இத்துறை மொழிக்கற்றல் ஆய்வுகளுக்கு மட்டுப்படுத்தப்பட்டது என்பவர்களுக்கும், இல்லை, இது மொழியியற் கோட்பாடுகளின் பயன்பாடுகள் அனைத்தையும் உள்ளடக்குகிறது என்போருக்கும் இடையே தொடர்ச்சியான இழுபறிநிலை இருந்து வந்தது. தற்காலத்தில், மொழியியல் தொடர்பான அறிவு பல்வேறுபட்ட அறிவுத் துறைகளுக்கும் தேவையான ஒன்றாக உள்ளது. இலக்கியம், நாட்டுப்புறவியல், அகராதியியல், சமூகவியல், மானிடவியல் போன்ற துறைகளிலும், உளவியல், கணினி அறிவியல், நரம்பியல், தகவல் தொடர்பியல் போன்ற அறிவியல் சார்ந்த துறைகளிலும் மொழியியலின் தேவை பெருமளவுக்கு உணரப்பட்டுள்ளது. இத்துறைகளிலான ஆய்வுகளில் மொழியியல் கோட்பாடுகள் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

## 13.3.7. மானிடவியல்சார் மொழியியல்

மானிடவியல்சார் மொழியியல் (Anthropological Linguistics) என்பது, மொழி, பண்பாடு ஆகியவற்றுக்கு இடையிலான தொடர்புகளை ஆய்வு செய்யும் ஒரு துறை ஆகும். இத்துறை, மனித உயிரியல், அறிதிறன், மொழி ஆகியவற்றுக்கு இடையிலான தொடர்புகளையும்

ஆய்வுக்கு எடுத்துக் கொள்கிறது. இது, மனிதர்களை அவர்களுடைய மொழிக்கூடாக ஆய்வு செய்யும் மானிடவியற் துறையான மொழியியல்சார் மானிடவியல் துறையுடன் உறவு கொண்டுள்ளது.

குறிப்பு

## 13.3.8. மொழியியல்

மொழியியல் (Linguistics) என்பது, ஒரு மொழியை அறிவியல் முறைப்படி ஆராய்வதற்குரிய ஒரு துறையாகும். மொழியின் வடிவம், பொருள், சூழல் போன்றவற்றையும் மொழியியல் ஆய்வு செய்கிறது. முன்னதாக 4ஆம் நூற்றாண்டில் இந்திய இலக்கண அறிஞரான பானிணி மொழியைப் பற்றி ஒரு முறையான ஆய்வு விளக்கத்தை எழுதியுள்ளார். இந்நூலில் இவர் சமஸ்கிருத மொழியைப் பற்றி ஆய்வு செய்து முறையான விளக்கத்தை எழுதியுள்ளார்.

மொழியியலாளர்கள் ஒலி மற்றும் அர்த்தத்திற்கு இடையிலான ஓர் ஒற்றுமையைக் கவனிப்பதன் மூலம் பாரம்பரியமாக மனித மொழியைப் பகுப்பாய்வு செய்கின்றனர். ஒலிப்பியல் என்பது பேச்சு மற்றும் உரையாடல் ஒலிகளைப் பற்றிய ஆய்வு ஆகும். மேலும் இது அவர்களின் ஒலி தொடர்பான மற்றும் ஒலிகளைத் தெளிவாக உச்சரிப்பதற்குரிய உச்சரிப்பொலியியல் பண்புகளுக்குள்ளும் நுழைகிறது. மறுபுறம், மொழியின் அர்த்தத்தை ஆய்வு செய்து உலகின் பிற கூறுகள், பண்புகள் மற்றும் உலகின் பிற அம்சங்கள் ஆகியவற்றிற்கு இடையேயான உறவுகளை எவ்வாறு புரிந்துகொள்வது, செயல்படுத்துவது மற்றும் பொருளை வழங்குவது, அத்துடன் எவ்வாறு நிர்வகிப்பது, தோன்றும் கருத்து மயக்கத்தை எவ்வாறு தீர்ப்பது ஆகியவற்றைப் பற்றியும் மொழியியல் பேசுகிறது. அதேவேளையில் சொற்பொருள்களைப் பற்றிய ஆய்வு, சூழல் எவ்வாறு மொழிக்கான பொருளை உருவாக்குகிறது என்ற உண்மை நிலையையும் ஆராய்வதை மொழியியல் நடைமுறையாகக் கொண்டுள்ளது.

இலக்கணம் என்பது ஒரு மொழியில் சொற்களின் உற்பத்தி மற்றும் பயன்பாட்டை நிர்வகிக்கும் விதிமுறைகள் தொடர்பான நடைமுறையாகும். இவ்விதிமுறைகள் ஒலிகளுக்கும் அவை தரும் பொருளுக்கும் பொருந்தும். மேலும், ஒலிக்கும் ஒலியமைப்புகளின் அமைப்பு சார்ந்த குரலியல், சொற்களின் அமைப்பு மற்றும் உருவாக்கம்

குறிப்பு

சார்ந்த உருபனியல், சொற்றொடர்கள் உருவாக்கம் மற்றும் அமைப்பு சார்ந்த தொடரியல் உள்ளிட்டவற்றின் உட்கூறுகள் சார்ந்த துணைவிதிகளையும் இலக்கணம் வரையறை செய்கிறது. இலக்கணத்தின் கொள்கைகளில் நவீன இலக்கணக் கோட்பாடுகள் கவனம் செலுத்துகின்றன.

## 13.3.9. நாட்டுப்புறவியலும் மொழியியல் அறிஞரும்

மொழியியல் ஆய்வு நெறிமுறை நாட்டுப்புறவியல் ஆய்வு முறைக்கு மாதிரியாக அமைந்தது. நாட்டுப்புறவியலின் தந்தை எனக் கருதப்படும் ஜேக்கப் கிரிம் (Jacob Grim) மொழி நூல் (Philology) துறையைச் சார்ந்தவர். இவர் மொழியியலில் பயன்படும் ஒப்பு ஆய்வை நாட்டுப்புற இயலுக்கும் பயன்படுத்தினார். ஜேக்கப் கிரிமின் ஆய்வினைப் பின்பற்றி மாக்ஸ் முல்லர் (Max Muiller) (கி.பி.1823-1900) என்னும் ஆய்வாளர் புராணங்களைப் பற்றி ஆராயலானார். இவர் வடமொழியிலும், ஒப்பாய்விலும் வல்லுநர் என்பது குறிப்பிடத்தக்கது. இதன் விளைவாக இந்தோ-ஐரோப்பிய மொழிகளின் பொதுவான தோற்றம் பற்றிய கோட்பாட்டினை முன்மொழிந்தார். இந்தோ- ஐரோப்பிய மொழிகளின் தோற்றம் ஒரு முந்தைய தாய்மொழி மூலத்துக்கு இட்டுச் செல்வதாக இக்கோட்பாடு அமைந்தது. இந்த ஒப்பியல் முறையைக் கொண்டு பார்க்கும் போது நாட்டார் வழக்காற்றியல் துறையிலும் ஒரே தன்மையான கூறுகள் முந்தைய மக்களிடம் இருந்து வந்திருக்க வேண்டும் என்பது தான் கருத்து.

## 13.3.10. வாய்மொழிப் பாடலும் பயன்பாடும்

வாய்மொழிக் கதைப் பாடல் என்பது எழுதப்படாத, ஆனால் மொழிப்பயன்பாடு மிக்கது. கதைப் பாடல் பாடுபவரது மொழித் திறனை ‘வாய்பாடு“ என்பதன் மூலம் அறியலாம். அந்த வாய்பாட்டினைப் பயன்படுத்துவோன் யாப்பு பற்றி எதுவும் அறியாதவன். என்றாலும் அவனது பாடலில் யாப்பு அமைதி, ஓசை நயம் போன்றவை தாமாகவே அமைந்து இருக்கும். அவை அப்பாடலை மனனம் செய்வதற்குப் பயன்படுகின்றன. அப்பாடல் பின்வருமாறு:

*ஒருகளஞ்சு பொன் தருவோம்*
*ஒண்ணுதலே மருத்துவமே*

*ரெண்டுகளஞ்சு பொன் தாறோம்*

*சகியே வளர என்றாள்*

*மூணு களஞ்சு பொன் தாறோம்*

*மொய் குழலே மருத்துவமே*

*. . . . . . . . . . . . . . . . . . . . .*

*பத்துக்களஞ்சு பொன் தருவோம்*

*பாவையரே மருத்துவமே*

எனும் இப்பாடலில் மொழித் திறனைப் பார்க்க முடிகிறது.

## முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

5. சமூக மொழியியல் என்றால் என்ன?
6. மானிடவியல்சார் மொழியியல் என்றால் என்ன?
7. நாட்டுப்புறவியலை மொழியியல் ஆய்வுக்கு உட்படுத்திய முதல்வர் யார்?
8. இந்தோ-ஐரோப்பிய மொழியியல் கோட்பாட்டை வகுத்தவர் யார்?

## 13.4. நாட்டுப்புற இலக்கியக் கூறுகள்

நாட்டுப்புற இலக்கியத்தின் வேர்கள் மனித சமுதாயத்தில் மிக ஆழமாகப் பதிந்துள்ளன. நாட்டுப்புற இலக்கியமானது மனித சமுதாயம் எதை அனுபவித்ததோ, எதைக் கற்றதோ அதைக் குவித்து வைத்திருக்கும் சேமிப்பு அறையாகும் என்பர். எனவே நாட்டுப்புற இலக்கியம் மண்ணின் மணத்தைப் பரப்பும் சிறப்பினைக் கொண்டது. நாட்டுப்புற இலக்கியம் என்ற வகைமைப்பாட்டிற்குப் பல கூறுகளைக் காண முடியும். அவை,

1. நாட்டுப்புறப் பாடல்கள்
2. நாட்டுப்புறக் கதைகள்
3. நாட்டுப்புறக் கதைப்பாடல்கள்
4. நாட்டுப்புறப் பழமொழிகள்
5. விடுகதைகள்
6. புராணங்கள்

முதலியனவாகும். இனி இவற்றை ஒவ்வொன்றாகப் பார்க்கலாம்.

## 13.4.1. நாட்டுப்புறப் பாடல்கள்

குறிப்பு

நாட்டுப்புறப் பாடல்கள் முன்னைப் பழமைக்கும் பழமை வாய்ந்தவை. பின்னைப் புதுமைக்கும் புதுமையாகவும் விளங்குகின்றன. இப்பாடல்கள் இனியவை, எளியவை, எழுதப்படாதவை, வாயில் பிறந்து, செவிகளில் நிறைந்து உள்ளத்தில் பதிவு பெறுபவை. இப்பாடல்கள் என்று பிறந்தவை, எவரால் பாடப்பெற்றவை என்று உறுதியாக அறுதியிட்டுச் சொல்ல முடியாத பெருமையினைக் கொண்டவை. இப்பாடல்கள் எழுத்திலக்கியப் பாடல்களைப் போன்று எதுகை, மோனை, இயைபு, இரட்டைக் கிளவி என்ற யாப்பிலக்கணத்தின் கட்டுக் கோப்பில் அமைந்துள்ளன.

நாட்டுப்புறப் பாடல்கள் அவை பாடப்படும் சூழல், நிகழ்வுகளின் தன்மை இவற்றை அடிப்படையாகக் கொண்டு வகைப்படுத்தப் படுகின்றன. முனைவர் சு. சக்திவேல் சூழல் அடிப்படையில் எட்டாகப் பிரித்து, அவற்றில் உட்பிரிவுகளையும் வகைப்படுத்தியுள்ளார்.

### 13.4.1.1. தாலாட்டுப் பாடல்கள்

தாலாட்டுப் பாடல் என்பது தாய்மை உணர்வின் வெளிப்பாடாகும். அப்பாடல்களில் வெளிப்படும் உணர்வுகளின் தன்மையினைக் குழந்தை பற்றியனவும், குழந்தைக்குரிய பொருள்கள் பற்றியனவும், குழந்தைகளின் உறவினர் பெருமை பற்றியனவும் எனப் பிரித்துள்ளனர்.

குழந்தைப் பாடல்கள், குழந்தை உள்ளத்தைப் புலப்படுத்துவனவாக அமைந்திருக்கும். அதில் பொருள் அமைவதைவிட ஓசை நிறைவுகளே அதிகமாகக் காணப்படும். இப்பாடல்களை மேலும், குழந்தை வளர்ச்சிநிலைப் பாடல்கள், மற்றவர்கள் பாடும் குழந்தைப் பாடல்கள், சிறுவர் பாடல்கள் என்றெல்லாம் பிரித்துப் பார்க்கலாம்.

### 13.4.1.2. காதல் பாடல்கள்

காதல் பாடல்களை இருவகையாகப் பிரிக்கலாம். ஒன்று, காதலர்களே பாடுவது, மற்றொன்று, காதலர்கள் அல்லாதவர்கள் தொழில் செய்யும் போது பாடுவது. ஆனால் பெரும்பாலும் நாட்டுப்புறக் காதல், தொழில் செய்யுமிடங்களில் தான் பிறக்கிறது. வண்டிக்காரன் பாடும்

தெம்மாங்குப் பாடல்களில் காதல் சுவையைக் காணலாம். உறவில் இன்பம் காண்பதும், பிரிவில் வேதனையடைவதும் பாடலின் பொருளாக அமையும்.

### 13.4.1.3. தொழிற்பாடல்கள்

மனிதர்கள் கூடித் தொழில் செய்யும்போது அக்கூட்டுறவில் பிறப்பவை தொழில் பாடல்கள். தொழில் பாடல்களிலே அன்பு மலர்வதையும், பாசம் பொங்குவதையும், உழைப்பின் ஆர்வத்தையும், நன்மையில் ஈடுபாட்டையும், தீமையில் வெறுப்பையும் காணலாம். தொழில் பாடல்கள் தொழிலாளர்களது இன்ப துன்பங்களையும், நெஞ்சக் குமுறல்களையும், ஆசாபாசங்களையும், விருப்பு, வெறுப்புகளையும் வெளியிடுகின்றன. தொழில் பாடல்களை ஏலோலங்கிடி பாட்டு, தில்லாலங்கடி பாட்டு, தெம்மாங்குப் பாட்டு, ஏற்றப் பாட்டு, வண்டிக்காரன் பாட்டு என்றெல்லாம் வழங்குவர்.

### 13.4.1.4. கொண்டாட்டப் பாடல்கள்

மனிதன் தன் மகிழ்ச்சியினை ஆடியும் பாடியும் பலரோடு கலந்து கொண்டாடுகிறான். அவ்வெளியீட்டில் தொன்மையான கலைச் சிறப்பையும் மக்களது பண்பாட்டின் சிறப்பினையும் அறியமுடியும். மனிதனின் உழைப்பிற்குப்பின், அவனது மனமானது ஆடல், பாடல்களில் ஈடுபடுகிறது. இப்பாடல்களை அகப்பாடல், புறப்பாடல் என்று பிரிக்கலாம்.

### 13.4.1.4.1. அகப்பாடல்

சமூகத்திலுள்ள பலரும் இணைந்து குழுவாகப் பாடப்படுவது. பூப்புச் சடங்குப் பாடல், திருமணம், பரிகாசம், நலுங்கு, ஊஞ்சல், வளைகாப்புப் பாடல்கள் போன்றவற்றைக் கூறலாம்.

### 13.4.1.4.2. புறப்பாடல்

பலரும் கலந்தாடும் கும்மி, கோலாட்டம் போன்ற ஆட்டங்களில் பாடப்படும் பாடல்களைப் புறப்பாடல்கள் எனலாம்.

### 13.4.1.5. பக்திப் பாடல்கள்

ஆதி காலத்தில் மக்கள் இயற்கையோடு இயைந்த வாழ்வு நடத்தினர். இயற்கையின் சக்திகளைத் தெய்வங்களாகக் கருதி

வழிபட்டனர். அதிலிருந்து விழாக்களும், பண்டிகைகளும், பலிகளும் தோற்றம் பெற்றன. இவ்வழிபாடுகளை மூன்று நிலைகளில் மக்களிடையே காணமுடியும். இயற்கை வழிபாட்டுப் பாடல்கள், சிறுதெய்வப் பாடல்கள், பெருந்தெய்வப் பாடல் என அமையும். இயற்கை வழிபாட்டுப் பாடல் ஒன்றினைப் பின்வருமாறு காணலாம்.

*சந்திரரே சூரியரே*
*சாமி பகவானே*
*இந்திரரே வாசுதேவா*
*இப்பமழை பெய்யவேணும்*
*மந்தையிலே மாரியாயி*
*மலைமேலே மாயவரே*
*இந்திரரே சூரியரே*
*இப்பமழை பெய்யவேணும்*

இப்பாடலில் தொன்று தொட்டு வரும் இயற்கை வழிபாட்டைக் காணலாம். நிலா, மழை, ஒளி, பாம்பு, பசு ஆகியவற்றை நாட்டுப்புற மக்கள் வழிபடுகின்றனர். அவ்வாறு வழிபடும்போது இத்தகைய இயற்கைப் பாடல்களைப் பாடுகின்றனர்.

### 13.4.1.6. ஒப்பாரிப் பாடல்கள்

இறந்தவர்களை நினைத்து அவர்கள் மீது பாடப்படும் பாடல்களை ஒப்பாரி என்பர். இறந்தவர்களின் இழப்பை எண்ணி, இறந்தவர்களையும் தம்மையும் ஒப்புச் சொல்லி அதாவது ஒப்பிட்டுப் பாடுவது ஒப்பாரியாகும். இறந்தவரின் பெருமையும் அவரது குணநலன்களும் பிறரால் போற்றப்பட்ட முறையும், ஒப்பாரி பாடுகின்றவர்கள் இறந்தவரை நேசித்த முறையும், தன்னுடைய நிலைமை, குடும்பத்தின் நிலைமை, ஈமச் சடங்குகள் பற்றிய விவரங்களும் அப்பாடல்களில் கூறப்படுவதுண்டு.

### 13.4.1.7. பன்மலர்ப் பாடல்கள்

ஒரே பாடலில் ஒன்றுக்கு மேற்பட்ட தன்மை இருப்பின் அப்பாடல் பன்மலர்ப் பாடல் எனப்படும்.

### முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

9. நாட்டுப்புற இலக்கியக் கூறுகள் யாவை?

10. நாட்டுப்புறப் பாடல் வகைகள் யாவை?

11. தொழிற்பாடல்களின் வேறுபெயர்கள் யாவை?

12. கொண்டாட்டப் பாடல்களின் வகைகள் யாவை?



## 13.4.2. நாட்டுப்புறக் கதைகள்

நாட்டுப்புற மக்களிடையே கதை கூறுவது என்பது பொதுவான பண்பாகும். மக்கள் தங்களது வாழ்வியல் நீதிகளுக்காகவும், பொழுது போக்கிற்காகவும் கதைகளை உரைத்தனர். இன்றளவும் உரைத்து வருகின்றனர். நாளையும் கதையினைக் கூறுவார்கள். ஏனென்றால் கதையினைக் கூறுபவரும், கதையினைக் கேட்பவரும் அந்தந்தக் கதைகளோடு தங்களையும் இணைத்துக் கதை கேட்கின்றனர்.

## 13.4.4.1. கதைகளின் வகைகள்

முனைவர் சு. சக்திவேல் நாட்டுப்புறக் கதைகளை ஆறு வகையாகப் பிரிக்கின்றார். அவை, மனிதக் கதைகள், மிருகக் கதைகள், மந்திர - தந்திரக் கதைகள், தெய்வீகக் கதைகள், இதிகாச புராணக் கதைகள், பல்பொருள் பற்றிய கதைகள் என்பனவாகும்.

## 13.4.4.2. கதைகளின் சிறப்புக் கூறுகள்

இக்கதைகளின் முக்கிய நோக்கம் மக்களுக்கு அறக்கோட்பாட்டை உணர்த்துவதே ஆகும். வளரும் குழந்தைகளுக்கு அது நீதி போதனைக் களஞ்சியமாகத் திகழ்கிறது. வாழ்க்கைப் பிரச்சனை, ஆசை, துன்பம், சாதிப் பூசல், காதல், ஒழுக்கம், வேதனை, முட்டாள்தனம், பொறாமை, மன உணர்வெழுச்சி, கள்ள நட்பு, மந்திரம், புத்திசாலித்தனம், நீதி முதலிய வற்றைக் கூறுவதாக அமையும். மொத்தத்தில் இக்கதைகள் பயன்பாட்டு இலக்கியம் ஆகின்றன. சமூக வரலாற்றை அறியப் பெரிதும் துணை புரிகின்றன. பண்பாட்டுக் கூறுகளை மீட்டுருவாக்கம் செய்கின்றன. பழங்காலச் சமுதாயச் செய்திகளையும், சமகாலச் செய்திகளையும் இவற்றால் அறிய முடிகின்றது.

## 13.4.5. நாட்டுப்புறக் கதைப்பாடல்கள்

தனிமனித வாழ்க்கையின் முக்கிய நிகழ்வுகளைப் பிறப்பு முதல் இறப்பு வரைக்கும் கதையினைப் போன்று அதே சமயம் பாடலாகப் பாடுவது கதைப்பாடலாகும். காப்பியத்தில் தன்னிகரில்லாத் தலைவனின்

வளப்பம் மிகுந்த செயல்பாடுகள் எழுதப்படுகின்றதைப்போல நாட்டுப்புறக் கதைப் பாடலில் கதைத் தலைவனின் வீர தீரச் செயல்கள் பாடப்படும். கதைப் பாடல்கள் வரலாறுகள் அல்ல. அவை வீரக் காவியங்கள், மனிதப் பண்பின் உயர்ந்த அம்சங்களைப் போற்றுபவை என்கிறார் நா. வானமாமலை. இவை கதைப்பாடல்களின் இயல்புகள் என்றே கூறலாம்.

குறிப்பு

### 13.4.5.1. கதைப்பாடலின் தன்மை

கதைப் பாடலில் கீழ்க்காணும் முக்கியக் கூறுகள் காணப்படுகின்றன.

- கதையில் நிகழ்ச்சிப் போக்கு உண்டு (Action)
- பாத்திரங்கள் வாயிலாக விளக்கப் பெறும் (Characters)
- கதைக் கரு உண்டு (Theme)
- வீரப்பண்புக்கு முக்கியத்துவம் கொடுக்கப் பெறும் (Prominence of Heroism), உரையாடல் (Dialogue) உண்டு
- திரும்பத் திரும்ப வரல் (Repetition)

### 13.4.5.2. கதைப்பாடலின் அமைப்பு

கதைப் பாடலின் அமைப்பில் நான்கு முக்கியப் பகுதிகள் உள்ளன. அவையாவன, காப்பு அல்லது வழிபாடு, குரு வணக்கம், வரலாறு, வாழி என்பவையாகும்.

### 13.4.6. நாட்டுப்புறப் பழமொழிகள்

பழமொழி என்ற சொல்லே மிகப் பழமையானவற்றை உணர்த்துவதாகும். பலரது அறிவையும் ஒருவரது நுண்ணுணர்வையும் அதிலிருந்து பெறுகின்றன. அறிவின் சுருக்கமே பழமொழி எனலாம். பழமொழிகள் மக்களது வாழ்வுடன் வாழ்வாகப் பின்னிப் பிணைந்துள்ளன. மக்களின் வாழ்வில் நாளும் பழக்கத்தில் உள்ள மொழி, எதுகை மோனையுடன் ஒரு கருத்தினைக் கூறுதல், விளக்கம் செய்யும் வகையில் எடுத்துக் கூறுதல் ஆகியவற்றைக் கொண்டதே பழமொழியாகும். இவை சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் ஆற்றல் மிக்கவைகளாகும்.

### 13.4.6.1. பழமொழியின் இயல்புகள்

- பழமொழியின் முக்கிய இயல்பு, சுருக்கம், தெளிவு, பொருத்தமுடைமை.

- அறவுரையையும், அறிவுரையையும் கொண்டிருக்கும்.
- ஒவ்வொரு பழமொழியும் விளக்கக் கூறு (Descriptive element) ஒன்றினைப் பெற்றிருக்கும்.
- பழமொழிக்கு ஒரு சொல்லில் அமைவதில்லை.

### 13.4.6.2. பழமொழி வகைப்பாடு

முனைவர் சு. சக்திவேல் தமிழ்ப் பழமொழிகளை ஐந்து வகையாக வகைப்படுத்துகிறார்.

1. அளவு அடிப்படை (Size Basis)
2. பொருள் அடிப்படை (Subject Basis)
3. அகரவரிசை அடிப்படை (Alphabetical Basis)
4. அமைப்பியல் அடிப்படை (Structural Basis)

5.) பயன் அடிப்படை (Functional Basis)

### 13.4.7. விடுகதைகள்

விடுகதை என்பது ஏதாவது ஒரு கருத்தைத் தன்னிடம் மறைத்துக் கொண்டு கூறுவது. இதனை அறிவுத்திறத்தோடு ஆராய்ச்சி செய்யும் பொழுது, குறைந்த பட்சம் சிந்தனை செய்யும் பொழுதுதான் புலப்படும். மேலும் ‘விடுகதை’ என்ற நாட்டுப்புற வழக்காற்றில் ஈடுபாடும் விருப்பும் உடையவர்களால் விடுகதையிலுள்ள ‘புதிருக்கு’ (புரியாத நிலையிலுள்ளது) விடையினைக் கூறமுடியும். இவ்வாறு விடுகதை என்பது,

- அறிவு ஊட்டும் செயல்
- சிந்தனையைத் தூண்டுதல்
- பயனுள்ள பொழுது போக்கு

என்ற வகையில் அமைந்து மக்களின் வாழ்வில் இடம் பெற்றுள்ளது.

### 13.4.7.1. விடுகதையின் வகைகள்

விடுகதைகளை, பயன்பாட்டு அடிப்படையில் நான்கு வகையாகப் பிரிக்கின்றார் டாக்டர் ச. வே. சுப்ரமணியம் அவர்கள். அவை,

- விளக்க விடுகதைகள் (Descriptive Riddles)
- நகைப்பு விடுகதைகள் (Witty question Riddles)

- கொண்டாட்ட விடுகதைகள் (Ritualistic Riddles)
- பொழுதுபோக்கு விடுகதைகள் (Recreative Riddles)

குறிப்பு

விடுகதையை அமைப்பியல் ஆய்வின் அடிப்படையில் இரண்டாக வகைப்படுத்தலாம். அவை,

ஒன்று, உருவகமில்லாதது (Literal). சான்று:
*'சிவப்புச் சட்டிக்குக் கறுப்பு மூடி'* - (குன்றி மணி)
இரண்டு, உருவகமுடையது. சான்று :
*'செத்துக் காய்ந்த மாடு சந்தைக்குப் போகுது'* (கருவாட்டு)

இவ்வாறு விடுகதைகளும் பழமொழிகளும் மக்களின் வாழ்வில் பயனுள்ள வகையில் பொழுதைக் கழிப்பதற்கும், சிந்திப்பதற்கும் துணை நின்று உள்ளன. இன்றும் விடுகதை, பழமொழி இவற்றை, தமிழ்நாட்டில் ஒரு குறிப்பிட்ட வானொலியின் பண்பலை ஒலிபரப்பு நிகழ்ச்சிகளில், நிலையத்தார் வானொலி கேட்பவர்களிடம் தொலைபேசி வழிக் கேட்பதையும் கேட்க முடியும். நாட்டுப்புற வழக்காறும் நாகரிகம் மிகுந்த மக்களின் வாழ்க்கையில் மக்கள் தொடர்புச் சாதனங்களில் இடம்பெறுவது குறிப்பிடத்தக்கது.

## 13.4.8. புராணங்கள்

புராணக் கதைகள் மனித மனத்தின் அடித்தளத்தில் உள்ள எண்ணங்களை மையமாகக் கொண்டவை. அத்தகைய புராணக்கதைகள் அன்று முதல் இன்றுவரை வாழ்ந்து வருகின்றன. அறிவியல் வளர்ச்சியில்லாத காலத்தில் மனித வாழ்வில் அனுபவித்த முரண்பாடுகள், விந்தைகள், சிக்கல்கள் ஆகியவற்றுக்குத் தீர்வாகப் புராணக்கதைகள் இருந்துள்ளன. சடங்குகள் தான் புராணங்கள் தோன்றுவதற்கு அடிப்படைக் காரணமாக இருந்துள்ளன. சமயத்தின் ஆழ்ந்த நோக்கு, அடிப்படைக் கருத்துகள் புராணங்களில் தோய்ந்து கிடக்கின்றன.

### 13.4.8.1. புராணங்களின் வகைகள்

தமிழிலுள்ள புராணங்களை மக்களிடையேயுள்ள, வாய்மொழிப் புராணங்கள் (Oral Puranas), எழுத்திலக்கியப் புராணங்கள் (தல புராணங்கள்) என்று பகுத்து ஆராயலாம்.

குறிப்பு

## முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

9. நாட்டுப்புறக் கதைகளின் வகைகள் யாவை?
10. கதைப்பாடல்களின் இயல்புகள் யாவை?
11. பழமொழியின் வகைப்பாடுகள் யாவை?
12. விடுகதை எத்தனை வகைப்படும்? அவை யாவை?

## 13.5. தொகுத்துக் காண்போம்

- மொழியியல் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- மொழியியலுக்குள் இருக்கம் பல்வேறு பிரிவுகள் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- நாட்டுப்புறவியலில் மொழியியலின் கூறுகள் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- நாட்டுப்புற இலக்கியக் கூறுகள் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.

## முன்னேற்றத்தைச் சோதிக்கும் வினாக்களுக்கான விடைகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | 13.3. | 2. | 13.3.1. |
| 3. | 13.3.2. | 4. | 13.3.4. |
| 5. | 13.3.5. | 6. | 13.3.7. |
| 7. | 13.3.9. | 8. | 13.3.9. |
| 9. | 13.4. | 10. | 13.4.1. |
| 11. | 13.4.1.3. | 12. | 13.4.1.4. |
| 13. | 13.4.4.1. | 14. | 13.4.5. |
| 15. | 13.4.6.3. | 16. | 13.4.7.1. |

## 13.7. பாடம் பயின்றபின் செய்யும் பயிற்சிகள்

1. மொழியியல் நோக்கில் நாட்டுப்புறவியலை எவ்வாறு அணுகுவீர்கள்?
2. நாட்டுப்புறவியலில் இடம்பெற்றள்ள மொழியியல் கூறுகள் பற்றிக் கட்டுரை வரைக.
3. நாட்டுப்புற இலக்கியக் கூறுகள் யாவை? அவற்றின் வகைகளில் ஏதேனும் இரண்டினை விளக்குக.
4. மொழியியல் துறைக்குத் தொடர்புடைய இணைத்துறைகள் இரண்டினைப் பற்றிக் கட்டுரை வரைக.

5. நாட்டுப்புறவியல் துறைக்கு மொழியியலின் பங்களிப்பு பற்றிக் கட்டுரை வரைக.

## 13.8. மேலும் பயில்வதற்கான நூல்கள்



1. சற்குணவதி, தமிழக நாட்டுப்புறவியல், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2004.

# கூறு 14. எதுகை-மோனை-இயைபு-கற்பனை-அணிகள்-உணர்ச்சி-கருத்தமைப்பு

## 14.1. முன்னுரை

செய்யுளுக்கு அழகு சேர்ப்பது யாப்பும் அணியுமாகும். ஒவ்வொரு அடிதொறும் அடிக்குள்ளும் அமையக் கூடிய சிறப்பினை எதுகை, மோனை, இயைபு போன்ற யாப்பு உறுப்புகள் வெளிப்படுத்துகின்றன. இவ்வுறுப்புகள் செய்யுளில் இருப்பதால்தான் எளிதாக மனனம் செய்யவும், அவற்றை நினைவில் கொள்ளவும் இயல்கிறது. இத்தன்மை செவ்விலக்கியங்களில் மட்டும் அல்ல, நாட்டுப்புறப் பாடல்களில் காணப்படக் கூடிய ஒன்று. இதனைப் பற்றி விளங்குவதாகவே இப்பகுதி அமைந்துள்ளது.

## 14.2. குறிக்கோள்கள்

- நாட்டுப்புறப் பாடல்களில் எதுகை, மோனை, இயைபு அமைந்திருக்கும் தன்மை பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- நாட்டுப்புறப் பாடல்களில் உணர்ச்சியும் கற்பனையும் கருத்தாழமும் அமைந்துள்ளது பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- அணிகள் நாட்டுப்புற இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளது பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.

## 14.3. எதுகை

ஒரு பாடல் அல்லது செய்யுளின் சீர்களிலோ அல்லது அடிகளிலோ இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது எதுகை ஆகும்.

இவ்வெதுகை அடி எதுகை, சீர் எதுகை என இரண்டு வகைப்படும். இவ்வாறு எதுகை அமைந்த பாடல் வரிகள் நாட்டுப்புறப் பாடல்களில் காணப்படுவதை இங்குக் காண்போம்.

அடி எதுகை என்பது, அடிதோறும் இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது ஆகும். எ.கா.

*"இலைவாழை தண்டுகளா ஏலேலம்மா ஏலோ*
*காலையில வந்தவங்க ஏலேலம்மா ஏலோ"*

சீர் எதுகை என்பது, சீர் தோறும் இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது ஆகும். இச்சீர் எதுகை ஏழு வகைப்படும். அவை, இணை எதுகை (1,2), பொழிப்பு எதுகை (1,3), ஒரூஉ எதுகை (1,4), கூழை எதுகை (1,2,3), கீழ்க்கதுவாய் எதுகை(1,2,4,), மேற்கதுவாய் எதுகை (1,3,4), முற்று எதுகை (1,2,3,4) என அமையும்.

ஒரு அடியின் முதல் இரு சீர்களிலும் வருகின்ற எதுகை இணை எதுகை எனப்படு ம். எ.கா.

*"தொட்டிலிலே போட்டபுள்ள ஏலேலம்மா ஏலோ"*

ஒரு அடியின் முதல் மற்றும் மூன்றாம் சீர்களில் வருகின்ற எதுகை பொழிப்பு எனப்படும். எ.கா.

*"சாம வழிநடக்க சம்மதமோ உன்தனுக்கு"*

ஒரு அடியின் முதல் மற்றும் நான்காம் சீர்களில் ஒன்றாக வருகின்ற எதுகை ஒரூஉ எதுகை எனப்படும். எ.கா.

*"சின்ன மச்சான் பெரியமச்சான் எனக்கு"*

ஒரு அடியின் முதல் மூன்று சீர்களிலும் வருகின்ற எதுகை கூகை எதுகை எனப்படும். எ.கா.

*"கல்யாணமென்று சொல்லி கலந்து பாக்குவைத்தா"*

ஒரு அடியின் முதல், இரண்டு மற்றும் நான்காம் சீர்களில் ஒன்றாக வருகின்ற எதுகை கீழ்க்கதுவாய் எதுகை எனப்படும். எ.டு.

*"காலே வலிக்குதே கட்டிலை வலித்துக்கோ"*

ஒரு அடியின் முதல், மூன்று மற்றும் நான்காம் சீர்களில் ஒன்றாக வருகின்ற எதுகை மேற்கதுவாய் எதுகை எனப்படும். எ.கா.

குறிப்பு

*"அம்மாகுத்து திம்மாங்குத்து குத்துகுத்து பாம்பாட்டிக்குத்து"*

ஒரு அடியின் முதல் நான்கு சீர்களிலும் வருகின்ற எதுகை முற்று எதுகை எனப்படும். எ.கா.

*"ஆனை ஆனை சுனைவரும் ஆனை"*

என்று நாட்டுப்புறப் பாடல்களில் எதுகை அமைந்த பாடல் வரிகளைக் காணலாம்.

## 14.4. மோனை

ஒரு பாடல் அல்லது செய்யுளின் சீர்களிலோ அல்லது அடிகளிலோ முதல் எழுத்து ஒன்றி வருவது மோனை எனப்படும். இம்மோனை அடிமோனை, சீர்மோனை என இரண்டு வகைப்படும். அடிமோனை என்பது, முதலடி முதல் எழுத்தும் இரண்டாம் அடியின் முதல் எழுத்தும் ஒன்றி வருவது ஆகும். எ.கா.

*"உன்னரிவாள் என்னரிவாள் ஏலேலோ அன்னக்கிளி*
*உருக்கிவச்ச கருக்கரிவாள் ஏலேலோ அன்னக்கிளி"*

சீர்மோனை என்பது, சீத்தோறும் முதலெழுத்து ஒன்றி வருவது சீர்மோனை எனப்படும். இச்சீர்மோனை ஏழு வகைப்படும். அவை, இணை மோனை (1,2), பொழிப்பு மோனை (1,3), ஒரூஉ மோனை (1,4), கூழை மோனை (1,2,3), கீழ்க்கதுவாய் மோனை (1,2,4), மேற்கதுவாய் மோனை (1,3,4), முற்று மோனை (1,2,3,4) என அமையும்.

ஒரு அடியின் முதல் இரு சீர்களிலும் வருகின்ற மோனை இணை மோனை எனப்படும். எ.கா.

*"காடுவெட்டி கல்பொறுக்கி ஏலேலம்படி ஏலம்"*

ஒரு அடியின் முதல் மற்றும் மூன்றாம் சீர்களில் வருகின்ற மோனை பொழிப்பு மோனை எனப்படும். எ.கா.

*"குடிக்கப் பாலும் கொப்பளிக்கப் பன்னீரும்"*

ஒரு அடியின் முதல் மற்றும் நான்காம் சீர்களில் ஒன்றாக வருகின்ற மோனை ஒரூஉ மோனை எனப்படும். எ.கா.

*"பிள்ளையார் கோயிலுக்குத் திறப்புமில்லை பூட்டுமில்லை"*

ஒரு அடியில் முதல் மூன்று சீர்களிலும் வருகின்ற மோனை கூழை மோனை எனப்படும். எ.கா.

*"கானக் கரிசலிலே களையெடுக்கும் பெண்மயிலே"*

ஒரு அடியின் முதல் நான்கு சீர்களிலும் வருகின்ற மோனை முற்று மோனை எனப்படும். எ.கா.

*"பொலிவளர பொலிவளர பொலியான பொலிபொலி"*

ஒரு அடியின் முதல், இரண்டு மற்றும் நான்காம் சீர்களில் ஒன்றாக வருகின்ற மோனை கீழ்க்கதுவாய் மோனை எனப்படும். எ.கா.

*"ஊருல உள்ளசனம் என்னுடைய ஊட்டசுத்தும்"*

ஒரு அடியின் முதல், மூன்று மற்றும் நான்காம் சீர்களில் ஒன்றாக வருகின்ற மோனை மேற்கதுவாய் மோனை எனப்படும். எ.கா.

*"கொல்லர் உலைபோல கொதிக்குதடி கொத்துடம்பு"*

ஒரு அடியின் முதல் நான்கு சீர்களிலும் வருகின்ற மோனை முற்று மோனை எனப்படும். எ.கா.

*"கண்ணே! கண்மணியே! கற்பகமே! கண்ணுறங்கு"*

என்று நாட்டுப்புறப் பாடல்களில் மோனை அமைந்த பாடல் வரிகளைக் காணலாம்.

## 14.5. இயைபு

ஒரு பாடல் அல்லது செய்யுளின் சீர்களிலோ அடிகளிலோ அடியிறுதியில் ஓரெழுத்தோ பலவெழுத்துக்களோ ஒன்றிவருவது இயைபு எனப்படும். எ.கா.

*"நந்த வனத்தி லோராண்டு - அவன்*
*நாலாறு மாதமாய் குயவனை வேண்டி,*
*கொண்டு வந்தானொரு தோண்டி - அதைக்*

*கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத் தாண்டி”*

என்ற இப்பாடலில் ‘ண்டி’ என்ற எழுத்துக்கள் அடிதோறும் ஒன்றி வருவதைக் காணலாம். அடி இயைபு, சீர் இயைபு என இயைபு இரண்டு வகைப்படும். அடி இயைபு என்பது, அடிதோறும் இறுதி எழுத்து, அசை, சொல் ஆகியவற்றில் ஏதேனும் ஒன்றோ பலவோ ஒன்றிவருவது அடி இயைபு எனப்படும். எ.கா.

குறிப்பு

*“சாய்ந்தாடம்மா சாய்ந்தாடு*
*சாயக்கிளியே சாய்ந்தாடு*
*குத்து விளக்கே சாய்ந்தாடு*
*கோவில் புறாவே சாய்ந்தாடு*
*மயிலே குயிலே சாய்ந்தாடு*
*மாடப் புறாவே சாய்ந்தாடு”*

சீர் இயைபு என்பது, ஓரடியுள் இருக்கும் சீர்களின் இறுதி எழுத்து முதலாயின ஒன்றி இயைய வருமாறு தொடுப்பது சீர் இயைபு எனப்படும். இச்சீர் இயைபு ஏழு வகைப்படும். அவை, இணை இயைபு (1,2), பொழிப்பு இயைபு (1,3), ஒரூஉ இயைப் (1,4), கூழை இயைபு (1,2,3), கீழ்க்கதுவாய் இயைபு (1,2,4), மேற்கதுவாய் இயைபு (1,3,4), முற்று இயைபு (1,2,3,4) என அமையும்.

ஒரு அடியின் முதல் மற்றும் இரண்டாம் சீர்களில் ஈற்றெழுத்து ஒன்றி வருவது இணை இயைபு எனப்படும். எ.கா.

*“சங்கிலி புங்கிலி கதவத் திற”*

ஒரு அடியின் ஒன்றாம் சீரிலும் மூன்றாம் சீரிலும் இறுதி எழுதி ஒன்றி வருவது பொழிப்பு இயைபு எனப்படும். எ.கா.

*“நித்தநித்தம் நெல்லுசோறு நெய்மணக்கும் சாமச்சோறு”*

ஒரு அடியின் ஒன்றாம் நான்காம் சீர்களில் இறுதி எழுத்து ஒன்றி வருவது ஒரூஉ இயைபு எனப்படும். எ.கா.

*“நிழலே இனியதன் அயலது கடலே”*

ஒரு அடியின் ஒன்றாம் இரண்டாம் மூன்றும் சீர்களில் இறுதி எழுத்து ஒன்றி வருவது கூழை இயைபு எனப்படும். எ.கா.

*"பச்சைமலை பவளமலை குடகுமலை யண்ணே"*

ஒரு அடியின் ஒன்றாம் இரண்டாம் நான்காம் சீர்களில் இறுதி எழுத்து ஒன்றி வருவது கீழ்க்கதுவாய் எனப்படும். எ.கா.

*"வில்லே நுதலே வேற்கண் கயலே"*

ஒரு அடியின் ஒன்றாம் மூன்றாம் நான்காம் சீர்களில் இறுதி எழுத்து ஒன்றி வருவது மேற்கதுவாய் எனப்படும். எ.கா.

*"பல்லே தவளம் பாலே சொல்லே"*

ஒரு அடியின் நான்கு சீர்களிலும் ஈற்றெழுத்து ஒன்றி வருவது முற்று இயைபு எனப்படும். எ.கா.

*"புயலே குழலே மயிலே இயலே"*

என்று நாட்டுப்புறப் பாடல்களில் இயைபு அமைந்த பாடல் வரிகளைக் காணலாம்.

குறிப்பு

## முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்

1. எதுகை என்றால் என்ன? அவை யாவை?
2. மோனையின் வகைகள் யாவை?
3. இயைபு எத்தனை வகைப்படும்? அவையாவை?
4. சீர் இயைபு எத்தனை வகைப்படும்? ஒன்றினை எடுத்துக்காட்டுடன் விவரி.

## 14.6. கற்பனை

கவிஞன் படைக்கின்ற-எண்ணுகின்ற-ஆக்குகின்ற கற்பனை உலகம் உள்ளவரை உலவுகின்ற தென்றலாக வீசிக்கொண்டிருக்கும். காரணம் கவிஞன் தான் காணும் பொருளைப் புறநோக்கோடு மட்டுமல்லாமல் அகத்துள்ளும் புகுந்து ஆராய்ந்து பொருளோடேயே ஒன்றிவிடுகின்றான். உணர்ச்சிக்கு ஆளாகி, எண்ணக் கூறுகளில் முகிழ்த்து, அதனை உருவாக்கிப் பின்னர் அதனைக் காண்பாரையும் கற்பாரையும் தன் மனக்கோட்டை வாசலுக்கு அழைத்து அமரச்செய்யும் அமரத் தன்மையுடையது ஆக்குகின்றான். இத்தகு அமரத்தன்மை ஒன்றே - கவிஞனின் எண்ணக் கோவையே கற்பனை ஆகும். இக்கற்பனையின் வகைகள் குறித்து மேலைநாட்டார் பலர் பலவாறாகக் கூறுகின்றனர்.

குறிப்பு

வின்செஸ்டர் என்னும் திறனாய்வாளர் கற்பனையை மூவகையாகப் பிரிக்கின்றார். அவை, படைப்புக் கற்பனை, இயைபுக் கற்பனை, கருத்து விளக்கக் கற்பனை என்பனவாகும். கோல்ரிட்ஜ் என்னும் அறிஞர் கற்பனையைப் பற்றிக் கூறும்போது கற்பனையை இரண்டு வகையாகப் பிரிக்கின்றார். ஒன்று, முதன்மையானது; மற்றொன்று நிலையானது அல்லது சார்பானது என்கின்றார். மனிதனுடைய புலனுணர்ச்சிகள் அனைத்திலும் முதன்மையானதாகவும், உயிர்த்துடிப்பு மிக்க ஆற்றலாகவும் விளங்குவது முதனிலைக் கற்பனை எனலாம். கவிதைக் கலையில் வல்லவராகிய வோர்டஸ்வொர்த் என்பவர் கற்பனையை ஆக்கக் கற்பனை, நினைவுக் கற்பனை என்று இரண்டு வகையாகக் கூறுகிறார். இவையேயன்றி உள்ளதை உள்ளவாறே கூறுகின்ற கற்பனையும் உள்ளம் விழையுமாறு அமைகின்ற கற்பனையும் உண்டு. இவ்வாறான கற்பனைகள் நாட்டுப்புற இலக்கியங்களில் காணமுடிகிறது. குறிப்பாக நாட்டுப்புறக் கற்பனைக் கதையாக உருவான ஒருபாடல்,

*ஆக்காண்டி ஆக்காண்டி*
*எங்கெங்கே முட்டை வைத்தாய்*
*கல்லைப் பிளந்து கடலருகே*
*முட்டை வைத்தேன்.*
*வைத்ததுவோ மூன்று முட்டை*
*பெரித்ததுவோ இரண்டு குஞ்சு*
*மூத்த குஞ்சுக்கிரை தேடி*
*மூனு மலை சுற்றி வந்தேன்.*
*இளைய குஞ்சுக்கிரை தேடி*
*ஏழு மலை சுற்றி வந்தேன்.*
*மாயக் குறவன்*
*வழிமறித்துக் கண்ணி குற்ற*
*காலிரண்டும் பட்டுச்*
*சிறகிரண்டும் மாரடிக்க*
*நான் அழுத கண்ணீரும்*
*என் குஞ்சமுத கண்ணீரும்*
*வாய்க்கால் நிரம்பி*
*வழிப்போக்கர் கால் கழுவ*

*இஞ்சிக்குப் பாய்ஞ்சி*
*இலாமிச்சை வேருன்ற*
*நான் அழுத கண்ணீரும்*
*என் குஞ்சமுத கண்ணீரும்...*

என்றவாறான கற்பனைக் கதையை நாட்டுப்புறக் கதையாகக் காணலாம்.

## 14.7. அணிகள்

அணி என்பது, அழகு என்று பொருள்படும். செய்யுளில் அமைந்து கிடக்கும் சொல்லழகு, பொருளழகு முதலியவற்றை வரையறுத்துக் கூறுவது அணி இலக்கணம். இவ்வணி பல வகைப்படும். அணி இலக்கணம் கூறும் தொன்மையான நூல் தண்டியலங்காரம். இந்நூல் முப்பத்தைந்து வகையான அணிகளைக் கூறுகிறது. இவ்வணிகளில் பல நாட்டுப்புற இலக்கியங்களில் இடம்பெற்றிருக்கின்றன. அவற்றுள் ஒரு சில மட்டும் இங்குக் காணலாம்.

தன்மை நவிற்சி அணி என்பது எவ்வகைப் பொருளையும் அல்லது எச்செயலையும் உண்மையான முறையில் உள்ளபடி உள்ளதாக விளக்கும் சொற்களால் அமைவது ஆகும். இதனை இயல்பு நவிற்சி அணி என்றும் கூறப்படும். உள்ளம் குளிர, நெஞ்சம் குளிர, ரோமம் சிலிர்க்க, விழிநீர் அரும்ப, தன்னை மறந்து நின்றாள் போன்ற சொற்களில் உவமானமோ, அன்றி உவமேயமோ அல்லது மிகைப்படுத்தலோ இல்லாததைக் காணலாம். அதாவது, உள்ளதை உள்ளபடி இயல்பாகக் கூறுவது, மிகைப்படுத்தல் இருக்காது, உதாரணம் இருக்காது, உருவகப்படுத்தல் இருக்காது, சொல்வதில் அணிக்கேயுரிய அழகு காணப்படும். இவ்வாறு அமைந்ததே தன்மை நவிற்சி அணி ஆகும். எ.கா.

*“இருந்து முகந் திருத்தி*
*ஈரோடு பேன் வாங்கி*
*விருந்து வந்ததென்று விளம்ப*
*வருந்தி ஆடினாள் பாடினாள்*

*ஆடிப் பழமுறத்தால்*
*சாடினாள் ஓடோடத்தான்"*

குறிப்பு

என்னும் பாடல் வரிகளில் உருவக அணியோ அன்றி உவமை அணியோ இல்லாததைக் காணலாம்.

உவமையணி என்பது, கூறக் கருதிய பொருளை நன்கு தெரிந்த ஒன்றைக் காட்டி விளக்குவது. ஒரு பொருளை இன்னொரு பொருளுடன் ஒப்பிட்டு அழகு படுத்திக் கூறுவது. தெரியாத பொருளைக் காட்ட தெரிந்த பொருளைச் சொல்லி விளக்குவது. சொல்ல எடுத்துக்கொண்ட பொருளை வேறுவொரு பொருளுடனோ அல்லது பல பொருளுடனோ அப்பொருளின் பண்பு, தொழில், பயன் என்பவற்றைக் காரணமாகக் கொண்டு இயைபு படுத்தி இரு பொருள்களுக்கும் இடையே உள்ள ஒப்புமை புலப்படும்படி பாடுவது உவமையணி ஆகும்.

"ஈச்சங் குருத்துப் போல
இலை வாழைத் தண்டு போல
வாழைக் குருத்துப் போல
கொல்லர் உலையைப் போல"

"சேரலாமாடி நாம குறத்தி
சேந்த ரெண்டு காளைப்போல
விட்டு நல்லா பிரிஞ்சமடி குறத்தி
வெச்ச வக் காளைப் போல"

என்ற நாட்டுப் பாடல்கள் உவமையணியால் அமைந்திருக்கக் காணலாம்.

## 14.8. உணர்ச்சி

மெய்யில் என்னும் உடலில் படுவது மெய்ப்பாடு. அதாவது உள்ளத்து உணர்ச்சிகள் உடலில் தென்படுவது மெய்ப்பாடு என்பர். மெய்ப்பாடு குறித்து தொல்காப்பியர் பொருளதிகார ஒன்பது இயல்களில் ஒன்றாக வைத்திருக்கின்றார். தொல்காப்பியர்,

*நகையே அழுகை இளிவரல் மருட்கை*
*அச்சம் பெருமிதம் வெகுளி உவகை என்று*
*அப்பால் எட்டே மெய்யாடு என்ப*

என்று எட்டு வகையான மெய்ப்பாடுகள் பற்றித் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார். இம்மெய்பாடுகள் ஒவ்வொன்றும் நான்கு வகைகளாகப் பகுத்து முப்பத்திரண்டு மெய்ப்பாடுகளைக் காட்டுகின்றனர். மனித உணர்வுகளின் அடிப்படையான இம்மெய்ப்பாட்டுகள் நாட்டுப்புற மக்களிடம் மிகவே காணப்படுகின்றன.

நாட்டுப்புறக் கதைப்பாடல் ஒன்றில் குழந்தையில்லாத ஒருத்தி உணர்ச்சிப் பொங்க தன்னுடைய நிலையை எண்ணிப் புலம்புகின்றாள்.

*ஓடாத தேரானேன் ஊமைகண்ட கினாவானேன்*
*ஆடாத செக்கானே அரையாத அம்மியானேன்*
*ஓசையத்த முரசானேன் உடைந்தகுளங் கரையானேன்*
*வாசமில்லா பூவானேன் மதிலில்லா வீடானேன்*
*மூச்சிழந்த பேர்களைப்போல் மொழிபேச மாட்டாமல்*

*பூச்சியமெல்லாங் குலைந்து போகுதடி தோழியரே!*

என்று தன்னுடைய ஏக்கத்தைத் தோழியரிடம் வெளிப்படுத்துகின்றாள். மேலும்,

*ஓடாத தேரானேன் ஊமைகண்ட கினாவானேன்*
*ஆடாத செக்கானேன் அரையாத அம்மியானேன்*
*ஓசையத்த முரசானேன் உடைந்தகுளங் கரையானேன்*
*வாசமில்லா பூவானேன் மதிவிழந்த வீடானேன்.*

*ஆனைக்கால்பட்ட தேரையானேன் ஆத்தில்கரைக்கின்ற புளியானேன்*
*வானில்சிறகத்த பறவையானேன் மாதாவில்லாத பிள்ளையானேன்*
*வருந்தியெழுகின்ற குரலோசை மதுரங்கிளிகளே கேளீர்களோ*
*திருந்தவொருத்தி நான்பெண்பிறந்து தேசமெல்லாங் காணவந்தேன்*
*சாலைமரங்களே! கருங்குயிலே! தனித்தங்கிருப்பேனோ தனிவழியே*

*வாலைபேடைக என்னங்களே!*
*மலடி முகத்திலே முழிக்கொண் ணாதோ*
*வள்ளக்கமலத்தின் அன்னங்களே! வானாள் மருகுதே கேளீர்களே*

*பிள்ளைக்கிரைதேடும் குருவிகளே!*
*பிழைக்கும்படிக் கொருபுத்தி சொல்வாய்*



என்று பிள்ளையில்லாத நிலை சாலையோரம் உள்ள மரங்களிடமும் அம்மரங்களில் அமர்ந்திருக்கும் பறவை மற்றும் ஏனைய உயிரினங்களிடமும் புலம்பும் அவளின் உணர்ச்சி நிலையினைக் காணலாம்.

## 14.9. கருத்தமைப்பு

நாட்டுப்புற இலக்கியங்கள் பெரும்பாலும் பொழுதுபோக்குக்காக இருக்கிறது என்றாலும், அவற்றில் ஏராளமான கருத்தாக்கங்கள் குவிந்து கிடக்கின்றன. குழந்தைக்குப் பாலூட்டும் போதும், அதே குழந்தைக்குத் தாலாட்டும் போதும், கணவன் இழந்த பின் மனைவி ஒப்பாரி வைக்கும் போதும் எனப் பல நிலைகளில் எழுகின்ற நாட்டுப்புற இலக்கியங்களில் கருத்தோட்டம் அமைந்து கேட்போர்க்குப் புரிதல் திறனை வளர்ப்பதற்கேற்ப அமைந்திருக்கும்.

நாட்டுப்புறப் பாடலானாலும் நாட்டுப்புறக் கதையானாலும் நாட்டுப்புறக் கதைப்பாடலானாலும் நாட்டுப்புறக் கலைகளானாலும் அவற்றில் நாட்டுப்புற மக்களின் உள்ளக்கிடக்கை வெளிப்படும். இவ்வுள்ளக் கிடக்கையே நாட்டுப்புற மக்களின் கருத்தாக வெளிப்படும். ஒரு கதைப்பாடலில் ஒருத்தி தாய்மை எய்துகின்றாள். அத்தாய்மை எய்தியது தொடங்கி ஒவ்வொரு மாதமும் அவளின் கருவின் வளர்சியையும் அவளின் நிலையையும் எடுத்துரைக்கும் விதமாக,

*ஒன்றான மாதத்திலே யுதிரம்வந்து திரண்டதுவே*
*மாதமு ரெண்டானபோது வலுப்பெற்றாள் திருத்தேவி*

*மூன்றான மாதத்திலே முத்துப்போல் உருவாக*
*நாலான மாதத்திலே நல்லாலம் பழம்போல*
*அஞ்சான மாதத்திலே அடிவயறு பூரணமாய்*
*ஆறான மாதத்திலே அயல்வீடுதான் மறந்தாள்*
*யேழான மாத்தையிலே யெழுந்திருக்க கூடாது*

*யெட்டான மாத்தையிலே கொட்டாவி கொள்ளுதென்பாள்*

*அன்னமோ இரங்குதில்லை அரிந்தரிந்து நோகுதென்பாள்*
*தென்னமெத்த நாச்சியார் திருவயறு நோகுதென்பாள்*
*வாள்விட்ட புதுஓடு மண்கட்டி வுணவாச்சே*

குறிப்பு

என்ற பாடல் வரிகளில் ஒரு பெண் கருத்தரித்து அவள் படும் அவஸ்தைகளையும், ஒவ்வொரு மாதக் கரு வளர்ச்சியையும் எடுத்துக்காட்டும் நிலையினைக் காணலாம்.

**முன்னேற்றத்தைச் சோதித்தறியும் வினாக்கள்**

5. கற்பனையின் வகைகள் யாவை?
6. அணி என்றால் என்ன?
7. தொல்காப்பியம் சுட்டும் மெய்யாடு யாது?
8. நாட்டுப்புற இலக்கியத்தில் கருத்தமைப்பு எவ்வாறு அமைந்திருக்கும்?

## 14.10. தொகுத்துக் காண்போம்

- பழந்தமிழ் இலக்கண நூல்கள் குறிப்பிடும் எதுகை, மோனை, இயைபு குறித்தும் இவ்வகைகள் நாட்டுப்புறப் பாடல்களில் அமைந்திருக்கும் நிலைகள் குறித்தும் தெரிந்து கொண்டீர்கள்.
- நாட்டுப்புறப் பாடல்களில் அணிகள், கற்பனை, கருத்தமைப்பு மற்றும் உணர்ச்சி ஆகியன இடம்பெற்றமை குறித்துத் தெரிந்து கொண்டீர்கள்.
-

## 14.11. முன்னேற்றத்தைச் சோதிக்கும் வினாக்களுக்கான விடைகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | 14.3. | 2. | 14.4. |
| 3. | 14.5. | 4. | 14.5. |
| 5. | 14.6. | 6. | 14.7. |
| 7. | 14.8. | 8. | 14.9. |

## 14.12. பாடம் பயின்றபின் செய்யும் பயிற்சிகள்

1. நாட்டுப்புறப் பாடல்களில் எதுகையும் அவற்றின் உறுப்புக்களும் அமைந்த விதம் குறித்துக் கட்டுரை வரைக.

2. நாட்டுப்புற இலக்கியங்களில் மோனையும் இயைபும் அமைந்திருக்கும் பாங்கு குறித்துக் கட்டுரை வரைக.

3. நாட்டுப்புற இலக்கியங்களில் உணர்ச்சியும் அணியும் இடம்பெற்றிருக்கும் நிலையை எடுத்துக்காட்டுடன் விளக்குக.



## 14.13. மேலும் பயில்வதற்கான நூல்கள்


1. மோ.கோ. கோவைமணி, நாச்சியாரம்மன் கதை ஆய்வும் பதிப்பும், திட்ட ஆய்வேடு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2018.


**அழகப்பா பல்கலைக்கழகம்**

**தொலைநிலைக்கல்வி இயக்ககம்**

**பி.லிட்., தமிழ் - 10743 - நாட்டுப்புறவியல்**

## இரண்டாமாண்டு – நான்காம் பருவம்
## மாதிரி வினாத்தாள்

I. **அனைத்து வினாக்களுக்கும் விடையளிக்கவும்** (10x2=20)

1. நாட்டுப்புறவியல் என்றால் என்ன?
2. முதன் முதலில் தமிழக நாட்டுப்பாடல்களைத் தொகுத்த ஆங்கிலேயர் யார்?
3. அப்பர் பாடிய நாட்டுப்புற இலக்கியம் வடிவம் எது?
4. நாட்டுப்புறப் பாடல்களில் சோகப் பாடல் எது?
5. நல்லதங்காள் பிறந்த ஊர் எது?
6. முத்துப்பட்டனின் மனைவியர் பெயர் என்ன?
7. பொம்மலாட்டத்தின் வகைகள் யாவை?
8. நம்பிக்கையின் வகைகள் யாவை?
9. முதுகுநீர் குத்தல் என்றால் என்ன?
10. சமூக மொழியியல் என்றால் என்ன?

II. **ஏனையேனும் ஐந்தினுக்கு விடையளிக்கவும்.** (5x5=25)

11. (அ) ‘பிசி’ - சிறு குறிப்பு வரைக.

(அல்லது)

(ஆ)‘காப்பியங்களில் இடம்பெற்றுள்ள நாட்டுப்புற இலக்கிய வகைகள் பற்றிக் கட்டுரை வரைக.

குறிப்பு

12. (அ) விடுகதைகள் வகைப்பாடுகளை எடுத்துக்காட்டுகளுடன் விளக்குக.

(அல்லது)

(ஆ)‘முத்துப்பட்டன் கதை உணர்த்தும் சமூக மாற்றத்தை விளக்குக.

13. (அ) கோலாட்ட அமைப்பு பற்றி விவரி.

(அல்லது)

(ஆ)‘குதிரைக்கூடு தயாரிக்கும் விதங்களைக் கூறுக.

14. (அ) தெய்வ நம்பிக்கையால் எழுந்த சமூக மாற்றம் குறித்து விவரி?

(அல்லது)

(ஆ)‘ நாட்டுப்புற இலக்கியங்களில் மோனை அமைந்திருக்கும் பாங்கு குறித்துக் கட்டுரை வரைக.

15. (அ) சிறுவர்-சிறுமியர் விளையாட்டுக்கள் எவையேனும் நான்கினைப் பற்றிக் குறிப்பு வரைக.

(அல்லது)

(ஆ) நாட்டுப்புற இலக்கியங்களில் உணர்ச்சியும் அணியும் இடம்பெற்றிருக்கும் நிலையை எடுத்துக்காட்டுடன் விளக்குக.

III. **எவையேனும் மூன்றினுக்கு விடையளிக்கவும்.** (3x10=30)

**16.** தொல்காப்பியத்தில் நாட்டுப்புற இலக்கியக் கூறுகள் பற்றி எடுத்துக்காட்டுகளுடன் விளக்குக.

17. சங்க இலக்கியத்தில் நாட்டுப்புற இலக்கிய வகைமைகள் இடம்பெற்றுள்ளமை பற்றிக் கட்டுரை வரைக.

18. தமிழக நாட்டுப்புறவியல் வகைகளில் ஏதேனும் இரண்டினை விவரிக்கவும்.

19. அண்ணன்-தங்கை பாசப் பினைப்பால் ஏற்பட்ட சோகக்கதை உணர்த்தும் உண்மைகளை விவரி.

20. கரக வகைகள் பற்றியும் அவற்றைத் தயாரிக்கும் முறைகள் பற்றியும்

கட்டுரை வரைக.